# பிரபு லிங்க லீலை
# வசனம்

"கற்பனைக் களஞ்சியம்" எனப் புகழ்பெற்ற துறைமங்கலம் சிவப்பிரகாசரின் சிறப்பு மிகு தத்துவக் காப்பியம் ஆன பிரபு லிங்க லீலையின 1158 பாககளுக்கும் தெளிந்த உரைநடை வடிவம்.

தேவையான குறிப்புகள் விளக்கங்களுடன்

டாக்டர் இரா. இராசகோபாலன்

பிரபு லிங்க லீலை வசனம்

முதற் பதிப்பு : சனவரி 1990

டாக்டர் இரா. இராசகோபாலன்
அண்ணா நகர், மதுரைச் சாலை
திருப்புத்தூர் [பசும்பொன்] 623 211

திருப்பதி பிரிண்டர்ஸ்
19-கூடல் அழகர் பெருமாள் கோயில் தெரு
மதுரை-1 தொ. பே 33989

PRABHU LINGA LEELAI VACHANAM [TAMIL]

verse by verse prose rendering of PRABHU LINGA LEELAI, a religious, allegorical and historical epic by Turaimangalam Sivaprakasa Swamigal.

**R. RAJAGOPALAN** Ph.D.
Anna nagar, Madurai road
TIRUPPATTUR(P.T.T) 623 211

**Thirupathi Printers**
19-Koodal Alagar Perumal koil St
Madurai-1. Ph : 33989

1000 Copies
Pages viii+316
**Rs. 42/-**

## நன்றி

இந் நூலை வெளியிடப் பொருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவத் தானம், அதன் செயல் அலுவலர் (Executive Officer), ஆசிரியர் (Editor, 'Sapthagiri'), வல்லுநர் குழு ஆகியோர்க்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றி உரியது.

பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களது அன்பாதரவுக்கு நன்றி உடையோம்.

O

This book is published with the Financial Assistance of Tirumali Tirupati Devasthanams under their scheme-Aid to Publish Religious Books.

## படையல்

பிரபு லிங்க லீலை ஆசிரியரின் பெயரே தம் இயற்பெயராகப் பெற்றவர், நன்கு கற்றவர், அன்பு மிக்கவர், இளம் பருவத்தே எங்களை விட்டுப் பிரிந்தவர், ஆசிரியர், அண்ணாச்சி, மகராசபுரம் (வத்திராயிருப்பு)

ரா. சிவப் பிரகாசம் பிள்ளை அவர்கட்கு

## பயன் பட்ட நூல்கள்

1. பிரபு லிங்க லீலை.
சரவணப் பெருமாளையர், கந்தசுவாமியையர், ஈசூர் சச்சிதானந்தம் பிள்ளை உரை.

2. பிரபு லிங்க லீலை
சு. அ. இராம சாமிப் புலவர் குறிப்புரை, கழகம் 1954.

3. பிரபு லிங்க லீலை ஆராய்ச்சி
வித்துவான் வீ. குமாரசாமி ஐயர், கழகம் 1958.

## பிரபு லிங்க லீலை

சுவை மலிந்த இந்நூல், வரலாற்றுப் பின்னணியில் அமைந்த சமய தத்துவ உருவகக் காப்பியம் ஆகும்.

நல்ல நூலுக்கும் நல்ல நட்புக்கும் வள்ளுவர் சொன்ன இலக்கணமான 'நவில் தொறும் நூல்நயம் போலும் பயில் தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்பதற்கு இந் நூல் பொருத்தமான சான்று ஆக உள்ளது.

மெய்யறிவாளர் ஒருவரின் மேன்மையை விளக்குவது இக் காப்பியத்தின் உரிப்பொருள்.

காப்பியத் தலைவர் எனப்படுவோர் தன்னேரில்லாத் தலைவராக இருப்பர். தன்னை வென்ற தனிப்பெரும் தலைவரான அல்லமர் இதன் தலைவர். ஊருணி நீர் நிறைந்தால் அதனை அடைந்த அனைவரும் பயன் பெறுவர். அங்ஙனம் தன்னை அடைந்தார்க்கு உதவுவதோடு, தானே சென்று அன்பர் பலர்க்கும் உயிர் தளிர்க்க உதவும் தென்றலாக இயங்கி அவர்களையும் தன்னேரில்லாத் தலைவர்களாக உயர்த்தும் பேரருட் செல்வராக விளங்குகிறார் அவர்.

'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற் பயனே' என்பது இந்திய நூன் மரபு அனைத்துக்கும் பொதுவான இலட்சிய விதி. காப்பிய நலங்கள் யாவும் நிறைவுறப் பெற்ற பிரபு லிங்க லீலை அறமும் வீடும் நூற்பயனாகக் கொண்டுள்ளது. இன்பமும் பொருளும் மெய்ப் பொருளின்பம் நோக்கியன வாக, மொத்தத்தில் இலக்கிய இன்பச் சுரங்கமாகச் செறிவு பெற்றுள்ளன.

வேதம் ஆகமம் என்ற இரண்டையும் இந் நூல் ஏற்றுப் போற்றுகின்றது. வீர சைவ நூலாயினும் சைவத்தையும் கொண்டாடும் மன விரிவு பெற்றுள்ளது. வைணவத்தையும் அணைத்துச் செல்கிறது.

கருமநெறி, பக்தி என்பன மனம் தூய்மை பெறக் கருவிகள். அவை முடிவுகள் ஆகா. ஞானம் ஒன்றே மெய்ப் பொருளை, 'சீவான்ம ஐக்கியத்தை' 'அங்க லிங்க ஐக்கியத்தை' அடைவிக்கும் என்பது இந் நூலின் அறிவார்ந்த முடிவு.

தமிழில் மட்டுமல்லாது கன்னடம் தெலுங்கு மராத்தி முதலிய மொழிகளிலும் பிரபு லிங்க லீலை இருக்கிறது.

காலத்தின் தேவையால் வடமொழியினின்று இராம காதையை வாங்கிக் கம்பர் அதற்கு வானுயர் தோற்றம் தந்தது போல் சிவப்பிரகாசர் கன்னடத்தினின்று அல்லமர் சரிதையை வாங்கி அதற்குத் தமிழில் கவின்மிகும் அரியணை அமைத்து ஏற்றம் அளித்துள்ளார்.

பிரபு லிங்க லீலை என்ற பெயரும் கதி என்ற உட்பிரிவும் சாமரசரின் முதனூலில் இருப்பன போன்றே சிவப்பிரகாசரின் நூலிலும் உள்ளன.

கன்னட நாட்டில் சமய மறுமலர்ச்சி உண்டாக்கிய அல்லமப் பிரபு, வசவண்ணர், அக்க மாதேவி ஆகியோருடன் சித்த ராமர், கோரக்கர் போன்ற வரலாற்றுப் பெருமக்கள் இந் நூலகத்துக் கதை மாந்தராக இடம் பெற்றுள்ளனர்.

மாயை (தமோ குணம்) விமலை ('இரசோ குணம்') முதலிய வளமிக்க உருவக மாந்தரும் சிறப்பிடம் பெற்றுள்ளனர்.

இக் காப்பியத்தைத் தமிழிற் புனைந்த சிவப்பிரகாசரைக் 'கற்பனைக் களஞ்சியம்' எனவும், 'கவிதா சார்வ பௌமர்' எனவும் புலவர்கள் போற்றுவது சாலப் பொருத்தம் என்பதனை இதிலுள்ள ஒவ்வொரு பகுதியும் சான்று பகர்ந்து திகழ்கின்றது.

மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற பெரும் புலமைக் கவி மன்னர்களே இதில் சொக்கிக் 'கிறுகிறுத்துப்' போனார்கள் என்றால் அதற்கு மேலும் சான்று கூறுவது வேண்டற்பாலதன்று.

கற்பனைக் களஞ்சியம் மட்டுமல்லாது இந் நூல் திருக்குறள் முதலிய அறநூற் செய்திகள், பழமொழிகள், தத்துவம், யோக நூல், தருக்கம், சோதிடம், அணி நூல், இலக்கணம் என்பவற்றின் கவின் பெருங் காட்சியாக, ஒரு நுண் நிலைக் கலைக் களஞ்சியமாகவும் திகழ்கின்றது.

சீவக சிந்தாமணி ஆண்மை மிடுக்கு உடையது எனவும், கம்ப ராமாயணம் பெண்மை நளினம் சான்றது எனவும் அறிஞர் ஒருவர் எழுதினார். பிரபு லிங்க லீலையோ வீறு மிக்கதாக, வையத்தை 'ஓடுங் கைப் பந்தென' உருட்டி விளையாடுவதான மெய்யுணர்வு சான்றதாக உள்ளது.

சுருங்கக் கூறின், தென்னாட்டு நாகரிக - பண்பாட்டுப் பின் புலத்தில் சமய மறுமலர்ச்சி உணர்ச்சி இழைய வேத ஆகம அடிப்படையில் செந்தமிழ்ச் சிறப்பெல்லாம் செம்மாந்து பொலிய வரலாறு உருவகம் கற்பனை கலந்த காப்பியமாகப் பீடுடைய பிரபு லிங்க லீலை சுவை கொழித்து மிளிர்கின்றது.

## வசனம்

இத் தகைய பேரிலக்கியத்தின் பா அனைத்திற்கும் நிரலே முதன் முதலில் இனிய கருத்தோவியம் தருகிறது இந்தச் சுவடி.

கதைச் சுருக்கமாக வந்த வசனநூல் ஒன்றிரண்டு இருக்கலாம். அவை கிடைக்கப் பெறவில்லை. சங்கரதாச சுவாமிகள் நாடகமாக்கி நடித்து வந்த சுவடியும் கிடைக்கப் பெறவில்லை. பழைய உரையும் கிடைத்தல் அரிதாக உள்ளது. இந்நிலையில் இவ் வசன நூல் தமிழும் தத்துவமும் விழைவார்க்கு நல்லதோர் விருந்தாக அமையும். அடியார்கள், ஆர்வலர்களுக்கு மட்டுமல்லாது ஆய்வாளர்கட்கும் பெரிதும் இது பயன்படும்.

இவ் வசன நூல் தந்தவர் வீர சைவர் அல்லர். சமயத் துறை சார்ந்தவரும் அல்லர். ஆகவே முன்னோர் மொழிந்த கருத்துக்களை எளிதாக்கிக் கூறியதோடு மேற்கோளாக அத்வைதச் சார்பிலிருந்து பேசவேண்டிய நிலை ஏற்பட்டது ஏனெனில் சைவ-வீர சைவ - வைணவச் சமய வாணர்கள் தம் கோட்பாட்டை மக்களிடை விளங்க வைக்கும் தங்கள் பணியை மேற்கொள்ளவில்லை. அவர்கள் தாங்கள் அறிந்துள்ளார்களா என்பதும் ஐயப்பாடாக உள்ளது. இந்நிலையில் இராமகிருஷ்ண மடம், இராமகிருஷ்ண தபோவனம், இராமணாசிரமம் ஆகியன தமிழில் பொதுநிலை உணர்வோடு சமயக் கருத்துக்களைத் தந்து தெளிவுசெய்தன. அவை யில்லா விட்டால் தமிழகத்தில் சமய உணர்வு அற்றுப் போயிருக்கும். பணமும் அதிகாரமும் சுகபோகமும் பெரிதென அவற்றுக்காக மற்றையவற்றைத் துறக்கும் போலித்துறவோரும் மடாதிபதிகளும் அறிவாளிகளும் தம்மால் முடிந்த அளவுக்குச் சமயத் துறையை அழித்து வருகையில் இராமகிருஷ்ண இரமண இயக்கத்தாரை இவ்விடத்தில் போற்றாமல் இருக்க முடியவில்லை.

எழுதி வைத்திருந்த இந்த உரைநடைச் சுவடி பல காலம் அறையில் இருந்ததனை அம்பலத்திற்குக் கொண்டு வந்து வீதி உலாச்செய்ய வழி வழங்கிய திருமலை திருப்பதி தேவத்தானத்துக்கு எவ்வளவு நன்றி கூறினும் போதாது.

# பிரபு லிங்க லீலை

# பிரபு லிங்க லீலை வசனம்

## நூற்பெயர்

ⓘ பிரபு என்பது எல்லாமாகவும் அல்லவுமாகவும் இருக்கும் தன்மையாகும். லிங்கம் என்பது ஆன்மா. லீலை என்பது திருவிளையாடல். ஆகப், பிரபு லிங்க லீலை என்பது ஆன்மாவின் திருவிளையாடலை உணர்த்தும் நூல் எனப் பொருள்படும்.

அத்துடன் ''அல்லமன் அமல் லீலை'' என்று இக்காப்பிய ஆசிரியர் குறிப்பதும் அல்லமரைப் பிரபு என்று குறிப்பதும் அல்லமப் பிரபுவின் மாசற்ற திருவிளையாடலைக் குறித்து இந்நூல் எழுந்துள்ளது என்பதையும் அறியலாம்.

# கடவுள் வாழ்த்து

நெடிய கடலைக் குடித்த அகத்தியரின் கமண்டலத்து நீரைத், தேவர்கோனாகிய இந்திரனின் தூய்மலர்ப் பூம் பொழில் [சீகாழியில் முன்னாளில்] செழித்து வளருதற் பொருட்டுக், கவிழ்த்த, மதகரியின் தலை அமைந்த பிள்ளையாரின் திருவடிகளை என்றும் தலை அணியாகச் செய்து கொள்ளுவாம்.

O துதி கதியிலும் பிள்ளையார் வாழ்த்து வருகிறது. ஆயினும் காப்பு (காப்பாற்றுக எனல்) ச்செய்யுள் பாடி நூல் தொடங்குதல் மரபு ஆகலின் முதலில் அவ்ரை வணங்கித் தொடங்குகிறார்.

O மழையின்மையால் நறுமலர்ப் பொழில் வாடவே தேவர்கோன் வேண்டவே அதற்கு இரங்கி ஆனைமுகத்து அண்ணல் காக வடிவம் கொண்டு குறுமுனிவரின் கமண்டலத்தைக் கவிழ்த்து விடவே அதிலிருந்து நீர் பெருகிக் காவினைத் தழைய வைத்துக் காவிரியானது என்ற தொல் கதையை உட்கொண்டு கவிஞர் இந்தக் காப்புச் செய்யுள் பாடியுள்ளார்.

O அகத்தியர் போற்றிய தமிழானது ஆறாகப் பெருகிக் கவிஞரின் காப்பியப் பூம்பொழில் தழைந்து பொலிய மூத்த பிள்ளையாரை வேண்டுகிறார் என்பது ஆழ்கருத்து.

# 1. துதி கதி

○ முதல் பத்துப் பாக்கள் கடவுளர்,அடியார் ஆகியோரை வாழ்த்துகின்றன. அதன் பின் பதினோரு பாக்கள் நூல் செய்தவர் அவையடக்கம் நூற்பயன் முதலியவற்றோடு இறைமை உலகு என்பவற்றின் தோற்றத்தைச் சொல்லு கின்றன. ஆயினும் தலைமை பற்றித் துதி கதி என்பது பெயராக இடப்பட்டுள்ளது.

சிவ பெருமான்

1. மலர்கள் பொருந்திய நெடிய மரக்கொம்பின் உச்சியில் தங்கிய பசுந்தேனானது தன்னைப் பெறத் தகுதி உடைய வனுக்கு அல்லாமல் கைகால் முடங்கிக் கண்பார்வையும் இல்லாத ஒருவனது நாவினிடத்தே தானே வந்து ஒழுகி னாற் போல, உலகம் அளந்த திருமாலும் நான்முகனும் 'எம்மைக் காக்க' என வணங்கி நிற்கவும் அவர்கள்பால் செல்லாமல், தானே உவந்து எமது கையகத்து விரும்பி எழுந்தருளியிருக்கும் மேலான மாணிக்கத்தைத் தொழுது பிறவியில் அழுத்தும் வினையைச் 'சென்றகல்க' என்று விடை கொடுப்பாம்.

○ அடியவரின் பக்குவநிலை கண்டு அவர்களைத் தானே சென்று ஆட்கொள்ளுவது இறைவனின் அருள்நிலையாகும். ஆயினும் வீரசைவ நெறியினர், குழந்தை தாயின் வயிற்றி லிருக்கும் பொழுதே தாயின் கழுத்தில் சிவலிங்கம் ஒன்றைக் கட்டிப், பின் குழந்தை பிறந்ததும் அதற்கு அந்த இலிங்கத்தை அணிவது மரபு. உணர்வு பெற்று இறைவனைப் போற்ற முன்வரும் ஏனையர் போலன்றித் தாம் உணர்வு எய்து வதற்கு முன்னமே இலிங்க தாரணத்தின் வாயிலாக இறைவன் அவர்களிடம் வந்துறுதலின் 'தானே உவந்து எம்

கர தலத்தில் மேவா அமர்ந்த மாமணி' என்றார்.
O முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல என்பது உலக வழக்கு.

O இல்பொருள் உவமையணி

உமையவள்

2. தன்னிடத்து உண்டாகிய ஊடலைத் தணித்தற் பொருட்டு இறைவன் தன் பாதங்களில் இறைஞ்ச அதற்காகவும், தன் நெற்றிக்கும் நிதம்பத்துக்கும் (ஒப்பாக இருத்தலின்) பகையாக உள்ள குளிர்ந்த திங்களும் அணியாகத் தங்கிய அரவும் பணிந்து விழும் அதற்காகவும், மகிழாமல் தன் மாற்றாளாகிய அலைமாது (கங்கை) விழுந்து வணங்குகிற செயலுக்காக உள்ளம் மகிழ்கின்ற உமையவளை வணங்குவோம்.

O ஞான சக்தியை வணங்கப் புகுந்த கவிஞர் இலக்கியப் புராண வழக்கிற்கு ஒப்பக் கற்பனை கலந்து அணிபெறக் கூறுகிறார்.

O எளிதின் முடிபணி, நிரனிறை யணி, இன்ப அணி, சுவையணி முதலியன கலந்து இதில் வருதலின் கலவை யணியாம்.

ஆனைமுகப் பெருமான்

3. மன்மதன் எடுத்து வளைக்கும் ஒப்பற்ற வில்லாகிய கரும்பை ஒடித்து, அவ் வில்லினால் எய்யப்படும் அம்புகளாகிய மலர்களைச் சிதறி, அவ் வில்லுக்கு நாணியாகப் பொருந்திய வண்டு வரிசையாகிய கூட்டத்தைக் கலைந்து போகத் துரத்தி, விருப்பமுற ஓடி, இருவினை ஒப்பினராகிய வீர மனத்துச் சிவ சரணரின் கருத்தின்படி சென்று, விளையாடும், குளிர்ச்சி பொருந்திய பிறையைத் தாங்கிய சடையையும் களிப்பையும் உடைய நல்ல யானையின்து இணையாகிய திருவடிகளைப் போற்றுவோம்.

O தின்னுதற் பொருட்டுக் கரும்பை ஒடித்தல், மலர்களைக் காணின் விளையாட்டாக வாரிச் சிதறுதல்; மத நீரில் மொய்க்க வரும் வண்டுகளைத் துரத்துதல், பாகரின்

குறிப்பின் வழிச்செல்லுதல் என்பன யானைகளின் இனப் பண்பு. அதற்கு இயைய யானைமுகக் கடவுளின் செயல் களும் கூறப்பட்டன.

O தன் வயத்தனாய் நின்று அங்ஙனம் செய்தலானும் விளையாட்டுப் போல் எளிதாகச் செய்தலானும் விளையாடும் என்றார்.

O இருவினை ஒப்பாவது, நல்வினை தீவினைகளின் பயனாக ஆக்கமும் கேடும் வந்த காலங்களில் கருத்து வேறு படாது இருப்பது.

O காம வேட்கைக்கு உட்படாத கடவுள், தம் அடியவர்க் கும் காம கலக்கம் உண்டாகாவாறு காப்பர் என்பது கருத்து.

மயில் வாகனப் பெருமான்

4. தனது பாதி உடம்பில் மலைமகள் நிலைத்திருக்கப் பெற்ற பரமன் அணிகலன் போலத் தாங்கியுள்ள மணியு டைய பாம்பு, நகைப்பது போல இருக்கும் வெள்ளிய தலையின் (மண்டை ஓட்டின்) துளையில் நுழைந்து உடல் சுருண்டு கிடந்து, பிறகு வெளியே போதற்குத் தலையை நீட்டிப்பார்த்து (தன் பகையாகிய மயில் வந்திருப்பதைக் கண்டு) உடனே உள்ளே இழுத்துக்கொள்ள, அந்தப் பரமனிடத்துச் செல்லும் ஒரு தோகை மயில் வாகனப் பெரு மாளாகிய முருகக் கடவுளின் துணைத் தாள் மலர்களைத் தொழுதிடுவோம்.

O பாம்பின் பொது இயல்பு கூறலின், தன்மை நவிற்சியணி.

O இளைய பிள்ளையார் என்பதால் ஊர்தியோடு இறை வனிடம் செல்லுதல் இயைந்தது.

அல்லம தேவர்

5. அறுபத்து நான்காகிய கலைகளையும் உணரும் புலவர்களையும், சித்தர்களின் தொகுதியையும், தேவர்களை யும், தத்துவ நிலைகளை ஆராயும் முனிவர்களையும், நான்முகனையும், கல்லை மிதித்துப் பெண் (அகலிகை) ஆக எழுப்பிய திருமாலையும் விழுங்கிப் பின் உமிழ்தல் செய்யாத

வலிமையை உடைய மாயையின் தலையை மிதித்து நிற்கும் அல்லம தேவனது செந்தாமரை மலர்ப் பாதங்களை நம் தலைக்கு அணியாகச் சூடுவோம்.

○ உடல் கருவி உலகம் நுகர்ச்சிகள் என்று பரந்து புலவர் முதல் திருமால் வரை கூறப்பட்ட எல்லாரையும் உள்ளடக்கிப் பின் விடாது நிற்றலின் விழுங்கி உமிழாத் திறல் மாயை என்றார். அல்லமர் மாயையை வென்றவர் ஆகலின் மாயை தலையை மிதிக்கும் அல்லமன் என்றார்.

வசவேசர்

6. பொய்யாக அடியவர் கோலம் புனைந்து கொண்டு வந்திருந்த கள்வர் எல்லாரும் மாசற்ற நெஞ்சத்துடன் உண்மையாகவே இறையடியார் ஆகுமாறு தன் திருவுள்ளத் தால் நினைத்தருளிய அருள் வள்ளல் ஆகிய வசவேசனது தாமரை போலும் திருவடிகளை, யாங்கள், கங்கையைச் சடையில் தாங்கிய இறைவனுக்குச் செய்யும் (பொய் மருவிய) அடிமையையும் மெய்யடிமை ஆகுதற் பொருட்டுத் தலையால் வணங்குவோம்.

○ கள்வர் சிலர் கத்தரிக்காயினைத் துணியால் மூடி இட்ட லிங்கம் எனக் கட்டிக் கொண்டு சிவ சரணர் போல் வேடம் பூண்டு வசவேசரின் திருமடத்தில் உணவு கொள்ள வும் பொருள்களைக் களவு செய்யவும் வந்து அடியார் கூட்டத்திடை அமர்ந்தனர். பந்தி வழிபாடு செய்யும் பொழுது அவர்களது பொய்ம்மை நிலை வெளிப்பட்டது. இருப்பினும் வசவேசர் அருட்பார்வை செலுத்தி அவர்களை உண்மையி லேயே அடியார்களாக்கினார். அவர்கள் கட்டியிருந்த காய்கள் இட்ட லிங்கமாகவே ஆயின. இந்த வரலாற்றை உட்கொண்டு வசவேசர் துதியை ஆசிரியர் இசைத்துள்ளார்

சென்னவசவர்.

7. பழுதுபட்ட சேற்று வழியை நீக்கி, நல்ல வழியைச் சொல்பவர்கள் போலத் தத்தம் அறிவுக்கு ஏற்பப் பலவாறு பிதற்றுகிற சமயவாதிகளுடைய உரைகளை விலக்கி, அங்க (உடம்பு) நிலை இத்தகையது, இலிங்க (ஆன்மா) நிலை

இத்தகையது என்று தெரிவித்தருளிய வீரசைவச் சிங்கம் ஆன, நிலைத்த அருள் உடைய சென்ன வசவ தேவனது திருத்தாள் வணங்குவோம்.

O அங்கம்: பருவுடல் நுண்ணுடல் காரணவுடல் என மூன்று. இலிங்கம்: இட்ட, பிராண, பாவ என மூன்று.

O வீர சைவ மெய்ப்பொருள் 'விளங்க நூல் செய்தளித் தார் சென்ன வசவர் என்ற குறிப்பு இதில் கூறப்படுகிறது.

**மடிவால மாச்சையர்**

8. கச்சு அணியப் பெற்ற, செஞ்சாந்து பூசிய மெல்லிய கொங்கையினாளைத் தனது பாகமாகக் கொண்ட இறைவ னின் அடியார்களது ஆடைகளை அடித்து அழுக்கைப்போக்கி விடும் செயல்போல, விச்சல மன்னவனின் சேனை செய்த குற்றத்திற்காக அதனைச் சின்ன பின்னமாக வெட்டி அழிக்கும் கருணையை உடைய மடிவால மாச்சனின் பொன் போன்ற திருவடிகளைப் போற்றி செய்வோம்.

O கலியாண புரியில் வசவண்ணர் திருமடத்தில் இருந்த அடியார்களின் ஆடைகளை வெளுத்துக் கொடுக்கும் பணி மேற்கொண்டிருந்தவர் மடிவால மாச்சர். ஆடைகள் துவைத் தற்குத் தீதாக அமைந்த ஒருவனை அவர் வெட்டிக் கொன்றார். அதனை அறிந்த விச்சல மன்னன் அவரைக் கொல்லுமாறு படையை ஏவினான். அந்தப் படையையும் மடிவால மாச்சர் தகர்த்துச் சிதைத்தார் என்பது வரலாறு.

**நால்வர்**

9. எலும்பானது ஒரு பெண்ணரசியாகவும், பெரிய நீற்றறையானது தேனும் அழகும் உடைய தாமரை மலர்கள் கொண்ட பொய்கையாகவும், செங்கல் பொன்னாகப் பொருந்தவும், சிறிய நரிகள் மடங்கிய பிடரி மயிரையுடைய குதிரைகளாக மதுரை நகரிற் செல்லவும், செய்தற்கு உரிய அமுதம் போல்கிற முத்தமிழ்ப் பதிகங்களை அருளிச் செய்த சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்கிற நால்வ ரையும் வணங்குவோம்.

O சம்பந்தர் மயிலையில் எலும்பைப் பூம்பாவையாகச் செய்தமையும், நீற்றறை அப்பருக்கு மூசு வண்டறை பொய்கையாகக் குளிர்ந்தமையும், சுந்தரர்க்குச் செங்கல் பொன்னாக மாறியமையும், மாணிக்க வாசகரின் பொருட்டு நரிகள் பரிகளாக வந்தமையும் ஆகிய விந்தைகள் இங்கே நிரலாகக் குறிக்கப்பெற்றுள்ளன.

அடியார்கள்

10. பரவையின் நாயகனாகிய சுந்தர மூர்த்தி நாயனார் பாடிய திருத்தொண்டத் தொகையுள் இருக்கின்ற அடியார் களும், பக்தி எல்லாம் ஒரு வடிவமாக வந்த நம் சோமநாதன் பாடிய துதிப்பாடலுள் இருக்கின்ற சரணர் களும், பாம்பை அணியாக உடைய இறைவனின் அடியார் களாக உள்ள, அவ்விரு பாடல்களிலும் அடங்காத ஏனைய அன்பர்களும் ஆகிய அனைவரும் கலந்து எந் நாளும் இருத்தற்கு எமது நெஞ்சமானது விரிந்து இடம் கொடுக்கும்.

O சைவ சமய அடியார்களையும், வீர சைவத்துச் சரணர் களையும், ஏனைய வகைச் சிவநேயர்களையும் இச்செய்யுட் கண் பரவுகிறார் கவிஞர்.

நூலை இயற்றியோரும் நூல் கூறும் பொருளும்

11. அளவிடப்படாத புகழை உடைய, பொதிகை மலையில் இருந்த பெரிய தவத்தினை உடைய அகத்திய முனிவன் இப்படி ஒரு திருவுரு எடுத்தான் என்று கூறுமாறு, தான் இயற்றிய முத்தமிழ்க் கவிதைகளை உடைய சிவப்பிரகாசன் என்னும் பெரிய பெயர் படைத்தவன், குளிர்ச்சி பொருந்திய திங்களை அணிந்த சடையை உடைய இறைவனால் புகழப் பெற்ற அல்லம தேவனது வரலாறாகிய தீம்பாலை, நல்வினை உடையவர்களின் உட்செவியாகிய வாயினில் தமிழ்ச் செய்யுளாகிய சங்கினால் முகந்து புகவிட்டனன்.

O உருவக அணி.

O விந்தம் அடக்கினமை, கடல் குடித்தமை, இல்வல வாதாபிகளைக் கொன்றமை, தென்நிலத்தை வட நிலத்துக்கு நிகராக உயர்த்தியமை முதலியன அகத்தியரின் கீர்த்திகள்.

O சிறப்புப் பாயிரமான இதனைச் சிவப்பிரகாச அடிக ளின் உடன் பிறந்தார் ஒருவர் பாடியிருக்கலாம் என்று கூறுவர்.

அவையடக்கம்

12. (கிரகணம் முதலிய) ஏற்புடைய காலம் வருமானால் மக்கள் உவர்க்கடலிலும் மூழ்குவர். ஆதலான், அடல் வல்ல அல்லம தேவனின் அரிய புகழோடு (இந்நூல்) கூடித் தோன்றலால், அறியாமையினின்றும் நீங்கிய பெரியோர் எனது மொழியையும் (மேலாய ஆன்மிக ஆக்கம் கருதிப்) பலகாலும் நயந்து கொண்டாடுவர்.

கதி எண்ணிக்கை

13. தன்னை விரும்புவோர், நான்கு கதிகளாலும் தரப் படும் துன்பங்களைக் கடந்து மண் தத்துவம் முதலிய இருபத்தைந்து தத்துவங்களுக்கும் மேலாகிய வீடுபேற்றைப் பெற அருள் விளங்கும் அல்லம தேவனது புகழை உடைய இருபத்தைந்து கதிகளையும் சொல்லுவாம்.

O இந்நூல் இருபத்தைந்து கதிகள் (உட்பிரிவுகள்) கொண்டுள் ளது என்பதாம்.

O நாற்கதி: தேவ. மனித, விலங்கு, நரக, கதிகள்.

O இருபத்தைந்து தத்துவங்கள்: பூதங்கள் ஐந்து. ஞானேந்திரி யங்கள் ஐந்து. கருமேந்திரியங்கள் ஐந்து. தன் மாத்திரை கள் ஐந்து. புருடன் மான் அகங்காரம் மனம் மூலப்பகுதி ஆகியன ஐந்து.

இதன் தனிச் சிறப்பு

14. அருள் மிகும் அல்லம தேவனது மாசிலாத் திருவிளை யாட்டு, சினம் கொண்ட பகைவர் ஒருவரையொருவர் கொலை செய்து கொள்ளும் கதையும், வலிய துயரைச் செய்யும் காம நோயைப் பெருக்குகின்ற சரித்திரமும், இழி தொழிலை உடையோர் வீணே பொழுதினைப் போக்கற்கென அமைந்த சரித்திரமும் அன்று.

### நூலின் பெரும்பயன்

15. புறத்தே குருதி வடியும், செம்புண்ணில் மொய்க்கும் ஈக்களைப் போல் பயனில்லாத கதையை இழிந்தோர் விரும்பிக் கற்பர். தாமரைப் பூவில் மொய்க்கும் களிப்பு மிக்க வண்டுகள் போல் அல்லம தேவனின் ஒளி திகழ் கதையை, மானிடராய்ப் பிறவி எடுத்ததன் பயனைப் பெறுதற்குத் தகுதியுள்ள பெரியோர் சிறப்பாகக் கொண்டு விரும்பிக் கற்பர்.

### இந்நூல் தரும் துணை

16. அல்லம தேவனின் மாசிலாத் திருவிளையாடல் (நூல்) ஆனது, மயக்கமாகிய சேற்றுக்கு ஊன்றுகோல்; நிரம்பிய அன்பு என்னும் இலக்கணமுடைய எழுத்தை வரைதற்கு எழுதுகோல்; உடலும் ஆன்மாவும் (அங்க லிங்கம்) ஆகிய விரிவான நிலத்திற்கு அளவுகோல்; அறிவாகிய விளக்கினுக்குச் சோர்வு அகற்ற உதவும் தூண்டுகோல்.

O அமல(ன்) லீலையானது ஊன்றுகோல், எழுதுகோல் அளவுகோல், தூண்டுகோல் என்று உருவகப்படுத்திக் கூறிய முறை இனிதாக உளது.

### இந்நூலின் உறுபயன்

17. என் தனி நாவினின்றும் எழுகின்ற இக்காப்பியம் ஆகிய ஆ(பசு)வானது, நன்மை கொண்ட அடிகள் (கவிதை அடிகள், கால்கள்) நான்கினால் பொருந்த நடந்து, வெற்றி கொள் அல்லமனின் மிகு புகழாகிய சுவையுடைய பாலைக் கன்றலில்லாத (வருந்துதல் இல்லாத) அன்பர்களாகிய கன்றினை ஊட்டும்.

O உருவக அணி.

## உற்பத்தி வரலாறு (14)

### சதாசிவன், சிவன் தோன்றுதல்

18. பரசிவம் எனவும் பிரம்மம் எனவும் உரைக்கப் பட்டு ஒரு மாறுபாடு இல்லாததாக, சொல்லும் நினைப்பும் கடந்து மெய்யறிவுப் பேரின்ப வடிவாக, நின்ற ஒர் இறைநிலையினின்று (சிவ லிங்கத்தினின்று) உயர்வாகிய சதாசிவன் உதிப்பன். அருமை கொண்ட ஞான சக்தி அவனைக் கூடுவள். அவர்களால் சிவன் பிறப்பன்.

O பரசிவம் பிரம்மம் என்பன ஒருபொருட் சொற்கள். பரசிவம் என்பது சித்தாந்த நூற் பெயர். பிரம்மம் என்பது வேதாந்த நூற் பெயர்.

O பரசிவம் அல்லது பிரம்மம் முதலாக உரைக்கப் பெறும் உற்பத்தி நிலைகள் மெய்யறிவு அனுபூதியின் உருவகு நிலைகள் என்பது அறியத் தக்கது.

### உருத்திரன் திருமால் ஆகியோர் தோன்றுதல்

19. அந்தச் சிவனுக்கு இச்சா சக்தி. சக்தி ஆவாள். அவ் விருவராலும் உருத்திரன் உதிப்பன். அவனுக்குக் கிரியாசக்தி சக்தி ஆவாள். அவ் விருவராலும் உலகைக் காக்கும் திருமால் உதிப்பன். அவனுக்குத் திருமகள் சக்தி ஆவள்.

### நான்முகன் தோற்றமும் உலகம் உண்டாதலும்

20. அந்தத் திருமாலும் திருமகளும் நல்குதலால், வண்டுகள் மொய்த்து இசை முரலும் செந்தாமரை மலரில் இருக்கும் நான்முகன் வந்து தோன்றுவன். அவனுக்கு வெண்டாமரை மலரில் உள்ள கலைமகள் சக்தி ஆவாள். அவ்விருவரும் கூடிப் படைக்க உலகின் தோற்றம் யாவும் எண்ணம் ஒன்றாலே நிகழ்வதாகும்.

### மூவர்க்கும் அல்லமர் இறைமை தருதல்

21. குருவாகிய அல்லமதேவன், படைத்தல் தொழிலை அயனுக்கும், படைத்தல் காத்தல் ஆகிய தொழில் இரண்டைத் திருமாலுக்கும், படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய தொழில் மூன்றைத் திரிபுரம் எரித்த உருத்திரனுக்கும், அளித்து அவர்களுக்கு யாவராலும் மாற்றப்பெறாத தலைமை நிலையைத் தந்து நிறுவினான். O

# 2. கைலாச கதி

கதைச் சுருக்கம்: கவிஞர் கூற்று

1. வெள்ளிமயமாக உள்ள பெரிய கயிலை மலையின் உச்சியில் அரசிருந்து அருள் செய்கின்ற முக்கண் வள்ளலாகிய சிவனுடன் சூள் மொழிந்து களிப்புப் பொருந்திய அரி பரந்த நீண்ட கண்களும் சிவந்த வாயும் பிறை போன்ற நெற்றியும் உடைய இறைவியானவள், அல்லம தேவனைக் காணுதற் பொருட்டு வஞ்சகம் பொருந்திய மாயையை நிலவுலகிற்கு அனுப்பியமை சொல்லும் அந்தக் கதியை உரைப்போம்.

இடங்கள் வகுத்துப் பிரமன் படைத்தல்

2. தொல்பழங் காலத்தில் நாமகளோடு கூடி, இயங்குவன நிற்பன ஆகிய எல்லாவற்றையும் படைத்த நான்முகன் பரந்த புவி அண்டத்தில் வெற்றி பொருந்திய அசுரர் நாகர் தேவர் ஆகியோருக்குத் தகுந்த இடங்களை வகுத்து உண்டாக்கினான்.

இறைவனின் கயிலை மலைச் சிறப்பு (5)

3. வளர் அருளால், தான் திருமேனி தாங்கி இருக்கும், வளைந்த வடிவுடைய பிறையை அணிந்திருக்கும், பேரானந்தக் கொற்றவனாகிய இறைவனின் கயிலை மலையானது தேவர்கள் தம் ஊன்முகக் கண்களால் கண்டு மகிழ்வதற்கு பிரம அண்டத்துள்ளே மிகச் சிறந்து ஒப்பற்று இருப்பதாகும்.

4. கூட்டமாகிய (கொள்ளை கொள்ளும்) வண்டுகள் வந்து பொருந்திப் பொடியிலே மூழ்கி, மூக்கினால் கிண்ட முறுக்கு உடைந்து, தேன் வழிந்து ஒழுகுகின்ற செம்பொன் போலும் கொன்றை மலர்களைச் சூடி விளங்கும் சடையை உடைய கடவுளது வெள்ளிய புகழ் திரண்டிருக்கும் வளம் பொருந்திய கயிலையில் வெள்ளி வந்து பொய்த்தோற்றமாக விளைந்தது.

O புகழின் நிறம் வெள்ளை. இறைவனின் புகழ் திரண்ட வடிவமாக வெண்மை கொழிக்க விளங்கிய கயிலை வரையில் வெள்ளி உண்மையில் வெள்ளியாகத் தோன்றாமல் போலி போல் தென்பட்டது.

O இப்பியை வெள்ளியாக நினைப்பது அத்தியாசம்– ஆரோபம்– பொய்க் கற்பனை அல்லது ஒன்றை மற்றொன்றாக அறிதல் எனப்படும். இறைவனின் புகழ் திரண்ட குன்றம் மிகு வெள்ளிதாக இருந்தது. அங்கே வெள்ளி இப்பியாகத் தோன்றியது. அது பொய்த் தோற்றமாக விளைந்தது என்பதாம். வெள்ளியில் புகழை ஏற்றி அதனை மறுத்தலால் இஃது ஒழிப்பணி.

5 [உபமன்யு என்ற முனிவர் குழந்தையாக இருந்த காலத்தில் பாலுக்காக அழுதார். அவருக்குப் பருகப் பாற் கடலைக் கொடுத்தார் சிவன். அவ்வாறு] வேறொரு குழந்தை கண்களைப் பிசைந்து பாலுக்கு அழுதால் தன்னை இறைவன் கொடுப்பான். (தன்னிடம் இருக்கும்) நாரணன் [கொடுக்க வேண்டாம் என்று] தடுக்கும் வலிமையுடையவன் அல்லன். ஆதலால் சிவனுக்கு நட்பாக இருந்து விடுவோம் என்று தன் குணத்தோடு பொருந்திப் பாற்கடலானது குவிந்ததாகிய தன்மை போல் கயிலை மலை நிற்கிறது.

6 அந்த வெண்ணிறக் கயிலையில், [வெண்ணிறப் பொருள்களைப் பிரித்துக் காண்பது கடினமாக இருந்தது.] ஓடுகின்ற அருவிகளின் தொகுதியை ஒலியினால் தான் அறிய முடிந்தது. விளங்கும் வெள்ளிய திங்கள் அதன் வடிவில் இருந்த களங்கத்தால் தான் அறியக் கிடந்தது. இந்திரனின், கூரிய கொம்புகளையுடைய இளமை பொருந்திய வெள்ளை யானை சொரியும் மதத்தால் தான் அறியுமாறு இருந்தது. மலர்மிசை யிருக்கும் நான்முகனின் ஊர்தியான அன்னம் அழகிய சிவந்த கால்களால் தான் அறிய இருந்தது. வேறு வகையில் (எல்லாம் வெண்மையாக இருந்தலின்) அறியப்படுமாறு இல்லை.

7. விளங்கும் ஒளி துளும்புகின்ற அந்த வெள்ளிமலையின் சிகரத்தில், அசைகின்ற கதிர் விரிக்கும் செம்பொற் சுடர் மணியால் ஆகிய செய்குன்று ஒன்று இருந்தது. அது மாசில்லாத பெரிய அடிப்பாகத்தை உடைய கர்ப்பூரக் குவியலின்மேல் தங்கி விளங்குதல் போல் விளங்கியது.

இறைவனின் அரசிருக்கை மண்டபம்

8. இத்தகைய கயிலையில் இறைவனின் அரசிருக்கை மண்டபம் ஒன்று உண்டு. அதனை அழகு பொருந்தக் கூறாமல் அடுத்த பகுதிக்குச் செல்கிறேன், என்று என்னை யாரும் இகழ மாட்டார்கள் ஏனெனில் விளங்கிய அந்த மண்டபத்தின் ஒப்பற்ற சிறப்பு, ஆயிரம் நாவும் குறைவிலாப் புலமையும் உடைய ஆதி சேடனாலும் உரைத்தற்கு அரியதாகும்.

ஒரு நாள் இறைவன் ஆதனத்தில் இருத்தல்

9. அப்படிப் பட்ட மண்டபத்தில் இறைவன் ஒரு நாள் வந்து அங்கு விளங்கும் செம்மணி மேடையில் மேல் எழுந்தருளினான். அங்ஙனம் இருந்தது உலகம் நிலை பெறற்கு ஏதுவாகிய செங்கதிரோன் தன் மண்டலத்தில் அமர்ந்திருந்தான் என்று சொல்லுமாறு இருந்தது.

இறைவன் திருக்கோலம் (6)

இறைவனிடம் திங்களும் கங்கையும் இருத்தல்

10. இளமை உடையதாக இருந்தும் உடல் வளைந்து சிறப்புடைய ஒளி பொருந்திய ஒரு திங்கள் (பிறை) சடையில் இருக்கவும், உரியவளாம் மலையரசன் குழந்தையெனப் பெற்ற அழகையுடைய நீர்மகள் அந்தச் சடையினிடத்து வாழ்ந்திருப்பவும்-

O 'குழவியாய்க் கூனி நரைத்துள்ளது' என்றும் 'கிழவியாகி மகவு என அழகுடையவள்' என்றும் வருவன முரண்போலி அணிகள்.

O 'கிழவியாகி கிரிக்கோன் மகப்பெறும் அழகு நீர்மகள் ஆயிடை வாழ்வுற' என்பது மலையரசன் மகவாகப் பெற்ற அழகிய தன்மையுடைய இறைவி இடப்பாகத்தில் விளங்கவும் என்று இரட்டுற மொழிவாகப் பொருள் கொள்ளுமாறும் நயம்பட உள்ளது.

மேனோக்கிய கண், கீழ் நோக்கிய கண்

11. நெருப்பு எனப்படுதற்குப் பொருந்த மேல் நோக்கிய சிவந்த விழி ஒன்று அழகிய நெற்றியில் சேர்ந்திருக்க,

திங்கள் என்றும் கதிரோன் என்றும் வாழ்கின்ற அழகிய கண்கள் இரண்டும் பெருகுகின்ற அருள் பாயும் மதகுகள் போன்று இருக்கவும்-

O நெருப்பு மேல் நோக்குதலும் நீர் கீழ் நோக்குதலும் இயல்பு ஆதலின் அதற்கேற்பக் கூறினார்.

காதில் தோடுகள், கண்டத்தில் கறுமை

12. நினைக்கும் அடியவர்களது இதயம் எனப்படும் பறவைகள் அகப்படும் வலை போன்ற நெடிய செவியிடத்துத் தோடுகள் தங்கியிருக்கவும், தம்மை யடுத்துள்ள மாது ஆகிய உமையின் நல்ல நெற்றியிடத்து (கத்தூரி)ப் பொட்டு (எப்படி அழகு செய்கிறதோ அப்படி) கரு நிற நஞ்சக் கறை அழகிய கண்டத்தினிடத்துப் பொருந்தியிருக்கவும்-

O காதுத் தோடுகளைப் பறவை பிடிக்கும் வலை போலிருந்தனவாகக் கூறல் தற்குறிப் பேற்றம். திலகம் போல் நஞ்சக் கறை என்பது உவமை.

கையில் மான், மழு

13. மலை பெற்ற பூங்கொடிபோன்ற இறைவியின் கண்களுக்கு நாணமுற்று முகம் திரும்பும் முறையில் திரும்பும் மானானது மகிழ்ந்து இடக் கையிலும், ஒளி பொருந்திய வீர மழுவானது அப்படி (மான்)த் திரும்பியது 'தகும், தகும்' என்று சொல்லுவது போன்று 'தகும் தகும்' என்று ஒலி செய்து எரிந்து கொண்டிருக்கவும்-

'தகும் தகும்' என்று (ஒலி உண்டாக) எரிகின்ற மழுவானது, மான் நாணித் திரும்பியது 'தகும் தகும்' (பொருந்தும்) என்று உரைப்பது போல் எரிவதாகக் கூறியுள்ளமை தற்குறிப் பேற்றம்.

காப்பு, மார்புப் பதக்கம்

14. இலக்கணங்கள் உணர்ந்த, சுடர்மணிகளை உடைய ஆதிசேடன், (இறைவன்) கையில் காப்பாக விளங்கவும், ஒரு கரிய பன்றியின் கொம்பானது மார்புப் பதக்கம் போல் மார்பில் சீர் பொருந்த அமையவும், புலி கொடுத்த உடையானது இடுப்பை அடைந்து பட்டாடை போல் அழகு செய்யவும்-

தாளில் வீரக் கழல்

15. முப்புரங்களை வென்ற சிரிப்புக்கும், மெல்லிய தாமரை மலர் மேல் இருக்கும் நான்முகனின் தலையைக் கொய்த செய்கைக்கும் கருப்பு வில்லியாம் மன்மதனை எரித்து வென்ற கண்ணிற்கும் (இப்படி ஒரு) விருது எதுவும் இல்லை என்று கூறுமாறு கூற்றுவனைக் கொன்று கட்டிய வீரக் கழல் தாளில் பொருந்தியிருக்கவும்–

இறைவன் இடத்தில் இறைவி யிருத்தல் (9)

16. இவ்வாறு இருந்த இறைவனிடத்தில், அகன்ற விண்ணும் மண்ணும் உயிர்களும் ஒருங்கு தோன்றப் பெற்றெடுத்தும் சூலுற்று வருந்தாத அழகிய வயிற்றை உடைய தாயாகிய உமையவள் இருந்தாள்.

கூந்தல் மேல் மாலை

17. இறைவனின் அழகிய கண் எனப்படும் ஞாயிறு திங்கள் தீ என்ற மூன்று ஒளிகளும் நட்புக் கொண்ட இருள் போன்ற கூந்தலின் மேல், அறவடிவினன் எனப்படும் அந்தத் தலைவன் புனைந்தருளிய தேனைச் சொரியும் வாசனை பொருந்திய மலர் மாலையானது தொங்கலாக நிற்கவும்-

நெற்றியில் சுட்டி

19. நெடிய காளை எழுதப் பெற்ற கொடியை உடைய இறைவனின் சடையிலுள்ள பிறை கங்கையில் விழுந்து இறப்பதற்கு எண்ண, அழகும் ஒளியும் பொருந்திய நெற்றியில் தொங்கவிடப்பட்ட மணிச்சுட்டி அழகு செய்யவும்-

O இறைவியின் நெற்றி அழகுக்குத் தோற்றுப், பிறையானது கங்கையில் விழுந்து இறந்துவிட எண்ணுவதற்குக் காரணமாக இருந்தது அந் நெற்றியின் அழகு என்பதாம்.

கண்களுக்கும் வாய்க்கும் அணிகலன்

19. இறைவனின் முகம் எனப்படுகின்ற தாமரை மலரிடத்து ஆசை மிகுகின்ற வண்டுகளாகிய கண்களுக்கு நிறைவுற்ற

அருளும், வாசனையுமுடைய செவ்வல்லி மலர் போன்ற வாய்க்குச் சிறிய வெள்ளிய நகையும் (புன்னகை) ஒளி தவழ்கின்ற அணியாகச் சிறந்து தோன்றவும்—

காதில் ஓலை

20. பெருமை உண்டாக அணிகலன்களைத் தாங்கும் மற்றை உறுப்புக்கள் போல் அணிகலன்களுக்கு உட்படாமல் காதோலையின் அணிகலன் என்று கூறுமாறு அழகிய செம்பொன்னால் ஆன விளங்கொளி உடைய ஓலை மேல் காணப்படுகின்ற அக் காது என்ற வள்ளை மலர்களானவை அழகு செய்யவும்—

மங்கல நாண்

21. ஓங்கிய யானையை உடைய இந்திரன், அயன், அரி ஆகியோர் உயிர் நீங்கி அழிகின்ற காலத்தும் களையப்படாத வலிமை உடைய அழகிய தாலிக் கயிறு ஒளி நிறைந்த அணிகலன்களுக்கு அரசு போல் சிறந்து திகழவும்—

O இந்திரன் முதலியோர் உயிர் இழத்தல் என்பது யாவும் அழியும் காலத்திலாகும். அந்த அழிவை நடத்துபவன் இறைவன். எனவே அவ்விறைவனும் இறைவியும் நித்தியமானவர் என்பதாம்.

மார்பில் முத்து மாலை

22. பாம்பு உலாவும் சடையை உடைய அண்ணலை (ஞான சம்பந்தர் என்ற) பிள்ளை மூன்று வயதில் இனிய தமிழில் பாட, இனிய ஞானப் பாலைக் கொடுத்தருளிய ஒப்பற்ற மார்பின் புகழ் போல மிக்க ஒளி பொருந்திய முத்தினால் ஆகிய அழகிய மாலை அவற்றின் மீது தொங்கவும்—

கைகளில் நீல மலரும் கிளியும்

23. இரத்தின வளையல்களாகிய பறவாத கரிய வண்டுகள் ஒலிக்கின்ற தாமரை மலர் (கைகள்) சிறந்த கருங்குவளை மலரோடு கூடி அழகு பெறவும் பச்சைக் கிளியானது வேதாந்தப் பொருளை மறவாமல் சொல்லிக் கொண்டு முன்கையில் அமர்ந்திருக்கவும்-

பட்டாடை

24. தோலாகிய உடையை உடைய கடவுளின் பழமை யுடைய மனைவியிடத்து இது வந்தது எவ்வாறு என்று வியக்கத் தக்க பட்டானது அரைமேல் உடுக்கப் பட்டு விளங்கவும்; ஒள்ளிய மேகலை, நூல் போன்ற சிறிய இடைக்கு (கூந்தல் முதலிய சுமையால்) வரும் மிகு நோயை உண்டாக்கவும் —

சிலம்பு

25. புதிய அனிச்சமலர் பட்டாலும் பொறுக்க மாட்டாமையை உணர்ந்திருந்தும் அன்று நிகழ்ந்த பெரிய திருமணத்தின் போது அம்மிக் கல்லின் மீது கடவுளால் எடுத்து வைக்கப் பட்ட அடிக்கமலங்களில் முத்துக்களைப் பரற்களாக உடைய செம்பொற் சிலம்புகள் முழக்கமிடவும்—

இறைவன் பேரவைக்குப் பலரும் வருதல் (22)

இறைவியிடம் அரம்பைமாதர் வருதல்

26. இவ்வாறான சிறப்புடன் இருந்த நிறைந்த அழகுடைய எம்பெருமாட்டியாம் உமாதேவியிடம் தென்னங்குரும்பை நாணும் மென் கொங்கையாகிய பாரத்தினால் வருந்தும், நூலைப் பிளந்தாற் போன்ற சிறிய இடையை உடைய மகளிர் எண்ணில்லாதவர்கள் நெருங்கினார்கள்.

ஏழு முனிவரரின் மனைவியர் இறைவியை வாழ்த்துதல்

27. வசிட்டர் முதலிய ஏழு முனிவர்களும் மனையறம் புரியத் துணையாயிருக்கும் முல்லைப் பூமாலை உடைய அருந்ததி முதலாம் எழுவரும் சென்று சூதாடு கருவியோ தாமரை அரும்போ என்று கூறுமாறுள்ள மார்பையுடைய பனிமலை மகளைத் தொழுது சொல்லுதற்கு அரிய தோத்திரம் செய்து வாழ்த்துப் பாடினார்கள்.

திருமகளிர் கவரி இரட்டுதல்

28. தாமரை மலர்மேல் இருக்கும் நூறு கோடி என்னும் தொகையுள்ள திருமகளிர், ஓர் அன்னப் பறவையால் தேடிக் காண முடியாத கடவுளின் முடியிலுள்ள கங்கையை அறிந்து அதனை நெருங்கும்படி வந்து சுழல்கின்ற அன்னப் பறவைகளின் கூட்டம் போல, முன் வந்து வெண் சாமரங்களை முறையோடு இருபுறத்தும் வீசினார்கள்.

O நாரணனோடு சூளுற்று அன்ன வடிவுகொண்டு சென்று இறைவனின் முடியைக் காணாது திரும்பினான் பிரமன். இப்பொழுது பல அன்னங்கள் இறைவன் திருமுடியில் உள்ள கங்கையைக் கண்டு நெருங்கிச் சுழல்வதாகக் கூறியது தற்குறிப்பு ஏற்றம். வெண்ணிறமும் சுழலுதலும் அன்னத்துக்கும் கவரிக்கும் பொதுப்பண்புகள்.

இந்திராணியர் சிற்றாலவட்டங்கள் அசைத்தல்

29. வெண்முத்துப் போன்ற ஒளி பொருந்திய பற்களையும் கொலைத் தொழிலிற் பழகிய வில்லுப் போலுள்ள புருவங்களையும் மெல்லிய மலர்களால் புனையப் பெற்ற கூந்தலையும் உடைய கோடி இந்திராணிகள் சென்று பொருந்தி இறைவி மருங்கு நின்று பாம்பினால் கவ்வப் பட்ட சுடர் என்று கண்டோர் கூறுமாறு சிற்றால வட்டங்களை அசைத்தார்கள்.

கலைமடந்தையர் துதித்தல்

30. பலராகிய வெண்ணிறமுடைய கலைமடந்தையர் வீணைகள் எடுத்து, தெறிக்கப்படும் நரம்பின் ஒலி இது கண்டத்தின் ஒலி இது என்று அவர்களோடு நெருங்கி நெடுங்காலம் பழகிய கணவன்மாராகிய பிரமதேவர்களும் அறிதல் இயலாவாறு, படத்தை யுடைய பாம்பை அணிந்த இறைவன் அருகில் இருக்கும் இறைவியின் புகழைப் பாட்டில் அமைத்துத் துதித்தார்கள்.

வானக ஆடல்மகளிரின் ஆடல்

31. மான்விழியோடு ஒப்புமை அமைந்த கண்களை உடைய உருத்திர கணிகையர் மகிழ்ந்து வெவ்வேறு சுவையுள்ள பலவகைப் பட்ட காயங்களும் உப்பும் அளவொத்து அமைந்த இனிய கறிக்கூட்டுப் போல, சொல்லுதல் அமைந்த மத்தள ஒலியையும் இசை ஒலியையும் தாள ஒலியையும் மெல்லிய அடிகளது மிதிப்பையும் தழுவி ஆடினர்.

தமோ குண மாதின் அழகும் தருக்கும்

32 இறைவன் இடத்து இருக்கின்ற உமாதேவியின் சத்துவ குணம் இராசத குணம் தாமத குணம் என்ற மூக் குணங்களும்

வடிவு கொண்டு வந்த மாதர்கள் அவளுக்குக் குற்றேவல் செய்தலில் மகிழ்ந்து அருகு நின்றனர். அவர்களுள் தமோ குண வடிவமான மாது, உமையின் அருளை அதிகம் பெற்று நல்ல அழகும் மாயை என்னும் பெயரையும் கொண்டு இறு மாந்து நின்றாள்.

உருத்திரர் கூட்டம் வருதல்

33. இறைவன் கூறாகிய உருத்திரர்கள் அவன் அணியும் கங்கை பிறை மான் முதலியவற்றைத் தாங்கி வந்தனர். அதனால் தெளிந்த நெடிய அலைகளையுடைய கங்கையும் கங்கையும், சிறிய பிள்ளையாகிய பிறையும் பிறையும், மிகவும் துள்ளும் இளமானும் இளமானும், உறவு கொள்ளுமாறு உருத்திரருடைய கூட்டங்கள் அங்கே நெருங்கின.

நாரணர் கணங்களின் வருகை

34. திருமாலின் கூறாகிய நாராயணர் கூட்டங்கள் அங்கு இறைவனின் பேரவைக்குத் திரளாக வந்தன. சங்கு ஒன்றுடன் ஒன்று தாக்கவும், ஒளி பெருகும் உயரிய சக்கரமும் சக்கரமும் தாக்கவும், அலைகளைச் சுருட்டுகிற பொங்குகிற கடலானது வந்தது போல் வியக்கத் தக்கவாறு அந்த அரிக்கணங்கள் அங்கு வந்து அடைந்தன.

பிரமாக்கள் பலர் வருதல்

35. உலகைப் படைக்கும் தொழில் பூண்ட பிரமர்கள் எண்ணி லோர் தத்தம் நான்முகங்களிலும் நான்கு வேதங்களும் முறைப்படி முழங்க, நான்கு தலைகளிலும் எட்டுக் கைகளும் உயர்ந்து குவிய, உமாதேவியினால் பங்கு கொள்ளப்பட்ட மேனியையுடைய இறைவனது அவைக்கண் புகுந்தனர்.

இந்திரர் எண்ணற்றோர் வருதல்

36. 'அயனும் மாலும் என்னைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று சொல்லுவது தவிரக் கயிலை நாயகனாம் இறைவனின் அரசிருக்கை காணுதற்கு என்போல் ஆயிரம் கண்கள் உடை யோர் அல்லர், ஆகையால் நான் உயர்ந்தவன்' என்று தனித்தனி நினைத்துக் கொண்டு எண்ணிலராகிய வச்சிரப் படை உடைய இந்திரர் வந்தனர்.

பல்வகை இனத்தவர் வருகை

37. நாகர் வித்தியாதரர் தேவர் உயர்வுடைய கிம்புருடர், ஞாயிறு முதலிய கோள்கள், திசை காவலர், அரக்கர் மற்று முள்ளவர் விழி பிதுங்க உடல் நெருங்க, வரதனாம் இறைவனின் ஓலக்கம் காண வந்தனர்.

வசிட்டர் முதலிய முனிவரர் வருகை

38. கேடும் பெருக்கமும் தம் வாய்ச் சொல்லினாலே பிறர்க்கு உண்டாக்க வல்லவரும், நல்லறங்களில் முயலுதலால் முக்காலத்தும் உள்ளவரும், உலகப் பற்றுக்களினின்று விடுபட்டவரும் ஆகிய பழியில்லாத வசிட்டர் முதலிய முனிவரர் ஆங்கு நிறைந்தனர்.

பூத கணங்களின் வருகை

39. இப் பூதங்களின் குழந்தை (குட்டிப் பூதம்) தாய்ப்பால் குடிப்பது கடலைக் குடிப்பது போன்றது எனவும், சோறு உண்டு பழகுதல் பூமியை எடுத்து விழுங்குதல் போல்வது எனவும், தளர் நடையுடைய மகவின் விளையாட்டு படைப்பு முழுதும் போல்வது எனவும் கூறத் தக்கவாறுள்ள வலிமை மிக்க பூதக் கூட்டங்கள் எண்ணற்றன வந்தன. [சிறிய பூதங்களின் பெருமையைக் கூறுவதனால் பெரிய பூதங்களின் பெருமையை ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.]

வீரபத்திரர் வருகை

40. செருக்கினால் சிவனை இகழ்ந்த வாய்க்கு, வேதாகமங்களை ஆராய்ந்து பார்க்க, கழுவாய் இல்லை என்று முன்பு தக்கனின் தலையை வெட்டி நெருப்புக்குக் கொடுத்து, இகழ்தலில்லா ஆட்டின் முகத்தைப் பொருத்திக் களித்து நின்ற வீரபத்திரர் வந்து ஒரு பக்கம் நின்றார்.

O சிவனை வேள்வித் தலைவன் என்றும் நாரணன் வேள்வி வடிவினன் என்றும் நூல்கள் விதித்திருக்கத் தக்கன் நாரணனைத் தலைவனாக வைத்துச் சிவனை இகழ்ந்தனன். அவன் தலையை வெட்டி ஆட்டு முகத்தைப் பொருத்தியது இறைவனை இகழ்ந்தமைக்குத் தண்டனை.

வயிரவன் வருகை

41. ஆயிரம் நாரணரைக் கொன்று மாங்கனி போல் பிழிந்து சக்கையை எறிந்தாலும் கடலைக் கவிழ்த்தால் அது போலப் பெருகுவதாகிய சிவந்த குருதியினால் பாதியளவும் நிறைத லில்லாத மிகப் பெரிய தலையோட்டைக் கையில் உடையவ னாக வயிரவன், இறைவனது அவையில் வந்தான்.

வீர காளி வருதல்

41. ''பெண்டிருக்கு வீரம் இல்லை என்று சொல்லுதற்குக் காரணம் உளதோ? வீரத்தன்மை உடைய மாது என்று நன்றாக அறியீரோ'' என்று சொல்லிக் கொண்டு, வீர இயல்பு உடைய ஏவல் மகளிர் கூட்டத்தோடு, போர் விருப்பு உடைய வீர காளியும் அவையிடைப் புகுந்தாள்.

பிருங்கி முனிவரின் ஆடல்

43. இருளை நீக்கும் கதிரவன் போல் மாயையை நீக்குதல் செய்த பிருங்கி என்ற தூயவன் உறுதியாக நன்மையில் ஊன்றிய ஞானம், உயர் வைராக்கியம், நல்ஒழுக்கம், என்ற மூன்று பண்புகளும் மூன்று கால்கள் போல் கொண்டு, சிவன் முகத்தில் புன்னகை அரும்ப, நின்று ஆடினன்.

நந்தி தேவர் செயல்

44. நிலவுலகைத் தாங்கும் ஆதிசேடனைக் காப்பாக அணிந்த இறைவனது திருவடிகளை வணங்குதலால் படுகின்ற ஒளி பொருந்தும் மணிமகுடங்கள் தன் காலிலும் படப்பெறுகின்ற நந்தியாகிய எம் தலைவன், தாங்கும் கைகளில் அடிகள் பட அடித்து, அச் சபையிலுள்ளாரை இரு பக்கங்களிலும் விலக்கி, மணம் கொண்ட மாலையுடைய பிரம்போடு, களித்துத் திரிந்தனன்,

முடிவுகள் சங்குகள் எழுப்பும் பேரொலி

45. அழகிய வாணாசுரன் என்பவனும் பானுகம்பன் என்ப வனும், பெய்யும் பெருமழை மேகம் போல், பெருங்குரல் உடைய முழவுகளையும் களங்க மற்ற நிறைமதி போன்ற வெள்ளிய சுழிந்த முகமுடைய சங்குகளையும் யாவரும் கை களால் காதுகளைப் பொத்திக் கொள்ளுமாறு கைகளாலும் வாய்களாலும் முழக்கினார்கள்.

O வாணாசுரன் தன் ஆயிரம் கைகளாலும் முழவம் அதிர்த்தான்; பானுகம்பன் தன் ஆயிரம் வாய்களாலும் சங்குகளை முழக்கினான்.

அவையில் இருந்தோர் மகிழ்ச்சிச் செய்கைகள்

46. அவையில் நெருங்கினோரில் சிலர் துதிப்பர் சிலர் பாடுவர் சிலர் துள்ளிக் குதிப்பர் சிலர் கைகளால் தோள் இணையில் கொட்டி அதிர்ப்பர் சிலர் நெஞ்சம் நெக்கு நெக்குருகி உடல் நடுக்கம் எய்துவர்.

ஒளிப் பெருக்கம்

47. விரிந்த பேரவையிலே, பல்வகைப் போர்க்கருவிகளின் ஒளியும் தேவர்களின் மேனி ஒளியும் தாங்கிய பொன்னரி மாலைகளின் ஒளியும் தேவமகளிரின் மூங்கில் போலும் தோள்களிடத்துள்ள அணிகளின் ஒளியும் ஆகிய இவையெல்லாம், இருளானது இறைவனின் கழுத்தினிடத்திலே, அடைக்கலம் புகுமாறு நிறைந்தன.

O இறைவனின் மிடற்றில் நஞ்சக் கறை இருந்தது; மற்று எங்கும் பேரொளி மிக்கிருந்தது.

இறைவனுக்கும் இறைவிக்கும் சொற்போர் (11)

48 இவ்வாறு சபை நடுவே இருந்த கடவுளை வினவ வேண்டும் என்ற ஒரு செயலை நினைந்து எம் தாய் தன் வாய் திறந்து சர்க்கரையும் அமுதும் கசக்குமாறு சொல்லத் தொடங்கினாள்;

இறைவியின் வினா

49. ''தலைவ, நின் அவையில் வந்திருக்கின்ற பெருநலம் உடைய இவர் எல்லோரும் கொடிய பிறப்பு எய்தி அலையாமல் பேரின்பம் (முத்தி) அடைவார்களா அல்லது பிறவியில் அலைவார்களா கூறுவாய்'' என்று கேட்டாள்.

இறைவனின் விடை

50. அதற்கு எம் தந்தையாகிய இறைவன், ''விளங்கும் அணிகலன்களை உடையவளே, உன் வினா நன்றாயிருந்தது. திருமால் அயன் முதலானோர் பெயர் வடிவுகளோடு பிணிக்கப் பட்டுள்ள வினைத் தொடர்பு இருக்கிற காரணத்தால் வீடு பேறு அடைய மாட்டார்கள்'' என்றான்.

வினையை வெல்லச் சூழ்ச்சி கூறுமாறு இறைவி கேட்டல்

51. ''அப்படியானால் பெயர் வடிவு வினைகள் ஆகியவற்றை வெல்லத் தக்கதான உபாயம் ஒன்று சொல்வாய்'' என்று பனிமலையரசன் பெற்ற பவளவாய் மடந்தை கூற, அரும்பு அவிழ்ந்த கொன்றை அணிந்த இறைவன் சொல்வான்:

உலகில் பிறந்துதான் விடுதலை பெற முடியும் என்று இறைவன் கூறல்

52. ''எக்ம் ஆதலாகிய பேரின்பப் பேற்றைத் தேவருலகில் போகத்தை நுகர்தற்குரிய தேவ உடம்பைக் கொண்டு அடைய முடியாது; செயல் உலகாகிய நிலவுலகில் மக்கள் உடம்பு கொண்டால் தான் அடைய முடியும். ஆகவே உலகத்தை அடைந்து யோகமாகிய நெறியில் நின்றவர்கள் மெய்யறிவு பெறுவதை நிறைவேற்றிக் கொள்வார்கள்''

மெய்யறிவு தர வல்ல ஆசான் யார் என்று இறைவி கேட்டல்

53. என்று இவ்வாறு தன் கொழுநனாகிய இறைவன் கூற இளங்கொடி போல்பவளாகிய இறைவி, ''அத்தகையது ஆனால் உலகில் ஒவ்வொருவரும் ஒப்பில்லாத ஞானநிலைப் பேற்றை நன்றாக அடையும்படி உணர்த்தவல்ல ஆசான் யார் என்று சொல்வாயாக'' என்று கேட்க, முடியில் தரித்துள்ள பிறையைப் போல முன்பு மேருமலையை வளைத்த கடவுள் சொல்லத் தொடங்கினான்:

எமது தத்துவ வடிவே அல்லமன்; அவனை உன்னால் காண முடியாது என்று இறைவன் கூறல்

54. "முன் ஒரு காலத்தில் உயர்ந்த சுஞ்ஞானி (நல்லறிவு உடையவன்) தூய நிராங்காரன் (ஆணவம் அற்றவன்) என்ற பெயர் கொண்ட தாய் தந்தையர் அளவில்லாத் தவங்கள் செய்ததாலே எம் தத்துவ சொரூபத்தால் அல்லமன் என்ற பெயர் கொண்ட புதல்வனாக அவர்களுக்குப் பிறந்தோம். அத்தகைய அல்லமனை, வில் போலும் நெற்றியை உடையவளே, காணுதல் என்பது உனக்கு மிகவும் அரிதாகும்'' என்றான்.

அல்லமனை அறிதல் எளிதே என்று இறைவி கூறல்

55. என்று அவன் சொல்லிய அளவில் இமையவல்லியாம் இறைவி "(எல்லாவற்றுக்கும் காரணமாய் நிற்கும்) எனக்கு அரிது என்று சொல்லக் காரணம் யாது? உன் கூறாகிய தனி அல்லமனின் உண்மையை அறிதல் எனக்கு மட்டுமல்லாமல் இச்சபையின்கண் இருப்போர் எல்லோருக்கும் எளிது" என்று கலங்கி உரைத்தாள். பகைவரின் முப்புரங்களை எரித்த அழகிய நகைப்பை உடையவனான இறைவன் சொல்வான் :

அல்லம தேவரின் இயல்பினை இறைவன் கூறுதல்

56 "மாதே,சினவாதே.வீணான உன் சொல்லளவில் நிற்பவன் அல்லன், அல்லமன். வினைளை ஒழித்துநின்ற அன்பர் அன்பால் வேண்டிய வடிவனாகி அந்த அன்பர்களின் கண் முன்னே காண அருளுவன். அவ்வல்லம தேவனது இயல்பு யாராலும் உரைத்தற்கு அரியது" என்றான்.

மாயையால் அல்லமனைக் காண்பேன் என்று இறைவி கூறல்

57."(அல்லமனை யன்றி)வேறாக உள்ளவர்க்கு (அயன் அரி முதலானவர்க்கு) என்னாலே செய்யப்படும் மாயையானது பொய்யான் நிறைந்த செயலினின்றும் (அல்லமனாகிய) அவனிடத்துத் தப்பிப் போமாகில் இச்சொல் (உன் சொல்லளவில் நிற்பவன் அல்லன் என்ற சொல்) உண்மையாகும். அது காண்பேன்" என்று உமையவள் செருக்குற்றுச் சொல்லியதும், கடவுள் "உனது வல்லமையைக், கருமை நிறைந்த கூந்தலை உடையவளே, பார்ப்போம்"என்று சொல்லுவான்;

இறைவியின் நெடுமொழி

58. "பொன்போல் விளங்கும் தேமல் படர்ந்த மார்பையுடைய மாதே, இவ்வண்ணமாகச் சூள் உரைத்து இனி வறிது (சும்மா) இருப்பாயாகில் அதனால் உனக்குத் தோல்வி உண்டானதாகும்" என்று அண்ணல் உரைத்ததும் அதற்கு இமையவல்லியாம் இறைவி "எனது சொல் ஒருபொழுதும் பழுது படாது"என்று தனது மேம்பாட்டு உரையைச் சொல்லி, அதன் பின்பு,

### மாயையை இறைவி நிலவுலகிற்கு அனுப்புதல்

59. அவ்விடத்தில் பக்கத்தில் நின்ற தமோகுண வடிவம் ஆகிய மாயையை அழைத்து, "நீ நிலவுலகு சென்று அல்லமன் என்னும் பெயரை உடைய தலைவனை அறிந்து வரக் கடவாய்" என்று சொல்லி ஏவுதல் செய்தாள். மாயை அவளை வணங்கிச் சொல்லத் தொடங்கினாள்.

O அல்லமப் பேர் நாயகனை அறிந்து வரல் என்றது அவனைக் காம வேட்கையில் வசப்படுத்தி அவன் கருத்தை அறிந்து வா என்ற குறிப்பு உடையது.

### மாயையின் சூளுரை

60. "அல்லமனது தன்மையை அறிந்து அங்குக் கூடுவேன்; அகப்படாமற் போவானாகில் மிகவும் வலிமை செய்து பற்றி இழுத்துக் கொண்டு இவ்விடம் வருவேன்" என்று ஒரு சூள் மொழி புகன்றாள். ஒரு சிற்றெறும்பானது கடல் வற்றுமாறு குடித்து விடுவேன்" என்று வல்லமை சொல்வது போல் இருந்தது அந்தச் சூளுரை.

O மிகப் பொருத்தமான உவமை.

### மாயை நிலவுலகு அடைய நினைத்தல்

61. விளங்கும் இழைகள் அணிந்த மாயை, தனது அளவை அறியாதவளாய் மயங்கி, தண்மதி தவழும் சடையையுடைய இறைவனின் அவையில் நின்று தான் சொல்லிய அந்தச் சூளை முடித்தற் பொருட்டு ஆதிசேடனாகிய பாம்பின் முடியினாலே தாங்கப்பட்ட பூமிக்குச் செல்லுதலை நினைத்தவளாகி அதனை அடைந்தாள். O

# 3. மாயையின் உற்பத்தி கதி

கதைக் குறிப்பு : ஆசிரியர் கூற்று

1. ஒரு கைப்பிடியில் அடங்கும் படியான நுண்ணிடை உடைய மாயை என்ற மாது மாதவத்தோரின் நெஞ்சம் கலங்குறப் பூவுலகை அடைந்து சாதமுற்று (பிறந்து) வளர்ந்த செய்தியைச் சொல்லுவாம்.

O சாதமுற்று என்பதற்குப் பிறந்து என்பது பொருள். சோறு உண்டு என்ற பொருளும் ஒலிக்கிறது.

மாயை பிறந்த விளவல நாடு

நாட்டு வளம் (4)

2. களங்கம் உடைய வெண்மதியின் மனத்தைக் கவலைப் படுத்தும் ஒப்பற்ற ஒளி செய்யும் சங்கினை உடையவர் திருமால். அவர் வளமிக்க மண்மகளை மணம் புரிந்த காலத்து அவளது மார்பில் அணிந்த மதாணி (பதக்கம்) போல் அழகில் சிறந்து விளங்கியது விளவலம் என்ற தேயம்.

O வளமாவன, நீர் வளம் நில வளம் குடி வளம் முதலியன.

O புவியினுக்குப் பேரழகு செய்தலால் விளவல தேயம் பதக்கம் போன்றிருந்தது.

O வெண்மதி கவலையுறக் காரணம், அதனிடம் கறை இருந்தமையும் சங்கினிடம் அஃது இல்லாமையும் ஆகும்.

அந் நாடு மன்மத இராச்சியம்

3. அந் நாட்டில் குளங்கள் எல்லாம் காமனின் அம்புக் கூடுகளாக இருந்தன. வயல்கள் யாவும் அவன் எடுக்கும் வில் நிலைகளாக இருந்தன. சோலைகள் எல்லாம் அவனது வாத்திய சாலைகளாக உள்ளன. மங்கையர் உறையும் இல்லங்கள் அவனது போர்க்களங்களாக இருப்பன.

O குளங்கள் யாவும் தாமரை கருங்குவளை மலர்களுக்கும் (அவை மன்மத பாணங்கள்) வயல்கள் எல்லாம் கரும்பு

களுக்கும் (அவை காமன் சிலைகள்) சோலைகள் எல்லாம் குயில்களுக்கும் (காமன் திருச் சின்னங்கள் அவை) மங்கையர் (காமன் படை) வீடுகளெல்லாம் இன்ப விளையாட்டுக்ளுக்கும், இடமாயிருத்தலின் இங்ஙனம் வேறு விதங்களால் கூறினார்.

O பிறிதின் நவிற்சி அணி.

O இதனால், தொலைவிலாப் போகம் துய்த்து வாழ்வதற்கான விண்ணாடு போன்றது விளவலம் என்பது குறிப்பால் உணர்த்தப் பெறுகின்றது.

O நாட்டு வளம் நகர வளம் முதலியவற்றில் கவிஞரது கற்பனைத்திறம் வளமிக்கு இருப்பது காணலாம்.

பண்பாட்டுக் கயிறுகள்

4. அந் நாட்டில், பொறுமையாகிய கயிற்றால் புகழையும், இன்சொல் ஆகிய வெற்றி பொருந்திய கயிற்றினால் விருந்தினரையும், குருவின் உரையாகிய வேதாந்தப் பொருள் என்னும் கயிற்றினால் நெஞ்சத்தையும், நல்லறமாகிய கயிற்றினால் செல்வத்தையும் கட்டுவோர் (கட்டுப் படுத்தி வைத்துள்ளோர்) எங்கும் உள்ளனர்.

O உருவக அணி.

குபேரன் அனந்தன் காமன் ஆகியோரை விட

5. பூபொழில்களின் மணம் மிகுந்து உலாவுகின்ற விளவல நாட்டுக்குக் குபேரன் வந்தால் அவன் வறியவன் ஆவான். ஆதிசேடன் வந்தடைந்தால் அறிவிலன் ஆவான். கரும்பு வில்லியான காமன் வந்தால் அழகிற் சிறியவன் ஆவான்.

O செல்வம் அறிவு அழகு ஆகியவற்றில் முறையே சிறந்தோர் குபேரன் அனந்தன் மன்மதன் ஆகியோர். அவர்கள் விளவல நாட்டுக்கு வந்தால் சிறுமை உடையராகக் காணப்படுவர். அதற்குக் காரணம் விளவல நாட்டு மக்கள் அவர்களை விடப் பன் மடங்கு செல்வம் அறிவு அழகு ஆகியவற்றில் விஞ்சி நிற்பதேயாகும்.

வனவசை மாநகர்ச் சிறப்பு

நகர் வளம் (14)

6. இணையிலாத இத்தகு வளங்கள் பலவும் பொருந்தி இருக்கின்ற விளவல நாட்டில், வனவசை மாநகர் அந்நாடாகிய பதக்கத்தின் நடுவே பதிக்கப் பெற்ற விலையில்லா நாயக மணிபோல் விளங்கியது.

O புவி மடந்தையின் மார்பில் அணியப் பெற்ற பதக்கம் போல்வது விளவல நாடு. அதன் தலைநகரம் பதக்கத்தின் நடுவண் அழுத்தப் பெற்ற சிறந்த மணி போன்றிருந்தது. மற்றைய நகர்கள் நடுநாயக மணியைச் சுற்றியுள்ள பிறமணிகள் போன்றிருந்தன என்பதாம்.

பூமி வெடித்து ஆதிசேடன் முடிமணி ஒளி கிளர்ந்தது

7. நிலத்தின் உள்ளே வேர்ப்பலா பழுத்ததால் ஒண்புவி வெடித்தது. அங்ஙனம் வெடித்த வழியில் (பூமியைத் தாங்கும்) ஆதி சேடனின் முடிமணியினது கதிர் (மேலே பாய்ந்து) விண்ணின் நடுவில் இருந்த முழுமதியைத் தொட்டது. அப்பொழுது அது, காம நோயினர் மேல் சினமுற்ற காமனது குடைக்காம்பு போல் தோற்றம் அளித்தது.

O முழுமதியைத் தொட்ட (முடிமணிக்) கதிரொளி குடைக் காம்பு போன்றும் மதி குடை போன்றும் இருந்தன என்பது கருத்து. தற்குறிப்பு அணி.

O நாட்டின் வளமிகுதி பற்றிய இவ் வருணனை கவிஞரின் அதீதமான கற்பனைக்குச் சான்றாக உளது.

துறவிகள் போல் வண்டுகள்

8. இல்லறத்தோரது மனைதோறும் ஐயம் ஏற்று உண்ட துறவறத்தோர் தம் குகைகளில் சென்று அடங்குதல் போன்று, மலர்ந்த நறுமலர் தோறும் தேனை மிகவும் உண்டு வண்டுகள் தம் கூடுகளில் சென்று அடங்கும்.

O உவமையணி.

கொள்ளையும் கூப்பாடும்

9. களி வண்டு இனம் தடாகங்களில் உள்ள செய்ய தாமரை களில் இராப் பொழுது விரும்பித் துயின்றன. விடிதரு காலை யில் காவிற் சென்று அவ்விடத்துள்ள குயில் இனங்கள் கூவ, தண்மதுவைக் கொள்ளை கொண்டு உண்ணுகின்றன.

O தற்குறிப்பு.

O ஊரிலே புகுந்து அங்கிருப்பவற்றை அயலார் கொள்ளை கொள்ளுங்கால் அவ் வூரார் கூப்பாடு போடுவர். அங்ஙனமே சோலைக் குயில்கள் கூவுகின்றன. குயில்கள் இயல்பாகக் கூவுவதைத் தேன் கொள்ளையைப் பார்த்துக் கூவுவதாகக் கவிஞர் வருணிக்கிறார்.

வெள்ளம் வந்தும் மடை உடையாமை

10. தத்தம் பேடுகளோடு கூடி, பிரிதலில்லாத பைங்கிளிகள் குடியிருக்கின்ற குளிர்ந்த சோலையிடத்துப் பூந்தாதினை வண்டுகள் சென்று உதிர்த்தன. அங்ஙனம் உதிர்க்காது இருக் குமாயின் அம் மலர்களிலிருந்து ஒழுகிப் பெருகும் தேனின் வெள்ளமானது கழனிகளின் மடைகளை உடைத்து விடும்.

ஆற்றுப் பாய்ச்சல் சிறப்பு

11. சேல்கள் விளையாடித் திரிதற்கு இடமான ஆற்று நீரா னது, பெரிய யானை மறையும் அளவாகக் கதிர்களைத் தலையிலே கொண்ட நெற்பயிர் ஓங்கிச் செழித்து விளை கின்ற கழனியிடத்துக் கால்களால் ஓடி விரைவிலே விழும்.

O கால்களால் ஓடி என்பது சொற் சாதுரியம். இங்கு வாய்க் கால்களால் ஓடி என்பது பொருள்.

வயல் காமன் செங்கை நிகர்த்தல்

12. விரிக்கும் அழகிய சிறகுகளையுடைய மென்னடைப் பறவைகள் இருக்கும் வயலானது, நெடிய மீனும் செந்தாம ரைப் பூவும் வரிகளையுடைய சங்கும் இருக்கின்ற காரணத் தால், மலர்களாகிய கணைகளைத் தாங்கு, தலால், கரும்புவில் இருத்தலால் காமனது செங்கையை நிகர்த்திருந்தது.

O உத்தம நாயகனாகிய மன்மதனின் கை, மச்சரேகை பதுமை ரேகை சங்க ரேகை உடையது.

O சிலேடை பற்றி வந்த புணர்நிலை அணி.

குளங்களில் மிகுதியான சங்குகள்

13. குளிர்ந்த கடலில் துயிலும் திருமால் தனது வடிவைப் (சாருப்பியம்) பெற எவருக்குக் கொடுப்பாரோ அவர்களின் கையில் கொடுப்பதற்கான சங்குகள் தோன்றும் இடங்கள் என்று சொல்லுமாறு வண்புனல் குளங்கள் எல்லாம் சங்குகள் நிறையப் பெற்றிருந்தன.

அகழியின் ஆழம், மதிலின் உயர்ச்சி

14. தாழ்ந்தோர் உயர்வர் என்றும் மிக உயர்ந்தோர் தாழ்வர் என்றும், அற நூல்களை ஆராய்ந்தோர் கூறியுள்ள உறுதி மொழியை அறிந்துள்ளோம்.

[அதற்குச் சான்றாக வனவசைமா நகரத்து அகழியும் மதிலும் விளங்குகின்றன.]

மதிலைச் சூழ்ந்து கிடந்த பழைமையான அகழியானது கீழே தாழ்ந்து தாழ்ந்து சென்றமையால் ஒப்பற்ற ஆதிசேடனது மணியை உடைய முடியின் மேல் போய் நின்றது! மதிலானது உயர்ந்து நிமிர்ந்து மேலே சென்றமையால் அது, மேருவை வலம் வந்து உதயகிரியில் உதிக்கின்றவனது (சூரியனது) அடியின் கீழ்ப் போய் நின்றது!

O மதில் சூரிய மண்டலம் எட்ட உயர்ந்திருந்தது, அகழி நாகலோகம் வரை ஆழ்ந்திருந்தது என்பதனைத் திறம்படக் கூறுகிறார் கவிஞர்.

O வேற்றுப் பொருள் வைப்பணி.

O ''தாழ்ந்தோர் உயர்வர் என்றும் மிக உயர்ந்தோர் தாழ்வர் என்றும் அறம் சூழ்ந்தோர் உரைக்கும் உரை கண்டாம்''

பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து

என்பது திருக்குறள்; அதற்குப் பிறரது உரையாகப் பரிமேலழகர், ''இதற்கு உயர்ந்தோர் தாழ்வார், தாழ்ந்தோர் உயர்வார் இஃதொரு விரோதம் இருந்தவாறு என் என உலகியலை வியந்து கூறிற்று ஆக்குவாரும் உளர்'' என்று எழுதும் கருத்து இங்குப் பாடலில் இழைவு பெற்றுள்ளது. அறம் என்றது திருக்குறளை.

நால்வகைப் போர்கள்

15. அந் நகரில், நான்மறை ஆறங்கம் அறிந்த அந்தணர்கள் தத்துவம் சார்ந்த சொற்போர் புரிவார்கள். நெடிய சிலை (வில்) ஏந்திய இராமனைப் போன்ற வெற்றி வேந்தர்கள் விற்போர் புரிவார்கள். பிறர் பொருளையும் தம் பொருள் போற் கருதி (கொள்வது மிகையாகவும் கொடுப்பது குறைவாகவும் இன்றி நியாயமாக) வாணிகம் செய்யும் வாணிகர்கள் பொற்போர் (பொன்குவியல்) புரிவார்கள். வேளாண்மை நெறியினர் நெற்போர் புரிவார்கள்.

O இராமனைப் பற்றிய குறிப்பு இதில் வந்துளது.

O பிறவும் தமபோற் செயின் வாணிகம்-என்ற திருக்குறள் கருத்து ஆளப்படுகிறது.

O சொற் பின் வருநிலையணி.

அந் நகரத்தின் ஒரே குறை

16. அந் நகரம் தான், உடுப்போர்க்கு உடுத்தற்கு வேண்டிய ஆடைகளாலும், உண்போர்க்கு வேண்டும் உணவுப் பண்டங்களாலும், தொடுப்போர்க்கு வேண்டிய மலர்களாலும் அணிவோர்க்கு வேண்டிய ஒளியுடைய அணிகலங்களாலும், குடியிருப்போர்க்கு வேண்டிய வீடுகளாலும் எந்தவிதக் குறைபாடும் இல்லாதது. ஆயின், கொடுப்பார் கொடுக்கும் பொருளைப் பெறற்கு இரப்பார் (பிச்சைக்காரர்) இல்லாத குறை ஒன்று உடையது.

O வஞ்சப் புகழ்ச்சியணி. குறையே யில்லாத நகரம் கம்பரது கற்பனையை நினைவு படுத்துகிறது.

யானைகளும் குதிரைகளும்

17. அந் நகரத்து வீதிகளில் யானைகளும் குதிரைகளும் செருக்குடன், நீங்காமல் திரிகின்றன.

ஈசன் தந்த ஒற்றைக் கொம்பையுடைய யானைக்கு, இரண்டு கொம்புகளை உடைய நாங்கள் நிகர் ஆயின், இந்திரனைச் சுமக்கும் நான்கு கொம்பு யானைகள் எங்களை நிகர்க்கும் என்று களிக்கின்ற கயிற்றால் கட்டப்படும்— உரலைப் போன்ற கால்களை உடைய - யானைகளும்,

(இரண்டு உருளைகளை உடைய) வண்டிகளை இழுக்கின்ற கடாக்கள் தம்மின் உயருமாயின் (ஓர் உருளையை உடைய) சூரிய ரதத்தை இழுக்கின்ற குதிரைகள் (ஒன்றினையும் இழுத்துச் செல்லாத) எம்மிற் சிறந்தனவாம் என்று களிக்கின்ற குதிரைகளும், வீதிகளை விட்டு நீங்கா.

O ஆசிரியருடைய கற்பனை புதுமை பொதிந்து பொலிகிறது!

O இரண்டு கொம்பு உடைய எங்களை விட ஒற்றைக் கொம்பு யானைக்கு (விநாயகருக்கு) மதிப்பு அதிகம் தரப்படுகிறது. ஆகவே நான்கு கொம்பு உடைய ஐராவதத்தை விட (இரண்டு கொம்பு உடைய) எங்களுக்குப் பெருமை அதிகம் என்கின்றன யானைகள்! சுற்றித் திரியும் இரண்டு சக்கர வண்டியை இழுக்கும் எருதுகளை விட, ஒற்றைச் சக்கரத் தேரை இழுக்கும் (சூரியனின்) குதிரைகள் உயர்ந்தனவாகக் கருதப்படுகின்றன. ஆகலின் ஒன்றையும் இழுக்காமல் சும்மா திரியும் நாங்கள் உயர்ந்தவர்களே என்கின்றன தெருவில் அலையும் குதிரைகள்!

### அந் நகரில் பலவகை ஒலிகள்

18. மறைகளும் அறுபத்து நான்கு கலைகளும் முழங்குகின்ற ஒலிகளும், மங்கல வினைகளின் பொருட்டு அடிக்கப்படும் தோற்கருவிகளும், குழல் யாழ் ஆகியவற்றின் ஒலிகளும், யானை குதிரை நிறைந்துள்ள வீதியின் கண் ஓடுகின்ற மணித் தேர்களின் ஒலியும், கடலின் கரையை மோதுகின்ற அலைகள் போல் ஒன்றோடொன்று தொடர்ந்து சென்று வானத்தில் உள்ள அமரர் செவிகளை அடைக்கும்.

### அந் நகரின் வளத்தைச் சொல்லுதல் அரிது

19. மூங்கிலைப் பழிக்கின்றன என்று கூறத்தகும், சுடர்த் தொடி அணிந்த தோள்களை உடைய உமா தேவியிடம் விடைபெற்றுக் கொண்டு, பேயும் பிரிந்து வர விரும்பாத

கைலை மலையை விட்டுப் பிரிந்து இந்த நிலவுலகை அடைந்து, முனிவர் தம் தூய மனமும் கலங்கவும் மன்மதனின் பருத்த தோள்கள் பூரிக்கவும் மாயை பிறந்தது வனவசை மா நகரில் என்றால் அந்நகரின் வளத்தை யாரால் சொல்ல முடியும்?

மன்னன் மமகாரன் சிறப்பு (3)

20. இந்த வனவசை மா நகருக்கு அரசாகி இருந்து வாழ்வோன், திருமால் சேரும் செயலுக்கு உரிய மாதரை மார்பின்கண் வைத்திருத்தல் வீணானது, புகழைத் தருவது அன்று என்று சொல்லும்படி, வெற்றித் திருவைத் தோளில் வைத்திருப்போன், கைம்மாறு விரும்பாத மேகம் போல்கின்றவன், மமகாரன் என்ற பெயருடையவன்.

O கைம்மாறு வேண்டா கடப்பாடு, மாரி என்ற திருக்குறள் தொடர் இங்கு இழைந்துள்ளது.

அவனது சீரும் ஆற்றலும்

21. தனக்குத் திறை செலுத்தும் திறல்வேந்தர்க்கு, அவர்கள் காணுதற்கு அரிய மேம்பாடு உடையவன். குறை தீர்க்கும்படி இரக்கின்றவர்க்கு விரைந்து போய்க் காணும்படி எளியனாக நிற்பவன் மதநிறை மலைபோலுள்ள எட்டுத் திக்கு யானைகளும் ஆதிசேடனும் நின்று சுமக்கின்ற புவிப் பொறையைத் தான் ஒருவனாகவே சுமக்கின்ற மிக்க வலி பொருந்திய தோளை உடையவன்;

அவனது கொடைப்புகழ்

22. திருமாலின் ஓரடியில் அடங்கிய இந்த ஞாலம் இரப்பார் வந்து கேட்பின் எளியதே அன்றி ஒளித்து வைப்போர் மறைத்து வைக்கும் பொருள் அன்று என்று நினைக்குமாறு கொடைபுரிதலைக், கற்று உரைப்போர் உரைக்கின்ற சொற்களை எல்லாம் தனது புகழில் வைத்தவன், மண்ணுலகில் உவமை இல்லையாகச் செருக்குற்று வாழ்வோன்.
O உரைப்பார் உரைக்கும் உரைஎல்லாம் ... ஈவார்மேல் நிற்கும் புகழ் என்பது திருக்குறள்.

அவன் மனைவி மோகினி (2)

23. அத்தகைய மமகாரனுடைய மனைவியானவள், வணங்கிய நெடிய கூந்தலையும் அழகிய வேற்கண்களையும், மின்னுங் கொடி போலும் இடையானது தளர்ந்து அசைந்து வருந்துமாறு பருத்துப் பொன்போல்கின்ற தேமல் படரப் பெற்ற ஆரங்களைக் கொண்ட மார்பையும், உடைய மலர்க் கொம்பு போல்பவள்; இனிமையால் நிறைந்த அமுதம் போலும் சொல்லையுமை மோகினி எனப்படுகின்ற பெயரை உடையவள்;

இணையற்றவள்

24. மறைமுடிவிற் சொல்லப்பட்ட ஒரே பொருளான கடவுளின் பக்கத்து இருக்கின்ற இறைவியால் அனுப்பிவிடப்பட்ட மாயையானவள், தளராத வலிமையுடைய முனிவரது மனம் தளரும்படியாக, அழியாத அழகுடன், இங்கு இப்புவியின் கண் இவளது பொலிவு பொருந்திய கருப்பத்தை அடைந்து பெற்றாள் என்றால் இவளுக்கு உவமையாக இனி யாரைச் சொல்வாம்?

அவ்விருவரும் நோன்புகள் செய்தல்

25. இம் மமகாரனும், மோகினி என்ற கருங் கூந்தலும் வாள்விழியும் உடையமாதும், அழகிய மகவு ஒன்றும் தங்களுக்கு இல்லாமையால் மிக்க துன்பம் எய்தி உடல் மெலிதற்கு ஏதுவாகிய நோன்புகள் செய்தார்கள்.

O மமகாரன், மோகினி, மாயை என்பன ஆட்களாக உருவகம் செய்யபட்ட பண்புகள். மமகாரம், என்பது எனது அல்லாததை எனதாகக் கொள்ளுதல். மோகம் என்பது, விரும்பத் தகாததை விரும்பச் செய்யும் தீக் குணம். மாயை என்பது, பொருளல்லதைப் பொருளாகக் கொள்ளும் மயக்க உணர்வு. காப்பியச் சுவையோடு தத்துவம் புகட்டுதற்காக இங்ஙனம் தொடர் உருவகங்கள் ஆசிரியரால் இனிமையுறப் படைக்கப் பட்டுள்ளன.

### மாயை மோகினியின் கருப்பையை அடைதல்

26. பயன் கருதிய நோன்புகள் செய்த மோகினி மாதின் வயிற்றிலே உமாதேவியின் தண் அருளால், நிலைபெற்ற இயல்பினையுடைய மன்மதனது வலத்தோள் துடிக்க, கன்னிகையாகிய மாயையானவள் கருப்பத்தைச் சேர்ந்தாள்.

### கருப்ப கால அடையாளங்கள்

27. முத்து வடத்தால் அலங்கரிக்கப்பட்ட கொங்கை முகங்கள் கறுத்தன. வடிவத்தின் அழகிய நிறமானது வெண்மை அடைந்தது. நரம்புகள் பசுமை யுற்று அந் நிறத்தை மேனி எங்கும் பரவச் செய்தன. பொய்த் தூக்கம் கொண்டு புளிஞ் சுவைப் பொருள்களை உண்ண மகிழ்ந்தாள்.

O தன்மை நவிற்சியணி

### கருவுயிர்த்தமை

28. இவ் வண்ணமாகப் பத்துத் திங்கள் இருந்து பின்பு மோகினி, தனக்குத் தானே ஒப்பாகவுள்ள வலம்புரிச் சங்கு ஒன்று இனிய ஒளிமுத்தினை ஈன்றது போன்று, பெண் மகவைப் பெற்றாள்.

O உவமையணி.

### பிறந்தநாள் விழா (2)

29. மங்கல மங்கை மோகினி மகவைப் பெற்ற நாளிலே சங்கும் மத்தளமும் பிரமதாளமும் ஊதுகொம்பும் விருப்பம் தரும் உடுக்கையும் வாரால் இறுக்கப் பட்ட முரசுகளும் மன்மதனின் முரசாகிய கடல் போல் ஒலி செய்தன.

### அந்தணர்க்கு அளித்தல்

30 ஆண்டகை மன்னன் மமகாரன், தூண்டப்பட்ட விளக்குப் போல் மகள் தோன்ற உவப்புற்று, அந்தணர் கொள்ள அணிகலன் ஆடை சிறந்த மணி பொன் நிலம் ஆகியவை அவரவர் விரும்பியவற்றை, வெறுக்கும் அளவு மிகுதியாகக் கொடுத்தான்.

### மன்மதன் மலர் சொரிதல்

31. இவ்விடத்தில் மாயை என்றொரு எழில் முளை தோன்

றிய மாத்திரத்தே பொங்கும் உவகை நெஞ்சில் பொறுக்க மாட்டாதவனாகித் தன்னாலே எய்யப்படும் வெங்கணை மாரியும், தூவும் மென்மலர் மாரியும் ஒன்றாக மதனவேள் எங்கணும் தான் ஒருவனே நின்று ஒழிவின்றிச் சோரிந்தான், ஆச்சரியம்!

O ஒப்பு உயர்வு இல்லாத அழகே ஒரு பெண் வடிவு கொண்டு பிறந்தது... ஒருவனே ஒரே சமயத்து எல்லா இடத்திலும் இருந்து, துன்பம் தரும் கணைமழையும் இன்பம் செய்யும் மலர் மழையும்-அவை இரண்டும் ஒன்றேயாகப் பொழிதல் ஆச்சரியம். கற்பனைநயம் அருமையாக உள்ளது.

தவம் செய்வோர்க்கு அப்போது நேர்ந்த இடையூறு

33. அப்படி மலர்மாரி பொழிந்த காலத்து, இடம் அகன்ற நிலத்தில் உள்ளனவாகிய கங்கைக் கரையிலும் மலைக்குகையினிடத்தும் புண்ணிய வனத்தும் சென்று மேலே மரம் முளைக்கவும் யோகத்தில் இருந்தும், பனிக் காலத்தில் நீரின் நடுவில் வேனிற் காலத்தில் நெருப்பில் நடுவில் சேர்ந்து உணவும் துயிலும் துறந்தும், செய்யப்பட்ட தவத்தை உடைய முனிவரது மனங்களும் (அவ்வாறே பிற மாந்தர் மனங்களும்) மயக்கத்தில் மூழ்கிப் பதைத்தன.

அதன் காரணத்தை முனிவர்கள் ஆராய்தல்

33. ஐம்பெரும் பூதங்களும் அவற்றைப் பற்றிய சராசரங்களும் நிலைகுலைந்து அழியவரும் முடிவு காலத்திலும் நடுக்கமில்லாத நமது நெஞ்சம் இப்போது கலங்கியதற்குக் காரணம் யாதோ? புதுமையாகிய இந்தச் செய்கையானது இங்கே வந்த வழி எவ்வழி என்று, தத்துவப் பொருளை உணர்ந்த சீர்சால் முனிவர்கள் சிந்தித்திருந்த பொழுது,

துருவாசர் அப்பொழுது அங்கு வருதல்

34. சோர்ந்த இடத்து உதவுகின்ற கல்வி போல, துருவாசன் என்ற பெயருடைய ஒப்பற்ற முனிவர் தலைவன் அங்கே அடை

தலும் முனிவரெல்லாம் அவர் உள்ளம் மகிழும்படி நின்று துதி செய்து உயர்வாகிய இருக்கை மீது அமரச் செய்து சிறப்பமைந்த மலர்களை அவர் திருவடியில் சொரிந்து தொழுது இதனைக் கேட்டார்கள்...

O தளர்ந்துழி உதவும் கல்வி போல என்பது அழகான உவமை.

முனிவர்களின் கேள்வி

35. ''ஐயனே! எக் காலத்தும் எங்கள் உள்ளம் எல்லாம் ஓவிய விளக்குப் போல அசைவற்று இருக்கும். இன்று என்ன காரணத்தாலோ தென்றல் முன் இருந்த செவ்விய சிறிய விளக்குப் போல் அசைந்து (அணையாமல்) ஆடிக் கொண்டிருக்கின்றன. இதன் காரணத்தை யாங்கள் நன்கு அறியும் படி சொல்லி அருள வேண்டும்'' என்று வேண்டினர்.

O தென்றல் முன் இருந்த செய்ய சிறு சுடர் என்பது மிகப் பொருத்தமான உவமை.

அதற்குத் துருவாசர் சொன்ன விடை

36. ''செய்தவ உரிமை பூண்ட முனிவர்களே! இறைவி (இறைவனோடு செய்து கொண்ட) ஒரு சூளால் தனது தமோகுண வடிவமான மாயை என்னும் மங்கையை நிலவுகிற்கு அனுப்ப, அவள் வனவசை நகரில் பிள்ளைத் திங்களைப் போன்று உதித்திருக்கிறாள். அதனால் உங்கள் நெஞ்சின் ஆற்றல் உடைந்தது'' என்று அம் முனிவன் அவர்களுக்குச் சொன்னான்.

ஐயம் நீங்கியது என்றனர் முனிவர்

37. ''அருந்தவ முனியே! நீ கூறியது உண்மையே. அந்தக் காரணம் அல்லாமல், பெருந்தவ முயற்சியுள்ள எங்கள் மனங்கள் கலங்குவதற்கு வேறு காரணம் இல்லை. இங்கே இருந்து நெஞ்சம் வருந்தி ஆராய்ந்த எம்மிடத்துத் தோன்றிய ஐயம் எல்லாம் நீ எழுந்தருளியதால் நீங்கப் பெற்றோம்' என்று சொல்லி,

விரிவாகக் கூறுக என்று கேட்டல்

38. முனிவர்கள் துருவாசரை வழுத்தி, 'பனிமலை வல்லி யாகிய இறைவியால் ஏவப் பெற்று எழில் மிக்க மாயை என்னும் மாது இவ்வுலகில் வருவதற்கு உள்ள காரணத்தை யாங்கள் இனிது உணருமாறு ஓதுக'' என்று கேட்க, அவன் உரைப்பான்:

கயிலை நிகழ்ச்சியைத் துருவாசர் கூறல்

39. ''கயிலாயத்தில் திருவோலக்கத்து இருந்த கண்ணுதற் கடவுள், 'அல்லமனது தன்மையை நீ அறிய மாட்டாய்' என்று உமா தேவியிடம் கூறினன். மயில் போலும் சாயலை உடைய அவ் உமையானவள், 'என்னால் அறிய முடியும்' என்று கூறி விளக்கைக் கண்டு வருதற்கு இருளை விடுத்த தன்மை போல் அதனைச் செய்ய மாயையை விடுத்தாள்.

O உவமையணி.

மயக்கம் விலகத் துருவாசர் கூறிய வழி

40. ''எம் அரசாம் பரமனது கயிலையை விட்டு மாயை தாரணி வருவதற்கு இதுவே காரணம். மாயை எனப்படும் சாவு தரும் நஞ்சு கலத்தலால் வருகின்ற மயக்கமானது அல்லமன் என்ற பெயருடைய கருடனைத் தியானித்தலால் நீங்கி விடும்.

O உருவகம். நஞ்சு நோய் தீரக் கருடமந்திரம் கைகொடுக் கும் என்ப.

எல்லா நன்மையும் அருளும் அல்லமன்

41. ''நோய்கெட வேண்டினாலும் வாழ்நாள் மிகுதியாயுற வேண்டினாலும் செல்வம் அடைய வேண்டினாலும் கல்வி கற்க விரும்பினாலும் விண்ணுலகத்தார் பணிதலை விரும்பி னாலும் முத்தியாகிய பயனை விரும்பினாலும் இணையற்றுத் திகழும் அல்லமன் என்னும் பெயரையுடைய எந்தையை நினைப்பர்'' என்று, ...

O இறையன்பு, குருபக்தி எல்லா நலனும் நல்கும் என்பதாம்.

முனிவர்கள் போற்றுதல்

42. ... புகன்று, முனிவர்களின் மனத்திலுள்ள துக்கத்தை நீக்கித் துருவாசர் அவ்விடத்தினின்றும் நீங்கித் தம் உறைவிடம் அடைந்தார். அந்த நாள் தொடங்கி அருந்தவத்தோர் அருளாளனாகிய அல்லமனின் மலரடிகளை மனத்தில் தாங்கி அவன் புகழையெல்லாம் விரும்பி உரைக்கலுற்றார்கள்.

முனிவர்கள் தவம் செய்தல்

43. நெஞ்சமாகிய அகலில் (தகழியில்) அன்பாகிய நெய்யை நிறைத்து, கருத்து ஆகிய திரியின் உச்சியில் பற்றிட, அல்லம தேவப் பெயர் விளக்கை ஏற்றி முனிவர்கள் மாயையினால் உண்டாகிய இருளைப் போக்கிப் பழைய மாதவங்கள் செய்து வாழ்ந்தார்கள்.

O உருவக அணி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

44. மந்தரகிரி எனப் பெயர் பெற்ற மத்தினால் கலக்கப் பட்ட கடல்போல் முனிவரது மனங்கள் கலங்கி மெல்லத் தெளிந்த வகையைச் சொன்னோம். இனி, மண்ணுலகில் வந்து பிறந்த அன்றே மாதவர் மனம் கலங்க வைக்கும் வெய்ய திறல் உடைய மமகாரனின் மகள் செய்தியைச் சொல்லத் தொடங்குகிறோம்.

மமகாரன் மகளுக்குப் பெயர் சூட்டல்

45. காந்தக் கல்லினால் ஈர்க்கப் படுகின்ற இரும்பானது அதனோடு ஒன்றுதல் போல் பார்வைகள் தன்னோடுறக் கட்டிக் கொண்டு எல்லாவற்றையும் கொள்ளுதற்கு இயைந்த மனம் ஒரு பரமாணு வடிவம் உடையது என்று நூலோர் சொல்லுதல் நியாயமன்று என்று கூறும்படி, அம் மனத்தில் தன்னைப் பற்றி உண்டாகிய ஆசை என்னும் பெருங்கடலைப் புகவிடுகின்ற மகளைக் கண்டு மகிழ்ந்து மமகார மன்னன் மாயை என்று பெயர் சூட்டி மற்றும் பல சடங்குகளையும் செய்தான்.

O நியாய நூற் குறிப்பு.

மோகினி மகளை வளர்த்தல் (4)

நீராட்டிப் பொட்டு வைத்தல்

46 மாயைப் பெயர் கொள் மகளை, நறுமஞ்சள் பூசி, கணைக்காற்களின் மேல் பொருந்தக் கிடத்தி, நீராட்டி, இரண்டு கண்களிலும் அது விழாமல் ஒதுக்கி, உச்சி நீரை ஊதி, விருப்பம் செய்யும் ஆடையினால் உடம்பைத் துடைத்து, நெகிழ்வான மென்மார்போடு சேரத் தழுவி, வாயின் எச்சில் துளி கொண்டு இழைத்து மண்பொட்டு இட்டு, திரு நீற்றுக் காப்பிட்டு. .

O தன்மை நவிற்சியணி பழக்க முறைகள்.

அணிகலன்கள் அணிதல்

47. கண்களுக்கு அழகு பொருந்த மை எழுதி, கால்களுக்குச் சதங்கைகள் பொன் தண்டைகள் பொருந்த அணிந்து, பொன் அரைஞாண் இடையிலே பூட்டி, புலிநகம் சேர்த்த அழகிய பொன்னாலான பதக்கத்தை மார்பிலே அணிந்து, சிறுமென் வளையல்களைச் சேர்த்து, பெண்களுக்கு அரசியாகிய அவளது அழகிய நெற்றியாகிய பொன்னிறப் பிறைமேலே சுட்டி (நெற்றிச் சுட்டி) ஒன்று கட்டி...

தொட்டிலில் கிடத்திச் சீராட்டுதல்

48. கண் பார்வையால் வந்த குற்றத்தை, அதைப் போக்குதற்குரிய பொருளினாலே போக்கி, ஆசையோடு தாய்ப்பால் உண்பித்து, தூக்கப்பட்ட பவளக் கால்களையுடைய பசும் பொன் தொட்டில் நிறையுமாறு கிடத்தி (படுக்க வைத்து) ''பார்த்து மகிழ்கின்ற இனிமை சிறந்த அமிர்தமே! பார் வேந்தனின் அணியே! என் துயரம் தீர்க்கும் கருப்பே! கண் மணியே! திருவே'' என்று சீராட்டி ..

மகளை வளர்த்த அருமை

49. ஒரே வயலை உடைய வறியவன் அவ் வயல் பயன் தரும்படி காப்பாற்றுகின்ற செய்கை போலவும், ஒப்பில்லாத கல்வியை விரும்பினோன் பாடத்தைக் காக்கும் செய்கை போலவும், கெடுதலில்லாத செங்கோலை உடைய வேந்தன்

உயிர்களைக் காப்பாற்றுகின்ற செய்கை போலவும் வருத்தத்திற்கு ஏதுவாகிய நோன்புகளைச் செய்து பெற்ற பூங்கொடி போன்ற மகளை, மோகினி தீயன விலக்கி நல்லன செய்து முழுக் கருத்துடன் வளர்த்தாள்.

O உவமைகள்

மாயை வளர்தற் சிறப்பு (4)

அழுதும் சிரித்தும் மாயை கிடத்தல்

50. வஞ்சகம் உடைய மாயையின் அழகு போல் யான் கண்டதில்லை என்று மிகவும் உள்ளம் வியந்து தலை அசைப்பது போல அசைகின்ற விளக்கினைப் பார்த்தும், விரல் ஒன்றை மெள்ளச் சுவைத்தும், விளங்குகின்ற அழகிய சதங்கையை உடைய கால்களை உதைத்துக் கொண்டு, விரிந்த மலர்போலும் வாயைக் குவித்து அழுதும் திரும்பச் சிரித்தும், கிடக்கும். ...

O தற்குறிப்பு. கற்பனை வளம் இனிமை செறிந்துள்ளது.

மன்மதனின் செயல்வேகம்

51. மாயை முகம் கவிழ் பருவம் அடைந்தாள். அது காறும் நாணி முகம் கவிழ்ந்து கிடந்த மன்மதன் இப்பொழுது நிமிர்ந்து உட்கார்ந்தான். மாயை உட்காரும் பருவம் அடைய அவன் முன்பு கைவிட்டு விட்ட வில்லை இப்பொழுது எடுத்து எழுந்தான். பொன்னால் இயன்ற பாவையென மாயை எழுந்து நிற்கும் பருவம் அடைய, விரும்பிய அம் மன்மதன் நடைபோடலானான். வேந்தன் மகளாகிய அவள் நடக்கும் பருவம் அடைதலும் தூயதவம் செய்து ஐந்து ஆசைகளையும் ஒழித்த துறவிகளின் இடத்துக்கு ஓடினான் அவன்.

O கற்பனை வளம் நயம் பெற நடைபோடுகின்றது.

மாயை மழலை பேசுதல்; அடிசில் அளைதல்

52. புள்ளாங் குழலின் இசையும் வீணையின் இசையும் இன்பம் தருவன என்று கூறமுடியாதபடி, மென்கனி போன்ற

வாயினால் உருத்தெரியாத சொற்களைப் பேசியும், உடம்புக்கு இன்பம் உண்டாக ஓடி மேல்விழுந்தும், விரும்பும் அமிர்தத்தினும் மிகவும் இனிமை தர உண்ணப்படும் அறு சுவை உண்டியைச் செழுமை பொருந்திய சிறிய கைகளால் குழப்பியும், ஈன்றோர்க்கு மோகம் (விருப்பம்) உண்டாக்கினாள்.

O குழலினிது யாழினது ...

O அமிழ்தினும் ஆற்ற இனிதே...

O மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்,

என்ற குறட்பாக்களின் சொல்லும் பொருளும் அழகுற இயைபு பெற்றுள்ளன.

O தன்மை நவிற்சியணி,

மாயையின் குழந்தை விளையாட்டு

53. உலகம் முழுதும் பரவிய பெருஞ் சிறப்புடைய அல்ல மனைப் பிடிக்க வந்த மதி போன்ற அவளது மதியினால் தனது உருவநிழலைப் பிடிக்க நினைந்து ஓடியோடி அழுவாள். ஒப்பில்லாத திங்கள் பிற்காலத்தில் கோபித்துக் கொதிக்கின்ற நெருப்பை வீசாதிருக்கும்படி மருவி உறவு கொள்பவள் போல அதனை 'வாவா' என்று அழைத்திடுவாள்.

O கற்பனைத் திறம் தற்குறிப்போடு அழகு பெற்றுள்ளது.

மாயை பெதும்பைப் பருவம் அடைதல்

54. மாயை யானவள் இவ் வாறாகத் தந்தை தாய் மகிழ வளர்ந்து, அரசு செய்திருந்த அரசன் இறந்து விட அவன் வழியில் தோன்றிய இளம் சேய் (மகன்) அவனது அரியணையில் இருப்பது போல் முன்பு முளைத்திருந்த வெண்பற்கள் விழுந்துவிட அவ்விடத்து வேறு பல் முளைக்க, பேதைப் பருவம் கடந்து அதன்மேல் வருவதாகிய பெதும்பைப் பருவம் அடைந்தாள்,

O உவமையணி

பெதும்பைப் பருவ வளர்ச்சி (4)

காதில் தோடுகள்

55. தொழில் வல்ல கம்மாளனாலே செய்யப்பட்ட சிங்கம் சுமந்த மணியணைமேல் மெள்ள வந்து மணிக் கிரீடம் அணிந்த வேந்தன் கொலுவிருக்கும் தன்மை போல் வெவ்விய தக்கைகளானவை வளர்த்து அவை அகன்றுபோக சிறந்த வள்ளை போலும் காதுகளிடத்துத் தூய பசும்பொன்னிலே மணிகள் பதித்துச் செய்யப் பெற்ற– ஒன்றுக்கொன்று ஒப்பாகிய- குண்டலங்கள் பொருந்தத் தோன்றினாள்.

O உவமையணி.

கண்களிற் சிறிது நஞ்சு

56. தேன் பொதிந்த மலரம்புகளை ஏந்திய காமனுக்குக் காட்டுக் கோட்டையாக வளர்த்த கூந்தல் காடு அலரொடு கலந்து (மலரொடு கலந்து, பழியோடு கலந்து) கட்டுப்படுதலைப் பெற்றது. கண்கள் நம் இறைவனின் கழுத்தில் உள்ள நஞ்சின் குணத்தைச் சிறிது பொருந்தின. துறந்தோராகிய பறவைகள் முட்டுதலைச் செய்து மயக்கமாகிய கண்ணியிலே அகப்படுதலை மெல்ல எட்டிப் பார்ப்பன போல மார்பிலே இளமுலைகள் முகம் கொண்டு எழுந்தன.

O உருவகம். தற்குறிப்பு

O காடுபோன்ற கூந்தல் முடியப் பெற்றது. கண்களில் கவர்ச்சி உண்டானது. கொங்கைகள் எழுந்தன என்பதாம்.

நடை, மொழி, செருக்கு

57. அன்னப் பறவையின் நடையும் அன்னத்தை விட்ட (உண்ணாது நோற்கும்) ஐயர்களது (முனிவர்களது) நடையும் (ஒழுக்கமும்) சோர்வடையும்படி மாயையானவள் நடக்கும் நடை கற்றாள். கரும்பு கசக்கிறது என்று கூறுமாறு இன்சொற்களைப் பெற்றாள். வளம் மிக்க மலரின்கண் வீழ்கின்ற வண்டுகள் போலும் காளையரது பார்வையின் (காமக்) குறிப்பை அறிந்தாள். அதனால் தன்னை மிகவும் அரியவள் என்று அறிந்து தானே மனத்தில் தருக்குற்றாள்.

O ஒப்புமைக் கூட்டணி.

O அன்ன நடையும் அன்னமிலா

ஐயர் நடையும் தளர்வெய்தக்
கன்னி நடக்கும் நடை கற்றாள்
கரும்பு கசக்கும் மொழிபெற்றாள்

என்பது மாயை நடந்து வருவது போன்ற காட்சியை நம் கண் முன்னே கொண்டு வரும் சொற் சித்திரம். இவ்வாறு கவிஞர் ஆங்காங்குக் கருத்துக்கு ஏற்பச் சொல்லாட்சி புரிதலை இந் நூலுட் பலவிடத்தும் காணலாம்.

O கரும்பு கசப்பித்தல், உயர்வு நவிற்சி.

O செருக்கு; வடிவம் அழகு இளமை ஆகியவற்றில் பிற மகளிரைத் தன்னில் தாழ்வாகக் கருதுதல்.

படையெடுப்புக்கான காமனின் காலப் பொருத்தம்

53. இந்தக் கன்னி (மாயை; கன்னி இராசி) யினது மதி (முகம்; சந்திரன்) முழுப் பார்வையைப் பெற்று, செவ்வாய் சிவந்த வாய்; அங்காரகன்) வலிமையை அடைந்து, அழகிய சிங்கத்தை (இடையை; சிங்க இராசியை) அடுத்த தகுதி யுடைய அரவு (இராகு; நிதம்பம்) வலியையும் சேர்ந்து நிற்க, முதன்மையாகிய மீனக்கொடியை உடைய தலைவனான மன் மதன், முனிவர்களாகிய பகையை வெல்ல மணத்தையுடைய மலர்ப் பகழிகள் பலவற்றை வேழமாகிய கரும்பு வில்லிலே தொடுத்தான்.

O கவிஞரது சோதிடப் புலமையும் கற்பனைத் திறமும் அற் புதமாக இணைந்து சிலேடை யணியாக மலர்ந்துள்ளன.

O கூறப்பட்ட காமன் செய்தியில், கன்னி இராசியில் இருக் கிற சந்திரனது முழுப் பார்வையும் செவ்வாய் பலமும் சிங்க இராசியில் இருக்கிற இராகுவின் வலியும் ஆகிய கோசார பலன் கண்டு போருக்கு எழுகின்ற அரசரின் செய்தியும் இணைந்துள்ளது.

O உருவக உயர்வு நவிற்சியணி.

மாயை மங்கைப் பருவம் அடைதல்

59. பக்குவமாகப் பொங்கி எழுகின்ற அன்னம் போலப் பொங்குகின்ற வளர்ச்சியை உடைய, மோகத்தைச் செய்கின்ற மாயையினது பருவத்தை நினைத்து, முடிவேந்தனானவன், நான்முகனும் கண்டு மயங்கத் தக்க ஒரு கன்னி மாடம் நிரு

மாணித்து அதன் கண் கல்வி பற்பலவற்றையும் அவற்றை முடிவுறக் கற்றுவல்ல மகளிர் பலரும் சூழ்ந்து நிற்க அவரோடு சிந்தித்துக் கொண்டிருக்கச் செய்தனன்.

O பாகமாகப் பொங்கி எழும் பதமே போலப் பொங்கும் எழில் என்பது வனப்பின் வளர்ச்சி குறித்த அருமையான உவமை. எழில் என்பது எழுச்சியுற்றுத் தோன்றல். பொங்கும் எழில் என்பது ஒருகாலைக் கொருகால் வளரும் அழகு.

O உண்பதற்குச் சமைந்த உணவு போல் நுகர்ச்சிக்குச் சமைந்த வளர்ச்சி பெற்றனள் என்பதாம். மங்கைப் பருவம் அடைந்தமை இதனால் பெறப்பட்டது.

O ஆய கலைகள் பலவும் மாயை கற்றனள்.

மாயையின் பொழுது போக்கு (5)

இசைப் பயிற்சி

60. தனக்குப் பொருந்தியுள்ள அவ் அழகிய மணிமாடத்தை அடைந்து பாமாலை பற்பல பழகியும், நரம்பாகிய நாவை உடைய ஒப்பற்ற யாழைத் தன் மாணாக்கன் என்று சொல்லு மாறு இயங்கும்படி தடவுகின்ற விரல்களால் பேசுவித்தும்...

பாடல் ஆடல்

61. அங்கே ஒரு மங்கையானவள், தண்ணுமை (மத்தளம்) முழக்க, மங்கையர் சிலர் இராகங்களை முறைப்படி பாட, பசுங்கொடி ஒன்று மணம் விரிந்த மலரின் கண் வண்டு ஒலி செய்யத் தென்றலால் அசைதல் போல் மாயை பாடியும் ஆடியும்.

பந்தடித்தல்

62. வளருகின்ற மார்பாகிய அரசனுக்கு நேராக (பந்து) வர, கையாகிய வேலையாள் (அதனை) அடித்துத் துரத்தும் காட்சி போல், மணம் பொருந்திய மலர் அணிந்த கூந்தலின் மேலே வண்டுகள் ஒலித்தெழும்படி, பருத்த முத்துக்கள் பதித்துச் செய்யப்பட்ட மெல்லிய பந்துகளை அடித்தும்...

O பந்தடித்தலை அங்ஙனம் புடைத்தலாகக் கூறியது தற் குறிப்பு. உருவகம் கலந்தது. பந்தும் கொங்கை போல்

இருத்தலால் கொங்கையின் வேலையாள் ஆகிய கை அதனை அடித்து விரட்டுதலாகக் கூறினார். அரசனுக்குப் போட்டியாக வந்தால் அரசனின் ஏவலாள் சும்மா இருப்பானா? அடித்து விரட்டத்தானே செய்வான்?

அணிகலன்; சுவையான பானம்

63. மலர்மாலையை நெடிய கூந்தலில் சூடியும், நல்விரை (வாசனை)ச் சந்தனம் கத்தூரி ஆகியவற்றை விளங்கப் பூசியும், பல உறுப்புகளுக்கும் பொருந்த ஏந்திழை அணிந்தும், குடிப்பதற்குத் தகுந்த பலவகைச் சுவையுடைய பானங்களைக் குடித்தும் ...

கிளி வளர்த்தல்

64. செம்பொன்னால் ஆகிய கூண்டில் பச்சைக் கிளியைத் தீங்கனி பாலொடு உண்பித்துத் தன் சொல்லை அது பேசும்படி கற்றுக் கொடுத்தும், கற்பகப் பூங்கொம்பு போன்றவள் காலங் கழித்து வருகின்ற சமயத்தில் ஒரு நாள்,

மணத் தலைவனைத் தேர்தல் (8)

தன் மகள் மணம் குறித்து மன்னன் எண்ணுதல்

65. பாண்டியன் சோழன் சேரன் கொங்கண மன்னவன் மாளுவன் மகதநாட்டு இறை எனப்படும், உலகத்துள்ள மன்னவருள் என் புதல்வியின் திருமணச் செயல் எவரிடத்ததோ என்று நினைத்து...

குரு வருதல்

66. மமகாரன் ஆய்ந்திருந்தானாக, அவன் தன் குருவாக வழிபடும் சாந்தமான அகங்காரன் என்னும் தகுந்த பெயரை உடையவன் அவ்விடத்து வந்தான். அரசன் எதிர்கொண்டு அழைத்து விதிப்படி வணங்கினான்.

O மமகாரனுக்குக் குரு அகங்காரன். பொருத்தமான உட்பொருள்.

அகங்காரன் மாயையைக் காணல்

67. அவ் ஆசிரியன் அரசனது வழிபாட்டை முறைப்படி ஏற்றுக்கொண்டு, மாயையின் வளர்ச்சியையும் நற்குணத்-

தையும் காணுதற் பொருட்டு அவள் இருக்கின்ற இடம் சென்றான். அவள் எதிர் நடந்து வந்து ஆசிரியனைத் தலையால் வணங்கிச் சிறப்புச் செய்தாள்.

மாயை காரண மாது என்று அறிதல்

68. மாந்தளிரையும் ஆல் இலையையும் விளங்கு கோங்கின் அரும்புகளையும் அழகிய தாமரை மலரையும் அடைந்து அற் புதப் பூங்கொத்தினை உடைய ஒரு கொடி போன்ற அந்தத் திருவைக் கண்டு அவ் ஆசிரியன் சிந்தித்து இவள் ஒரு காரணம் பற்றி அவதரித்த மாது என்று உணர்ந்து கொண்டான்.

O கை வயிறு கொங்கை முகம் ஆகியவற்றை அவற்றுக்குரிய உவமைகளால் குறிப்பிட்டுள்ளார். உருவக உயர்வு நவிற்சி.

குருவின் கேள்வி

69. மாயையின் வடிவக் குறிப்பைச் (இரேகை, இலட்சணம் முதலியன) சிந்தித்து நன்கு அறிந்த ஆசிரியன், ஆதரவோடு அரசனைப் பார்த்து, ''உன் புதல்வியைத் தோளில் கொள் பவர் (மணப்பவர்) யார் சொல்லுக'' என்று கேட்டான் அரசன் அதற்கு ..

அரசனின் விடையும் வேண்டுதலும்

70. ''அடியேன் அறிந்திலேன். ஆகையால் மனிதருடைய யவும் தேவருடையவும் கணங்களுள் நம்முடைய ஒப்பற்ற கோதை தன் திருமணத்துக்கு உரியவராகிய ஒருவரை நீ திருவுளத்து அறிந்து பொருந்த எனக்கு இங்கே சொல்லுக' என்றான்.

சங்கரனே இவள் தலைவன்

71. ''மணம் விரி மாலை அணிந்த மன்னவா! ஆகாச கங்-கையை அடைய வல்லது கூன் கொக்கு (வளைவை உடைய கொக்கு) அன்று; தெய்வத் தன்மை உடைய அன்னமே ஆகும். (அவ்வாறே) இப் பெண்ணைச் சேர வல்லவர் மனி தர் அல்லர். நம் சங்கரனே. (இன்பம் தரும் இறைவனே) இவளுக்குத் தலைவன்'' என்று குரு உரைத்தனன்.

O எடுத்துக் காட்டு உவமையணி.

"இறைவன் இவளுக்கு எளியனோ?"

72. "திருமாலும் நான்முகனும் தேடி அறிதற்கு அரிய வள்ளல் (இறைவன்) இந்தச் சாந்தம் பூசிய நெடிய கூந்தலை உடையவளுக்கு எளியனோ?" என்று அரசன் வினவ அதற்குக் குரு, "நஞ்சு பொருந்திய கண்டத்தை உடைய கடவுள், அன்பர் வேண்டிய வடிவினன் ஆகிச் சேருவன். இஃது உண்மையான சொல்" என்றான்.

மாயைக்குக் குரு உபதேசம்

73. இன்னணம் அரசனிடம் இயம்பிய தன்னிகர் குருபரன், மாயையாம் கன்னியை அழைத்து அவளது கருத்து இணங்குறச் செம்மையான கடைப்பிடியை உபதேசித்துப் (தீட்சை அளித்து) பின் தனது இருப்பிடம் ஏகினான்.

மாயை மதுகைநாதனை வழிபடல்

74. குருவினது அருளுரையை உட்கொண்டு மாயை உயர்வாகிய வனவசை நகரில் உள்ள மதுகை நாதனை, பூசனைக் கருவிகள் யாவும் குறைவறத் தேடிக்கொண்டு வழிபாடு ஆற்றினாள்.

O மதுகை – வலிமை. நாதன் - தலைவன். இறைவனே அனைத்து வல்லமையும் தலைமையும் உடையவன். O

# 4 மாயை பூசை கதி

கதைச் சுருக்கம் : கவிஞர் கூற்று

வரி பரந்த விழிகளை உடைய மாயை, தலைவனை அடைய வேண்டும் என்ற காதலை நெஞ்சகத்தினுள் பதித்து மதுகைநாதனை வரன்முறைப்படி உதய காலையில் பூசை செய்து வரும் நாட்களுள் ஒரு நாள் செய்வதியைக் குவிந்த மனத்தை யுடைய சான்றோர் கொள்ளும்படி யான் விரித்து ஓதுவன்.

ஞாயிறு உதயம்

2. சந்திரனைத் தூரத்தில் கண்டு மலர்கின்ற கருங்குவளை மலர்கள் வாடவும், ஒளி மிகுந்த அணிகள் அணிந்த இளமையான தனங்களை உடைய அழகிய மாயையின் முகமாகிய சந்திரனைச் சேர்ந்த வரிபொருந்திய கண்களாகிய கருங்குவளை மலர்கள் மலரவும், குதிரை பூண்ட தேரினை உடைய கதிரவன் கீழ்த்திசைக் குன்றில் எழுந்தான்.

O கருங்குவளை மலர்கள் மெலிய, மாயையின் கண் களாகிய கருங்குவளை மலர்கள் மலரச் சூரியன் உதித்தான்.

துயில் நீங்கி மாயை எழுந்து நீராடுதல்

3. அன்னத்தின் மெல்லிய இறகால் அமைந்த படுக்கையின் மீது தனியளாகிப் பெருமை பொருந்திய ஒரு மயிலைப் போல் துயில் செய்தவளாகிய மாயை அந்தக் காலைப் பொழுதில் உறக்கம் நீங்கி, வேலைப்பாடு மிக்க நீராடும் சாலைக்குட் சென்று தோழிப் பெண்டிர் நறுமணம் ஊட்டிய புனல் எடுத்து ஏந்த நீராடினாள்.

கடபடாம்

4. பின்னர், விலை வரம்பு அறியா மணி மாலை சூழ்ந்த கரையை உடைய பட்டாடை உடுத்து அவ் ஆடையின் ஒரு முன் தானையைத் தனங்களின் மீது அழகு பெற அலங்கரித் தாள். அவளது தனங்களோடு பொருந்திய துகிலைக் கண்ட நாள் முதல் அல்லவா, தருக்க நூல் கற்றுத் திகழும் அறிஞர் கட படாம் என்று கூறுகின்றனர்?

○ கட படாம் : குடமும் ஆடையும்.

நெருக்கமான உணர்வு (அன்னியோன்ய பாவம்) பற்றிக் குறிப்பிடக் கட படாம் என்று எடுத்துக் காட்டுவார். கடத்தில் படமும், படத்தில் கடமும் என்பது அங்குப் பொருள் ஆகும். [இங்கே அக் கருத்துப் பற்றி வரவில்லை.]

### ஒப்பனை மண்டபத்தை அடைதல்

5. மணி பதித்த பொன் மிதியடிகளைக் கொணர்ந்து சேடி ஒருத்தி மாயை முன்வைக்க அவள் பிணி (கட்டு) அவிழ்ந்த செந்தாமரை மலர் போன்ற பாதங்களில் அவற்றைத் தொடுத்துக் கொண்டு நடந்து போய், அணி அணிந்திடும் அலங்கார மண்டபத்தில் இருக்கைமிசை அமர்ந்தாள். அணி புனையும் வண்ண மகளிர் பலர் அவ்விடத்தை அடைந்தனர்.

○ வண்ண மகளிர்-ஒப்பனை செய்வோர்.

### சடை புனைந்து இயற்றல்

6. மன்மதன் தன் வில் வளையுமாறு பூட்டிய வண்டாகிய நாரியை (நாணியை) ஒரு பக்கத்தில் கழற்றி விட்டாற் போல, ஒரு நாரி (வண்ண மகள்) கார் முகிலும் அவாவும் கூந்தலைச் சடையாகப் பின்னி அலங்கரித்து வீரவேல் போலும் நெடுங்கண்களை உடைய மாயையின் முதுகில் தொங்க விடுத்தாள்.

○ உவமையும் கற்பனைச் சுவையும் நன்கு உள்ளன.

### சூரிய சந்திர அணிகள்

7. பின்னி விடப்பட்ட சடை வடிவாகிய நெடுங்கூந்தல் எனப்படும் கரியபெரும் பாம்பு, முன்பு விழுங்கிய சூரிய சந்திரர்களை உமிழ்ந்து இட்டு வைத்தது போல, பொன்போலும் தேமல் விளங்கும் மார்பை உடைய ஒரு பெண், மாயையின் ஒளிதிகழ் நெற்றி மேல் சூரியப் பிரபை, சந்திரப் பிரபை எனப்பட்ட அணிகளை அழகுபெறப் புனைந்தாள்.

○ உவமை யணி.

### மாணிக்கச் சுட்டி அணிதல்

8. களங்கம் இல்லாத ஒள்ளிய சந்தனப் பொட்டு ஆகிய

வெள்ளிய சந்திரனைக் கவர்வதற்குக் கூந்தலாகிய கருமணல் மேல் வடுப்பெறச் செல்லுகின்ற ஒரு சிறு பாம்பு போல மயிர் நடுவிலே பொருந்தும்படி ஒளி பொருந்திய மாணிக்கச் சுட்டி ஒன்றை ஒருபெண் தொங்க விட்டாள்.

O உருவகம் உவமை கற்பனை இனிமையுற அமைந்-துள்ளன.

காதில் குவளை மலர்

9. மன்மதனின், கொலை செய்யும் நஞ்சு பூசிய கொடிய வேல் போல மையிடப்பட்ட கண்ணானது தன்னோடு போர் செய்ய வருதலினாலே அக் கண்ணின் பகையாகிய குவளை மலரைத் தான் படைத் துணையாகச் சேர்த்து வைக்கின்ற தகைமை போல் தோன்ற, குவளை மலரை ஒரு பெண் அழகிய காதின் மேல் சூடினாள்.

O தற்குறிப்பு அணி.

O கண்கள் காதளவு நீண்டு செல்லுதலால் அவை போர் செய்ய வருவதாகவும், குவளை மலர் கண் போன்று இருத்-தலின் கண்ணின் பகையாகவும் கூறினார்.

காதில் பொன் ஓலைச் சுருள்

10. துறவோரை அடுத்து அவர்களது மாதவத்தை அழியுங்கள் என்று காமவேள் தங்களுக்கு அனுப்பிய ஓலைச் சுருள்களைக் கண்களானவை, யாரேனும் தம்மேல் நிந்தை கூறி-னால் அவ் வோலைகளை அவர் கையில் கொடுத்து அந்த மன்மதன் மேல் நிந்தை சொல்வதற்குத் தம் அருகே வைத்திருந்தது போல் தோன்றுமாறு ஒருத்தி பொன்னோலைச் சுருள்களைக் காதுகளிலே தரித்தாள்.

O துறவிகளின் தவத்தை அழிக்குமாறு மன்மதன் மாயை-யின் கண்களுக்கு ஓலை அனுப்பி யிருந்ததைக் கண்கள் தம் மேல் யாராவது நிந்தை கூறினால் அந்தச் செயல் மன் மதனுடையது, பழிக்கு உரியவன் மன்மதனே என்று காட்டு வதற்கு அந்த ஓலைகளைக் காதுகளிலே செருகி வைத்திருக் கின்றன என்பது கருத்து.

O தற்குறிப்புடன் கற்பனைத் திறம் வளம் பெற்று உள்ளது.

மூக்கில் முத்து (புல்லாக்கு) அணி

11. தன்னை இகழும் வெண்பல் மேல் பழி உண்டாகுமாறு அந்தப் பல் நிலைபெற்று நிகரின்றி வாழ்கின்ற வாயின் முன்னே சென்று 'சாவேன்' என்று நான்று கொள்ளுகின்ற (தூக்குப் போட்டுக் கொள்கின்ற) முறையில் இருக்கிறது என்று தோன்ற வெள்ளை முத்துக் கோத்த மூக்கணியை ஒருத்தி மாயையின் மூக்கில் அணிவித்தாள்.

O தற்குறிப்புடன் கற்பனை வன்மை அழகாக அமைந்–துள்ளது.

O மூக்கின் இரு துவாரங்களுக்கு இடையே சுவர் போல் இருக்கும் பகுதியில் துளைப் போட்டு அணிகின்ற புல்லாக்கு தொங்கிக் கொண்டிருக்கும். அது நான்று கொள் முறையில் இருப்பதற்கு ஆசிரியர் கூறும் காரணக் கற்பனை அபூர்வமானது. வெண்பற்கள் முத்துக்களைப் பழிக்கும் வகையில் இருத்தலால், முத்துக்கள் (பதித்த புல்லாக்கு) தூக்குப் போட்டுக் கொள்வது போல் இருந்தன என்கிறார்.

O தம் காலத்தில் மகளிர் அணிந்த அணிகளை எல்லாம் இப் பகுதியில் வரிசையாக அணிபெற எடுத்தியம்புகிறார் கவிஞர். கன்னட, தெலுங்கு. தேயத்து மகளிர் அந்நாளில் அணிந்த புல்லாக்கு முதலியன தமிழகத்திலும் பரவி இருந்த உண்–மையையும், இந்தக் காப்பியக் கதை கன்னட நாட்டை நிகழி-டமாகக் கொண்டது என்பதனையும் அணிகலன்கள் சில நமக்கு நினைவு படுத்துகின்றன.

கழுத்தில் அட்டிகை

12. அடர்ந்த கூந்தல் நறுமலர் மாலையோடு பாரமாக இருத் தலால் வருந்தும் என்று, விளங்கும் பொற்பூண் சேர்த்ததை ஒப்ப, வில் போல் விளங்கும் ஒளி பொருந்திய நெற்றியும் அழகும் உடைய மாயையின் கழுத்தில், பொன்னால் இயன்ற தகட்டு வடிவம் உடைய அணியை (அட்டிகையை) ஒரு பணிப்பெண் தரித்தாள்.

கைகளில் கடகம் புனைதல்

13. கன்னி மாயையின் கைகள் வந்து ஒரே வகையான

மாணிக்கக் கற்களை உடைய கடகம் என்ற அணிகலனில் நிலைபெற்றது அற்புதம் என்று சொல்லவும், வளைகள் பல வற்றைக் காக்கவும், வில்நுதல் கருங்கண் மடமாது ஆகிய மாயையினது கரங்களில் திகழுமாறு பொன்னால் ஆன நன் மணிக் கடகத்தை ஒரு பூவை புனைந்தாள்.

ஒ கன்னி அத்தம் இனமணிக் கடகத்தில் மன்னி யுற்றது அற்புதம் என...

கன்னி (மாயை) யினது கைகள் வந்து [கன்னியில் இருக்கிற அஸ்த நட்சத்திரம் வந்து] ஒரு சாதியுள்ள மணிக் கற்களை உடைய கடகத்தினுள்ளே நிலைபெற்றது (கூட்டமான முத்துக்கள் போன்ற கற்கடக ராசியிலே நிலைபெற்றிருக்கிறது) என்று இருபொருள் தோன்ற அமைந்துள்ளமை சிலேடை. கவிஞரின் சோதிட நூலறிவு தோன்றும் இடங்களில் ஒன்று இது.

ஒ கடகம் என்பது வளையல்கள் கரத்தை விட்டு நழுவி விடாமல் காக்கும் அணி.

கடகத்தின் முன் பவளக் கோவை

14. ஆய்ந்து கொள்ளப்பட்ட இனிய அறுவகைச் சுவை யுடைய உணவுகளை எடுத்துத் தருகின்ற கையோடு கூடிச் சென்ற அவளது வாயின் ஒளி பொருந்திய சிவப்பு அழகைக் காணுதற் பொருட்டுச் சேர்ந்திருக்குமாறு போல, மாயை யினது கையில் பொற்கடகத்தின் முன் குற்றம் இல்லாத செம் பவளங்களைக் கோத்து மயில் போன்றவள் ஒருத்தி கட்டினாள்.

ஒ வாயின் சிவந்த நிறம் செய்பவளக் கோவை போன்று விளங்குதலின், பவளக் கோவையானது உணவு எடுத்துச் செல்லும் கைகளோடு வாயின் அழகைக் காணச் செல்வது போல் இருந்தது என்ற தற்குறிப்பு, உவமைக் கற்பனை சேரக் கவிதை நலம் பெற்றிருக்கின்றது.

ஒ வளையலுக்கு முன் கடகமும், கடகத்துக்கு முன் பவளக் கோவையும் அணியும் வழக்கம் இருந்தமை அறிய முடிகின்றது.

மார்பில் மணிமாலை

15. நற் செய்கைகளை உடைய காளையரது மனமாகிய சண்கள் வழுக்கி விடாதபடி நடத்தற் பொருட்டு, பூசப் பெற்றுள்ளபடி குங்குமப் பெருஞ்சேற்றினைக் கருதி, இடப் பெற்ற கற்கள் போல் தோன்ற மங்கையர் திலகம் எனத் தக்க ஒருத்தி எழில் மாயையின் கொங்கைகளின் மேல் ஒன்பது வகை மணிகளால் ஆன வடங்களைப் புனைந்தாள்.

O தற்குறிப்புடன் உவமையும் கற்பனையும் இனிதாக இயைந்துள்ளன.

மணிமேகலை புனைதல்

16. பாய்கின்ற வெள்ளிய அலைகளையுடைய கடல் சூழ்ந்துள்ள நிலத்தைத் தன் தலையில் வைத்துச் சுமக்கும் ஆதிசேடனது ஆயிரம் படங்களாலும் கப்பம் செலுத்தினாற் போன்றிருக்கும் உயர்ந்த ஒளி விளங்கும் கதிர்களை விரிக்கின்ற மணிகளால் ஆன மேகலாபரணத்தைத் திருமகள் போன்ற ஒருத்தி, மாயையின் நிதம்பத்தின் மேல் அலங்கரித்தாள்.

O மாயையின் நிதம்பமாகிய அரசனுக்கு ஆதிசேடன் படங்களாகிய சிற்றரசுகள் அஞ்சித் திறை கொடுத்த மணிகள்போல் மேகலாபரணம் புனையப் பெற்றது என்பது தற் குறிப்பும் கற்பனையும் இணையப் பெற்றுள்ளது.

மலர்ப் பாதத்தில் சிலம்பு அணிதல்

17. உரல் போன்ற அடிகளையும் களிப்பையும் உடைய யானை வருவதைத் தெரிந்து வீதியில் இயங்குகின்றவர்கள் அறிந்தோட மணிகளை அதன் இருபக்கத்தும் கட்டுதல் போல், உறுதவ முனிவர்கள் அறிந்து ஓடுவதற்கு ஒன்னிய மாயையின் நறுமலர்ப் பாதங்களில் சிலம்பை அணிந்தனள் ஒரு மங்கை.

O உவமையும் தற்குறிப்பும் கற்பனை நயத்துடன் அழகுற அமைந்துள்ளன.

சந்தனக் குழம்பு பூசுதல்

18 குடலையில் உள்ள மென்மலரை மணத்தினால் அறிந்து

அதைச் சேர்தற்குப் பண் இசைக்கும் வண்டுகள் சுழல்வது போல், ஆடவர் கண்களைப் பரப்புதற்கு, தேடற்கு அரிய பொருள்போன்ற மாயைக்கு நறுமணம் மிக்க சந்தனக் குழம்பைப் பெருமை பொருந்திய குவிதனங்களிடத்தே ஒரு பேதை பூசினாள்.

O கற்பனை, தற்குறிப்பு, உவமை செறிவாக உள்ளன.

O கண்ணாகிய வண்டு வாசனை அறிந்து படிவதற்காகக் கொங்கையிற் குழம்பு என்பதாகும்.

கண்ணாடி காட்டுதல்

19. 'நின்றன் பிம்பமே (வடிவமே) நினக்கு எதிர் (உவமை) அன்றி வேறு இல்லை' என்று காண்பிப்பவள் போலக் கண்களால் காணும் வண்ணம் தெளிந்த ஒரு பெரிய கண்ணாடியை, குன்றுகள் என்று கூறும்படியான குவிமார்பு உடைய மாயையின் முன்னே, வளைவாகிய குழையை உடைய காதுகளின் மேல் சென்று சென்று பாய்கின்ற, அரியும் மதர்ப்பும் குளிர்ச்சியும் கொண்ட கண்களை உடைய ஒரு மாது தாங்கினாள்.

O கற்பனை பொருந்த உள்ளது.

அணிசெயப் பெற்ற மாயையின் தோற்றம்

20. வீரனாம் காமனால் வளைக்கப் படாத செங் கரும்பு, அவன் வில்லினது நாணின்மேல் தொடுக்கப்படாத மலர், களங்கம் இல்லாத ஒளியை உடைய சந்திரன், முகிலைச் சேராத மின்னல், கடலிலே தோன்றாத இனிதாகிய அமுதம், வேர் இல்லாத பூங்கொடி என்று சொல்லுமாறு மாயை விளங்கினாள்.

O வருணனை வளம் அருமையாக உள்ளது.

பூசனைக்கு எழுமாறு ஒரு மாது கூறல்

21. பணி மாதர் இவ் வண்ணம் அலங்கரித்து, ''மதுகை நாதனின் பாத தாமரைக்குச் செய்யப் பெறும் பூசைப் பொருள்கள் பற்பலவும் முறைப்படி நிறைந்தன. இனி நிகரில்லாத

எம் தலைவியே! பூசனை புரியப் போதுவாயாக'' என்று ஒரு மடமாது எதிரில் நின்று புகன்றாள்.

மாயை எழுந்ததும் உண்டான எழுச்சி

22. கோமகளாம் மாயை மயில் எழுந்தது போல் எழுந்தாள். அவளை வாழ்த்திக் குயில்கள் எழுந்தாற்போல மடந்தையர் குழாங்கள் எழுந்தன. அவரடிச் சிலம்புகளின் ஓசை தூக்கத் தினின்றும் எழுந்தாற்போல் எழுந்தது. மணிகளால் ஆகிய அணிகலன்களின் ஒளி வெயில் தோன்றுவது போல் எழுந்தது.

O எழுந்தென எழுந்தன என்று சொற்கள் பின்னும் வந்து அணி செய்கின்றன.

மாயை சிவிகையில் ஏறல், கடல் முழக்கம்

23. சுமப்போர், பொன்னால் இயன்று விளங்கும் தண்டி கையை முன் கொணர்ந்தனர். அதில், மதர்விழி மாயை விரும்பி ஏறினாள். திருச்சின்னங்களும் வெண்சங்குகளும் பேரியும் மத்தளமும் திமிலை (பம்பை) யும் திங்களின் தோற் றம் கண்டு கடல் முழங்குதல் போல் அவள் முன் இரைந்தன.

O உவமையணி.

மகளிர் வேய்ங்குழல் ஊதல்

24. கண்ணன் வாய்க்குழல், பலவிடத்திலும் சிதறி நின்ற பசுக்களை ஓரிடத்திற் சேர்க்கும். இப்புள்ளாங்குழலோ எனில் அழகிய அணிகலன்களையுடைய மான்போல் உள்ள மகளி ரைத் திரட்டுவதாகும் என்று சொல்லுமாறு, அழகிய வில்லு டைய மன்மதனாலே திரட்டி எடுக்கப்பட்ட அமுதம் போல் பவளாகிய மாயைக்கு முன்னே சில மங்கையர், ஆறுமுகத் தையுடைய முருகனும் உள்ளம் குழையக் குழலை ஊதினர்.

O உவமையணி.

மாயையின் சிவிகையைச் சுற்றி மகளிர்

25. திகழும் மாயையாகிய அழகிய கரும்பை விடத் தாழ்ந் தவரும் திருமகளைக் காட்டிலும் உயர்ந்தவரும் ஆகிய மகளிர், ஊற்றாக இருந்து ஒழுகும் தேனையுடைய மலரை விரும்பிச்

சூழும் வண்டுகள் போல, பிறர் கால்களால் செல்லும் (சிவிகை மேல் அமர்ந்து) மாயையின் இருபுறத்தும் இடைவெளி இல்லாமல் நெருங்கிச் சூழ்ந்தனர்.

குடையும் கவரியும்

26. மன்மதன் தனது சந்திரனாகிய குடையை இவளுக்குக் கொடுத்தானோ என்று சொல்லுமாறு வெள்ளைக் குடை யானது. அசைக்கும் வாள் போல் புரளும் மதர்நெடுங் கண் களை உடைய மாயையின் பக்கத்தில் பொருந்திவர, நஞ்சு போலும் கண்களை உடைய மகளிர் பலர் இளங் கமுகின் பாளை போன்ற வெண்சாமரை இரண்டு பக்கத்திலும் வீசினர்.

O தற்குறிப்பணி.

விசிறி வீசுதல் பூ மழை பொழிதல்

27. காமனாகிய வெந்தழலை மூட்டுதல் போல் வாசனை மலர்களால் செய்யப்பட்ட சிவிறி (விசிறி)கள் அசைந்தன. கரும்பு வில் ஏந்திய தடக்கைக் கோமகனான காமன் பொய்யம்புகளைச் சொரிந்து மாயையின் கருத்தை அறிதல் போல், அழகிய திருமகளை வென்ற மகளிர் நெருங்கி மலர் மாரி சொரிந்தனர்.

O தற்குறிப்பு

மங்கலப் பொருள்களும் உடன் போதல்

28. பாக்கு வெற்றிலை சந்தனம் குங்குமம் பச்சைக் கர்ப் பூரம் மகிழ்ச்சி தரும் மான்மதம் (கத்தூரி) நறுமலர் மாலை அணிகலப் பெட்டி துகில் பேழை ஆகிய இவற்றைத் தோகைமார் பலர் மருங்கினில் சுமந்து போயினர்.

அரிவையர் செல்லும் தெரு

29. பெண்களது கொங்கையாகிய குவிந்த தாமரை அரும்பு களாலும், கண்களாகிய கயல்களாலும் வாயாகிய அல்லி யாலும் அழகிய கைகளாகிய தாமரை மலர்களாலும் உந்தியாகிய சுழியாலும் மங்கலம் திகழும் பெண்கள் சென்ற மாளிகை வீதி, பொங்குகின்ற நீர் பெருகும் ஆற்றினை ஒத்து விளங்கியது.

### பல வகை ஒலிகள் கடல் ஒலி போன்றமை

30. திங்கள் போலும் வாளுந்தலை உடைய மகளிரது செம்பொற் சிலம்போசையும் சங்கொலியும் அணிகலன்களின சிறிய ஒலியும் கொங்கு (வாசனை) உலாவும் மலர் மாலைகளில் வண்டுகளின் ஓசையும் கூடிப் பலநீர்த் துளிகள் சேர்ந்து பெருகுதல் போன்று கடலாக மிகுந்து ஒலித்தன.

### பெண்படை சூழ மாயை சென்ற தோற்றம்

31. இவ்வாறு நெருங்கிய மகளிர் சேனை சூழ்ந்துவர அழகிய தோகை போன்ற மாயை, வெற்றி கொண்டு அழகாகச் சுடர் விடும் மழு ஏந்திய சிவன் தன் நெற்றிக் கண்ணால் காமவேளைக் கொன்றது ஏன் என்று அவரை (சிவனை)க் கேட்பம் என்று உள்வலி கொண்டு போகின்ற செயல் போல அந்தத் தெருவிடைச் சென்றாள்.

O தற்குறிப்பு

### மடவார் கூட்டத்தைக் கண்ட ஆடவர் நிலைமை

32. அரிகளும் களிப்பும் குளிர்ச்சியும் கொண்ட கண்களை உடைய நல்ல மாயையினது பக்கங்களில் வரும் மகளிரது வனப்பைக் கண்ட அளவில், தீப்போலும் விழியுடைய ஆண் சிங்கத்தினை ஒத்த ஆடவர்கள், யானையால் உண்டு உமிழப் பட்ட விளாம்பழத்தைப் போன்றவர்கள் ஆனார்கள்;

O உவமையணி. யானை உண்ட விளங்கனியில் உள்ளீடு இராது. கூடு மட்டும் இருக்கும்: யானை என்பது விளங்கனியில் படியும் ஒரு நோய்.

### ஆண்களின் அறிவெலாம் கொள்ளை போனது

33. 'நன்னடைக்குக் காரணமான நமது விரிந்த அறிவையெல்லாம் மகளிரது இடை ஒருசிறிது, வாயாகிய பவளம் சிறிது, இவ்விடத்திலே கொள்ளை கொள்ளுதலாலே அது (அறிவு) முழுவதும் போயிற்று இனி என் செய்தும்?' என்பார்கள்.

### திருநீறும் மயக்கம் உண்டாக்குகிறது

34. ''மனிதர்க்கு உள்ள அறிவு அவர் சேர்ந்திருக்கும்

இனத்தினது இயல்பினை உடையதாகும்' என்று சொல்லப் படுவது உண்மையே. மனத்துயரை உண்டாக்கும் காமத்தை நீக்கும் திருநீறு, அனிச்ச மெல்லடி மாதரது நெற்றியை அடைந்த அளவில் காம மயக்கத்தைச் செய்தலால் எம் உடம்பு வியர்த்து வேகின்றது" என்று சொல்லுவார்கள் ஆடவர்கள்.

O மாந்தர்க்கு, இனத்தியல்ப தாகும் அறிவு என்பது திருக் குறள். அது இங்கே பொருத்தமாக இடம் பெற்றுள்ளது.

கண் நஞ்சைக் கடவுளிடம் உரைப்போம் எனல்

35. ''உமையவளைத் தனது பாதி உடம்பின்கண் உடைய அருள் இறையாகிய மதுகைநாயகன், முன்னொரு காலத்தில் நஞ்சம் வருத்துதலால் வந்த தொல்லையைச் சொல்ல, அந்தத் தொல்லையை நீக்கிக் காப்பாற்றினான். ஆதலால் மாயையோடு செல்லுகின்ற மகளிரது கண்களாகிய நஞ்சு செய்யும் துன்பத்தையும் நாம் தொழுது அம் மதுகேசனிடமே சொல்லுதும்'' என்பார்கள்.

O கற்பனை நன்றாக உள்ளது.

அத்தனை பேரும் அழகிகள்

36. ''இக் கூட்டமாகிய மங்கையருள் வனப்பில் மிக்கவள் யார்'' என்று தங்களைக் கேட்பவர்க்கு எதிர்மொழியாக, ''மா வாழை பலா ஆகிய முக்கனிகளுள் சிறந்த சுவையுள்ளது எக்கனி, அதனை நீங்கள் சொல்லுங்கள்'' என்பார்கள்.

O வினாவுக்கு எதிர்வினாவே விடையாகிறது.

ஆசைப் படுதல் அறியாமையே

37. ''கரும்பினும் மிக இன்பம் செய்யும் செங்கயல்விழி மாதரது, நமக்குப் பயன் படாத, இளம் குரும்பை (கொங்கை) களையும் கோவைக் கனிகளையும் (உதடு) விரும்பி, உலகர் முன் வீணாக நாம் நெஞ்சம் வருந்துதற்குக் காரணம் யாவரும் நகைக்கத் தக்க நம்முடைய அறியாமையே'' என்பார்கள்.

உடம்பெல்லாம் மூடினால் உயிர் பிழைக்கலாம்

38. ''விடம் குலாவும் மதர்த்த விழிகளையும் மணம் பொருந்திய தண்மலர் வனைந்த கூந்தலையும் துவள்கின்ற நூல் போன்ற இடையையும் பிறை போன்ற நெற்றியையும் உடைய, பொன்னாலாகிய பூங்கொம்பு போன்றவர்கள், குடங்கள் நாணத் தக்க இளமையையும் திரட்சியையும் உடைய தமது கொங்கைகளை மூடியது போல் உடம்பு முழுவதையும் மூடினால் உயிர் பிழைக்கலாம்'' என்பார்கள்.

மாயை கோயிலை நெருங்குதல்

39. இத் தன்மையாகக் காளையர் கருத்து அழிந்து மயங்கி நிற்க, கனி இதழ்க் கோதைமாரொடும் மல்லிகை மாலை அணிந்த அழகிய கூந்தலை உடைய மாயை என்று சொல்லப் படுபவள் அந்த அரன் கோயிலின் அருகே போயினாள்.

சிவிகையினின்று இறங்கிப் பணிதல்

40. வெண்குடை மன்னன் மமகாரனின் மகள், சிவிகையி-னின்று இறங்கித், தலைமேல் வைத்த கூப்பிய கைகளோடு கோபுர வாயிலுட் புகுந்து, பாம்புக்கங்கணம் அணிந்துள பரமனின் திருமுன் சென்றாள்,

பூசனை புரியத் தொடங்குதல்

41. அங்ஙனம் சென்றடைந்த மாயை, அப்பூசைக்கு வேண்டிய அனைத்தையும் ஏவல் மெல்லியர் (பணிப் பெண்டிர்) அருகிருந்து எடுத்து அளிக்க, காண்தகு நுதல்விழிக் கடவுளாகிய மதுகேசருக்கு அன்புள்ளம் பூண்டவளாகிப் பூசனை புரியத் தொடங்கினாள்.

நீராட்டத் தொடங்குதல்

42. பூசனைக்கு முதலிலே செய்ய வேண்டியவற்றை முறைப் படி செய்து அருக்கியம் முதலானவற்றைக் கொண்டு, இறைவன் அணிந்த பூ முதலானவற்றைக் களைந்து, மந்திரம் சொல்லி நம் கடவுளை நீராட்டத் தொடங்கினாள்.

O அருக்கியம் பூசனை முறைகளில் ஒன்று. படையலிடுதல்,

மந்திரம் உரைத்தல் முதலியன அதில் அடங்கும். அருக்கியத் திரவியங்கள்: அட்சதை முதலிய எண்வகைப் பொருள்கள்.

O நீராட்டுதல், அருச்சனை செய்தல் முதலியவற்றை மாயையே செய்தாள் என்பது கவனிக்கத் தக்கது.

எண்ணெய் முதலியவற்றால் நீராட்டல்

43. எண்ணெயும் ஆன் (பசு) இடத்து உளவாகும் பால் முதலிய ஐந்தும் (பஞ்ச கவ்வியம்) பஞ்சாமிர்தமும் நல்ல நெய்யும் பாலும் தயிரும் செழித்த தேனும் வயலில் எழும் கரும்பை உடைத்தெடுத்த சாறும் கனிகளைப் பிழிந்த இனிய சாறும் மேக மண்டலம் அளாவிய தெங்கினிடத்துக் கொண்ட இளநீரும் நறுஞ் சந்தனக் குழம்பும் போற்றுகிற நூல் முறைப்படி அமைந்த குடப் பூசை நீருமாகிய இவற்றை யெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக முறைப்படி மதுகேசருக்கு முழுக்கு ஆட்டி,

O அற்றை நாள் பூசனை மரபுகளும் அவற்றுக்கு ஆகம நூல் பற்றிய குறிப்பும் அறியத் தக்கன.

முத்தால் அட்சதை இடுதல்

44. சங்கு (வளையல்) உலாவும் மென்கையும் சுடர் இலை வேல் போலும் விழியும் உடைய மாயையானவள் நீறுமேற் பூத்திருந்தும் மங்களமாக இருக்கும் இறைவனின் திருமேனி முழுதும் சந்தனத் திரளை நிறையச் சாத்தினாள். பின்பு, திங்கள் எனத் தகும் சிறிய வளைந்த முதுகுடைய ஒரு சிப்பியினால் பெறப்பட்டது என வெள்ளிய ஒளி பரப்பும் அக்கதையும், சின வெள்ளை ஏற்று ஊர்தியுடைய கடவுளின் கங்கை முடி மீதினில் இட்டாள்.

திருமேனியில் மாலை ஆடை அணி புனைதல்

45. பிறை தவழும் நெடுஞ்சடை உடைய எம் பெருமானை அடுத்து, 'சர்ப்ப பிராந்தி' மேவ (பாம்பு என்று திகைப்பு உண்டாகும்படி) நறுமென்மலர்த் தொடையல் பல அணிந்தாள். கூரிய மருப்புகளும் தொங்கும் வாயும் சினமும் உரல் போன்ற அடிகளும் உடைய யானையின் தோலைச் சுமந்த (இறைவன்) திருமேனி அழகுற நுண் இழை ஆடையைத்

தரித்தாள். இறைவனின் எலும்பாகிய ஆபாணங்கள் நாண, விளங்கும் மணிப்பூண்கள் (ஆபரணங்கள்) பற்பலவும் எடுத்து அணிந்தாள்.

O சர்ப்ப பிராந்தி, தத்துவச் சொற்றொடர்.

O எளிய கோலமுள்ள இறைவனுக்குச் செல்வச் சிறப்புள்ள ஆடை அணிகள் புனைகிறாள். என்ன முரணிலை!

**உணவு படைத்தல்**

46. நறும்புகை கமழும் நித்திய கலியாணி என்னும் பெயரை யுடைய உமாதேவியின் மணாளனுக்கு (சிவனுக்கு)க் கத்தூரி சாத்தினாள். பிச்சை எடுத்து உண்ணும் உண்டி தவிர வேறு உண்டி இல்லாத கடவுளுக்கு ஊனம் பெற்று விலக்கல் இல்லாத கறிகள் பொருந்திய உண்டிகளை நிவேதனம் செய்து, வண்டுகள் கிண்டிக் குடியிருந்து ஊதும் மணமுள்ள மலர் புனைந்த மென்கூந்தல் மாயை, வெற்றிலையும் உவந்தளித்தாள்.

O முரண் நிலை சுவை கூட்டுகிறது.

**மற்றும் உள்ள சிறப்புக்கள் செய்து வலம் வருதல்**

47. பிறை போன்ற நெற்றியை உடைய மாயையானவள், நெடுங்கடல் போல் இசைக்கருவிகள் முழங்க, முன் நின்று, மணம் தங்கிய புகையும் செழிய தீபமும் மெல்லிய விசிறியும் வெண்கவரியும் நிழல் பார்க்கும் கண்ணாடியும் நெறி முறை யின் படைத்து, கடவுளை இங்ஙனம் பூசை புரிந்து துதி பல செய்து, பெருகும் அன்புடன் மறைநூல் புகலும் ஐந்தெழுத்து மந்திரத்தையும் சொல்லி வலம் வந்து, எதிர் நின்று வணங்கி னாள். பின்னர்...

O பூசனை புரிந்து முடிக்கும் முறை இங்குச் சொல்லப் பட்டுள்ளது.

**ஆடும் அரங்கை அடைதல்**

48. அன்பினால் உள்ளம் உருகி, விழிகள் சொரிகின்ற, பொன்போன்ற மேனியில் உரோமம் சிலிர்ப்ப, வேர்வையி னால் நெற்றிப் பொட்டு அழிந்து, மின் போன்ற நெடுஞ்சடை யை உடைய பொன்மலை போலுள்ள கடவுளது சிவானந்த வெள்ளப் பெருக்கினால் மூழ்கி அந்த இன்பத்தால் கூத்து ஆடுகிறவள் போல் வந்து நடனமிடும் சபையை அடைந்தாள்,

O பக்திப் பரவச நிலையைப் பற்றிய வருணனை இங்கு வந்துள்ளது

### ஆடுதற்கேற்ற கோலம் புனைவித்தனர்

49. அலங்கரிக்கக் கற்ற பணிப்பெண்கள் அரங்கினிடை நடனம் செய்யும் செயலுக்கு ஏற்ப மாயைக்கு உடை அணி வித்தார்கள். கோங்கு தாமரை அரும்புகளை வெற்றி கொண்ட தென்னங் குரும்பை போலும் கொங்கைகளைக் கச்சினால் இறுக்கி, தவங்களை எல்லாம் கொள்ளை கொள்ளும் கருந்தடங் கண்களையும் மலர்க்கோதையையும் உடைய அந்த மாயையின் சிறிய அடிகளில் வண்டுகள் ஒலிக்கும் மல்லிகையின் மெல்லிய அரும்புகள் போலுள்ள சிறிய சதங்கைகள் ஒலி செய்யும்படி கட்டினார்கள்.

### மகளிர் பக்க வாத்தியம் இசைத்தல்

50. மாயையினுடைய தனங்களுக்கு ஒப்பாவேன் என்று, என் முன் தானும் வந்தது என்று நினைத்துப் பொறாமையினால் வலக்கைத் தாளம் போய் இடக்கைத் தாளத்தைத் தாக்குறல் போல் அடித்து ஒலி செய்யவும், வாயால் சொல்லப்படும் சொற்கள் போல் மத்தளமானது செங்கைகளால் வார்த்தை சொல்லவும், விரும்பும் கலைமகள் நாணும்படி எழில் மாதர் வீணை கொண்டு இசை பாடவும்,

O தற்குறிப்பணி

### மாயை நடம் புரிதல்

51. கொடி போன்ற மாயை, 'என்னுடைய ஒரு கையோடு நீர் கைச் சண்டை செய்ய வருவீராக!' என்று நிற்பவள் போல் இடையின்கண் ஓர் கையைப் பொருந்த வைத்து, ஒரு கை நீட்டி, மதுகேசர் சந்நிதியில் நின்று, கன்னல் (கரும்பு), ஏந்திய மதனை (காமனை) 'இங்கே வா' என்று அழைத்தல் போல் காற்சதங்கை ஒலி செய்ய, பொன்னால் இயன்ற ஒரு பாவை நடனம் செய்கின்றதோ என்று மயங்கும்படி நாட்டியம் செய்யத் தொடங்குகினாள்.

O தற்குறிப்பில் ஆடல் தொடக்கம் இனிமையுற இயம்பப் பெற்றுள்ளது.

கைவழிக் கண்கள் செல்ல

52. தண்ணுமை (மத்தளம்) ஓசையும் விளங்கும் தாள ஓசையும் இசையின் ஒலியும் ஆகிய இவை, வண்ணமலர் போன்ற மெல்லடியின் வழியில் அமைந்த சதிக்கு (அடைவைக்கு) ஒத்து நிற்கவும், இரண்டு கண்ணின் பார்வைகளும் பல வளையல் அணிந்த கைகளின் வழியே நடக்கவும், பெண்களுள் அமுதம் போன்ற மாயை புடை பெயர்ந்து நடனம் செய்தாள்.

இறைவனும் மயங்கும் ஆடல்

53. வாயால் சொல்லப்பட வேண்டிய பொருளை மலர் போன்ற கரம் உரைக்கவும், மேலாக உயர்ந்த விசும்பின்கண் செல்லுகின்ற மெல்லிய பறவைகளின் ஒலி எல்லாம், ஒளியை உடைய செம்பஞ்சு தோய்ந்த அடிகளிலிருந்து உண்டாக மிதித்தும், பேய்களோடு ஆடிய கடவுள் மயங்குற ஆடினாள்.

O ஆடல் அழகு வியப்புத் தருமாறு உள்ளது.

தேவர்களும் மயங்கல்

54. மாயையானவள், இங்ஙனம் நடனம் செய்ய, அதைக் கண்ட அந்தணன் (நான்முகன்) பெருமை பொருந்திய கலை மகளை உமிழ்ந்தான். திருமால் செந்திருவாகிய இலக்குமியைச் 'சீ' என வெறுத்தான். இந்திரன் அரிய சசியை (இந்திராணியை) நினையாதவனாகி மறந்தான். கடவுளர் செய்தி இவ்வாறு ஆயின் மானிடர் பட்ட பாடுகளை என்னவென்று சொல்வோம்?

O சீ என வெறுத்தான்—திருமகளின் பெயரே சீ (ஸ்ரீ)என்பது நினைக்கத் தக்கது. பாடலில் நகைச்சுவை மருவியுள்ளது.

மாயையைப் பார்க்க விரும்பிய மைந்தர்

55. காளையர் பொன்னால் ஆகிய மதிலின் கண் இருக்கும் துளைகளுள் முகத்தை வைத்தும், நெருங்கி முன்னே நின்றவரது தோளின்மேல் ஏறியும், மின்னற்கொடி போல் ஆடல் செய்கின்ற மாயையினது இடையாகிய ஆகாயத்தைக் காணுதற் பொருட்டு இடர்ப்படுவார்கள்.

இளைஞர்கள் பதுமைகள் போன்றனர்

56. பொருள்களைப் பற்றும் மனமானது ஓடி இரு பார்வையிலும் அடைந்து மற்றைப் புலன் பொருள்களை மறந்து, நடனமாடும் மாயையை அடையவே உயர்பொன்னால் ஆகிய மதில் உறுப்பின் கண்ணே தங்கிய பதுமைகள் போல் அசைவு ஒழிந்து நின்றனர் காளையர்.

ஆடல் முடிந்து பிரசாதம் பெறுதல்

57. இளங்கொடி போலும் இடையை உடைய மாயை, இன்னணம் ஆடுகையில், களாப்பழம் போலும் கரிய கழுத்தையுடைய இறைவனைப் பூசித்துத் தண்மையான உளம்கொண்ட அருந்தவனான கோயிற்பூசகன் மகிழ்ந்து கடவுள் அணிந்த வளம் கெழுமிய சந்தனத்தை மலர்மாலையோடு கொடுத்தான்.

O கோயிற் பூசகனின் இயல்புகள் இங்கே கூறப்பட்டுள்ளன. அவை i தண்மையான உள்ளம். ii அரிய தவம் உடைமை.

சதங்கை அடங்கியது

58. மாயை வணங்கி மதுகேசனது நிருமாலியத்தைப் பிரசாதமாகக் கைக்கொண்டு மகளிருடனே நாட்டிய மண்டபத்தில் நுண்ணிய நூல் போன்ற இடை மிக வருந்தும் என்று கூவிப் பிணக்குற்ற சதங்கையின் ஓசை, அழுத பிள்ளை அடங்குவது போல் அடங்க, இருந்தாள்.

O நிருமாலியம், பூசித்து நீக்கிய பொருள்.

மாயையின் வழிபாட்டை அல்லமர் அறிதல்

59. மைத்தடங் கண்களை உடைய, வல்லி நிகர் மாயை பத்தியோடு பூசை செய்து வருவதை, அழிவில்லாதவனும் உலகெங்கணும் நிறைந்தவனும் தோற்றம் இல்லாதவனும் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவனும் ஆகிய, அருளையுடைய முதன்மையாகிய அல்லமன் என்னும் பெயரை உடையோன் உணர்ந்தான்.

# 5. பிரபு தேவர் வந்த கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. அடியவர் விரும்பும் எண்ணம் அனைத்தையும் எப்பொழுதும் நிறைவேற்றுகின்ற பேரருளை உடைய அல்லம ஐயன், தன் இயல்பினின்றும் வேறுபட்டு, ஒரு மனிதனாகி, வருந்துகின்ற மயக்கத்தை உடைய மனத்தோடு பூசித்த மாயைக்கு உடன்படுபவன் போல் செய்த செயல்களைக் கூறுவாம்.

அல்லமர் வேறொரு பெயரோடு வருதல்

1. உலகத்து உயிர்கள் தாம் நுகரும் இன்பப் பேறுகளையும் வீடுபேற்றையும் கொடுக்க வல்லவன் அல்லம தேவன் தான் என்று யாவரும் சொல்லுதலால் அந்த உண்மைப் பெயரும் மறையும்படி மத்தளக்காரன் என்னும் வேறு ஒரு பெயர் கொண்டு, மாயையின் காமிய பூசைக்குத் தக்க பயனை உறுதியாக அருளிச்செய்ய நினைத்து-

O. காமிய வினைக்குப் பயனாக நுகர்வும் (போகம்) நிட்காமிய வினைக்குப் பயனாக வீடும் (முத்தி) கிடைக்கும். போகம் என்பது அயலைச் சுகித்தல்; முத்தி என்பது அறிவைச் சுகித்தல்.

அல்லமரின் அழகிய வடிவம் (8)

3. சிவன் தனது அழகிய நெற்றியின்கண் உள்ள வெய்ய தீக்கண்ணினால் நீறாகிப் போன மன்மதனது தொழிலைச் செய்ய அவனது வடிவத்தைத் தான் கொண்டது போன்ற வடிவழகோடு, அழகு நிரம்பி ஒழுகும் ஆறு முகங்களுள் சிறந்த ஒரு முகத்தோடு இளமையும் அழகும் தன்பால் பொருந்தத் தோற்றிய முருகனைப் போல

O வடிவால் காமன்-இளமையால் முருகன் - ஆக வடிவம் கொண்டார் அல்லமர். உவமையணி.

அல்லமர் கொண்ட கோலம்

4. விளங்குகின்ற சடையை உடைய முனிவர்களின் மாதரார் மயங்கி வருந்துதற் பொருட்டுக் கொண்ட பிட்சாடன வடிவம், கவின் செய்யும் இந்த வடிவத்தைக் கொள்ளுதற்கு முன் பழகி விட்டது என்னுமாறு, குவிநகில் மங்கையரது

உயிரைக் கொள்ளை கொள்ளும் வடிவம் என்னுமாறு, புவிமிசை வந்த கதிரோன் என்னுமாறு, பொங்கு ஒளி உருவம் ஒன்று கொண்டான்.

முகத்திலும் மார்பிலும் மயிர்ச்செறிவு

5. நடுவிலுள்ள களங்கம் ஓரத்திற் பொருந்த விழுந்து சூழ்ந்த ஒரு மதிஉளதாயின் அது வளம்பொருந்திய மயிரொழுங்கினை உடைய அல்லமனது ஒளிர்முகத்தை ஒக்கும்; இளமை பொருந்திய கருந்தாமரை மலர் உளதாயின் அஃது ஒளி செய்யும் உந்தியின் மேற்சென்று மார்பிடத்தே தோன்றுகிற மயிர்ச் செறினை ஒக்கும், என்று சொல்லும்படி நின்றான்.

O இல்பொருளுவமை.

உயர்ந்த ஆடை வாசனை புனைதல்

6. கலைகளின் வரம்புகளை அறிந்துள்ளோரது கருத்திற்கு எட்டாததாக இருந்தும் எனது (கவிஞரது) புல்லிய தலையின் கண் வரத்தக்க அழகிய திருவடிகளை உடைய அல்லமன் விலைவரம்பு அறியப்படாத ஆடையை அரையில் விளங்கும்படி விரித்துடுத்து, பொதியமலையில் உண்டாகிய புதிய சந்தனம் கத்தூரி ஆகியவற்றைக் காத தூரம் வாசனை வீசத் திருமேனி முழுதும் நிறையப் பூசி—

தலைமாலை, தலைப்பாகை

7. துளிர்த்த தண் பொழிலில் தேமாவினது பெரிய கிளையில் வாழும் குயிலினது முகத்தைப் போல, கார் காலத்து மேகத்தை வருத்தும் சுருண்ட தலைமயிரை முடியாகக் கட்டி, வண்டுகள் தொடருகின்ற மாலையைச் சூடி, அந்த மாலையானது பார்க்கின்றவர்க் கெல்லாம் வெளிப்படையாகச் சொல்லிலுள்ள பொருள்போலக் காணும்படி மெல்லிய தலைச் சாத்து (பாகை) தரித்து—

கத்தூரிப் பொட்டு மணிக் குண்டலம்

8. கழுத்தினிடத்து இருந்தால் தனது உண்மை வடிவைத் தெரிந்து கொள்வார்கள் என்று நஞ்சினை எடுத்து நெற்றியினிடத்து வைத்த செய்கை போலக் கத்தூரிப்பொட்டு இட்டு, ஒளியுடைய தனிச் சந்திரனானவன், தன் இரு புறத்திலும்

உரோகிணியோடு அவளுக்கு நிகராகிய மற்றொரு நட்சத்திரப் பெண்ணைக் கூட்டிக் காப்பாற்றிப் பொருந்த வைத்திருத்தல் போல அழகிய மணிக் குண்டலத்தைச் செவிகளுக்கு அணிந்து—

பல்வகை அணிகலன்கள் புனைதல்

9. (அழகு மிக்க) நம் குரு குகேசனாகிய மலைவில்லாத அல்லம தேவர் விலையில்லாத வெண்முத்து மாலையும் வீர சங்கிலியும் தோள்வளையமும் இலகு செம்மணி அழுத்திய பொன் மோதிரமும் முதலாகிய எல்லா அணிகலனும் ஒள்ளிய அழகு என்கிற சிவந்த நெருப்பிற் பெய்கின்ற நறு நெய் போல ஒளிபொருந்திய அவயவம் எல்லாம் தரித்து-

O செம் மேனியராகிய அல்லம தேவர் அணிகலன்களையும் அணிந்தது எரியும் நெருப்பில் நெய்யையும் ஊற்றினாற் போன்று இருந்தது என்பதாம். உவமையணி

முதுகில் தண்ணுமை தாங்கல்

10. தேவர் கோனின் செல்வத்தை நுகருதற்குத் தக்க இலக்கணம் முழுதும் வாய்க்கப் பெற்ற அழகிய இந்த இளையவற்கு ஆ! ஆ! இந்த மத்தளத்தைச் சுமப்பதற்கு ஏதுவாக வந்துள்ள தீவினை யாதோ என்று எண்ணி மானிடர் திகைப்புறுமாறு பழிப்பில்லாத முதுகினிடத்து மத்தளம் ஒன்று தோன்றச் சுமந்து-

O தகுதி மிக்க அணிகளால் அலங்கரித்துத் தகவில்லாத தண்ணுமை முதுகில் தாங்கியமை சொல்லுதல் தகாமை அணி.

மதுகேசர் சன்னிதியில் மத்தளம் அடித்தல்

11. சென்று, அருளையுடைய மதுகேசரது திருமுன்பு, விண்ணிற் செல்லும் ஞாயிறு திங்கள் ஆகிய சுடர்கள் சுற்றி வரும் மேரு ,போன்ற—கொடிகள் கட்டிய நெடிய-பொற் கோபுர வாயிலுக்கு எதிர் போய் நின்று, மன்றிலே கூத்தாட்டுச் செய்பவன் (சிவன்) மத்தளத் தொழில் கைக் கொண்டான் என்று யாவரும் மனம் மயங்க எங்கோன் அல்லம தேவன் மத்தளத்தைக் கையெறிந்து அதிர்த்தான்.

### மத்தளம் அறையும் அற்புதம்

12. உரல்களை ஒன்றன்மேல் ஒன்று அசையாது அடுக்கி உறியில் நெய் எடுத்து உண்டவனாகிய கண்ணனது கண்டம் அசைந்து ஊதப்பட்ட புள்ளாங்குழல் இசை போன்ற மொழி பேசும் மாதர்கள் மயங்கும்படி, மீன் குத்திப் பறவையின் அசைந்தாடும் சிறகைப் போல மத்தளத்தைக் கைவிரல் அசைந்து தாக்குதல் அன்றி, மெய் அசையாது நின்றான்.

O உடலிற் சலனம் இன்றித் தண்ணுமை முழக்குதலின் வியப்பணி.

O மீன் குத்திப் பறவையின் சிறகு அசைவு பொருத்தமான உவமை.

### மத்தள முழக்கம் கேட்ட மாயை வியத்தல்

13. தூய மெய்யறிவுப் பேரின்பக் கதிரவனாகிய அல்லம தேவன் தன் கைகளால் அடிக்கும் மத்தளமாகிய முகிலின் முழக்கத்தை, நடனமிட்டுக் கொண்டிருக்கும் மாயையாகிய மயில் கேட்டு 'அம்மா! இத்தரை மனிதர் கையினால் எம் செவிப்படா திருந்த புதிய ஓசை இது!' என்று மனம் வியந்து இதனைச் சொல்லுவாள்:

O தக்க உருவகம்.

### மத்தள வித்தகன் யாரென அறியுமாறு கூறல்

14. உயர் இளம் முலையீர்! இத்தகைய தண்ணுமை முழக்கம் காதால் இது காறும் கேட்டதில்லை. இவ்வாறு உண்டு என்று உரைப்பவும் கேட்டிலம். உலகத்தார் அனைவரும் விரும்பி நின்று வியக்கத்தக்க இந்த வித்தையைக் கற்றறிந்து காட்டிய அவன் யார் என்று காண்க'' என்று அணங்கு அனைய மாயை உரைத்தாள்.

### மகளிர் அல்லமரைக் கண்டு வரல்

15. அம் மகளிர் ஓடிப்போய் மத்தளம் முழக்கி நின்ற அல்லமரை, தாம் முற்பிறவிகளில் செய்த மாதவத்தால் கண்ணாற் கண்டு, காதொடு பொருது மீளும் கயல் நெடுங்கண்ணும்

செவ்வாயும் உடைய கோதையாகிய மாயையின் மருங்கு வந்து இதைச் சொல்லத் தொடங்கினர்.

அவரை அழையுங்கள் என்றனள் மாயை

16. ''தான் கற்ற மத்தளவித்தை போல அவனது அழகும் யாம் இதுகாறும் கண்டதில்லை. வில்தொழில் வல்ல அனங்க வேளாகிய மன்மதனே மேனி எடுத்து வந்தாற் போல ஒருவன் வந்திருக்கிறான்'' என்று சொல்ல, மாயை 'கூப்பிடுங்கள்!' என்றாள். அவர்கள் அவ்வாறே அல்லம தேவனை அழைத்து வந்து மாயைமாதின் எதிர் விடுத்தார்கள்.

மாயையின் மயக்கம்

17. அவ் வழகிய கோல நிலைமையை உடைய அல்லமப் பெயர் அண்ணலைக் கண்ட போதே, செம் மண்ணிலே விழுந்த நீர் போல மாயை காமவேட்கை 'மயமாகிப் பொன்னாலாகிய, விளங்கும் ஓர் பூம்பாவை போல அசையாமல் இருந்தாள். கன்னல் வில்லேந்திய மன்மதன் அம்புகளை அவள் மேல் பொழிந்து கை இளைத்து அருகே நின்றான்.

O உவமைகள் இனியன.

தோழியர் அல்லமரின் ஊர்பேர் வினாவுதல்

18. மாயை யாவரையும் மயக்கும் என்று சொல்லப்படுவது போய், தான் மயங்கும் என்று சொல்லுமாறு இருக்க, நயக்கும் மென்மொழி மகளிர், ''வியக்கத் தகுமாறு உள்ள நினது நாடு எது? வீர வேள் மன்மதன் போல் அழகுடையவனே! இன்பம் பயக்கும் நின் பெயர் யாது? எங்கே பழகித் தங்கியிருப்பாய்? சொல்'' என்று கேட்க, அறிவுக் கடல் அல்லமன் சொல்லும்:

O மயக்கும் என்பது போய் மாயை மயங்கும் என்று வந்த இரங்கத் தக்க நிலை பின்னால் அவளுக்கு வாய்க்கவிருக்கும் முடிவை முன் கூட்டியே குறிப்பால் சுட்டுகிறது.

அல்லம தேவர் கூறிய விடை

19. ''முகில் போன்ற கூந்தலையுடையீர்! எனது தேசம்

பரதேசம் (வேற்றுநாடு; மேலான நாடு; வீட்டுலகு). சூளுரையால் வல்லவர் என்று வந்தவரின் வல்லமைகள் நிலையல்ல என்று சொல்லுகின்ற அல்லமன் என்பேர். வேறொரு பற்றுக்கோடும் இன்றி,யான் அன்பு செய்பவரிடத்தில் சேர்ந்திருப்பேன்'' என்று மெய்யனாகிய அல்லமன் உரைத்தான்.

O பொய்ம்மை இல்லான் - உபாதி (கட்டு)கள் அற்றவன்.

அல்லம தேவரைப் பெண்டிர் வேண்டுதல்

20. அதற்கு, உலகில் உள்ள கல்வி எல்லாம் அறிந்த எம் தலைவியிடத்து, மயக்கமற வித்தைகளைக் கற்றவரோடு பொருந்தி, வேறிடம் செல்லுதலை விட்டு விட்டு, செல்வத்துடன் இருப்பாயாக'' என்று இலவமலர் போன்ற உதடுகளையுடைய அமுதம் போன்ற பெண்டிர் அவன் இணங்கும் வண்ணம் இயம்பினர்.

அவர்களது வேண்டுகோள், மாயையின் மகிழ்ச்சி

21. தன் கனிவாய் திறந்து சாற்ற வேண்டிய சொல்லெல்லாம், மின்னற் கொடித்திரள் போல் உள்ள மகளிர் சொல்லுதலும் அதற்கு மகிழ்வுற்று இனிய குழலோசை போன்ற மொழியுடைய மாயை, இச் சொல்லின் (மகளிர் வேண்டுகோளின்) தன்மை, செஞ்சடையுடைய மதுகை நாதனைப் பூசித்ததன் பயன் என்று நினைத்து, ஒன்றும் பேசாது இருந்தாள்.

அல்லமருக்கு வெற்றிலை முதலியன அளித்தல்

22. அருகே நின்று வெற்றிலைப் பை பிடித்திருக்கும் போகி என்பவள், மோகினி தவம் செய்து பெற்ற முகிழ்முலை மாயையின் கையிலே விரைந்து வெற்றிலை பாக்குக் கொடுத்து அதனை, சிறந்த போகி போல் நடித்து நின்ற யோகியாகிய அல்லமனின் கைகளில் கொடுக்கச் செய்து, செய்தற்கு உரிய வரிசைகள் பலவற்றையும் செய்தாள்.

### அவற்றை அல்லமர் ஏற்றுக் கொள்ளுதல்

23. தனது அடிக் கமலங்களைப் போற்றும் அடியவர்கள் விரும்பியவற்றை எல்லாம் கொடுத்தருளும் கருணை வள்ளல் ஆகிய அல்லமப் பிரபு தான் எக்கோலம் கொண்டானோ அதற்கு ஏற்ப நடிப்பவன் ஆதலால், அச்சமுண்டாக்கும் வேல் அனைய தடங்கண் உடைய மாயை எடுத்துக் கொடுத்த வெற்றிலை பாக்கினை, தாழ்ந்த நிலையினன் போல் உள்ளங் கையால் ஏற்றுக் கொண்டான்.

### சிவிகை ஏறி மாயை செல்லுதல்

24. காளைக் கொடியை உடைய, மாசிலா இறைவனிடத்து விடை கொண்டு, மடக் கொடியாகிய மாயை புறத்தே வந்து அவ்விடத்து மதவேளின் அம்புகள் மார்பிலே பட்டு உருவ நைந்து நடப்பதற்கு வலியில்லாதவளாகி, அழகிய பொன்னாலும் ஒளி பொருந்திய மணியாலும் செய்யப்பட்ட சிவிகையில் ஏறி, தொடிக்கை நுண் இழை மருங்குல் கொண்ட தோழியர் சூழ்ந்துவரச் சென்றாள்.

### அல்லமர் தன்னோடு இருக்க மாயை, தந்தையின் இசைவு பெறுதல்

25. பெண் வடிவாகச் செய்யப்பட்ட அமுதம் போன்ற மாயை, வெண்குடை வேந்தனிடம் சென்று நடம்புரிகின்ற தொழிலுக்கு இசைந்த மத்தளத் தொழில் வல்ல அல்லமனின் திறமையைச் சொல்லி அவன் தன்னோடு இருப்பதற்கு, இடமகன்ற ஞாலம் காக்கும் அவ் அரசனது இசைவு பெற்றுக் கொண்டு தன் மாளிகையினுட் சென்றாள்.

### மாயை அல்லமரோடு பேச ஆசைப்ப ல்

26. வலம்புரிச் சங்குகள் பல தன் அருகே சூழ்ந்து கொண்டிருக்க, அவற்றிற் சிறந்த ஒரு சலஞ்சலச் சங்கு இருப்பது போல, பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்ட மாளிகையில் பொற்குழை அணிந்த மகளிர் தன்னைக் சூழ்ந்திருக்க மாயை மலர் அணைமேல் இருந்து எம் கோமானாகிய

அல்லமனோடு அவனது மத்தள வித்தையின் மேன்மையை ஆராய்பவள் போல அவனுடன் பேசுதல் விரும்பினாள்.

O உவமை

மாயையின் மனம் மொழி மாறுபடல்

27. மலர் புனைந்த வளைந்த நெடுங் கூந்தலையுடைய பொற்றொடி மங்கையாம் மாயைக்கு, நினைவு அல்லமனு டன் புணர்ச்சிமேல் இருந்தது. நெடிய கண்ணின் பார்வை மன்மதன் போன்ற அவனது நனிமிகும் அழகின் மேல் இருந் தது. வாய் வெறும் (பயனில்லாத) சொற்களின் மேல் இருந் தது. இதனால் அல்லவா, மனம் மொழி மெய் ஒருங்குடைய மங்கையர் அரியர் என்று உலகுளோர் சொல்லுகின்றனர்?

மாயையின் பேதைமை

28. பேதை மாயை, தீதில்லாத கழையாகிய கரும்பினின் றும் தீஞ்சுவைச் சாற்றைத் தள்ளி விட்டு அதன் சக்கையை விரும்பும் செயல் போலவும், கத்தூரி விலங்கினிடத்து வரு கின்ற கத்தூரியை விட்டுவிட்டுப் புல்லிய மலத்தைக் கொள் ளும் செயல் போலவும் அல்லமனால் கிடைக்கலாகும் முத் தியை விழையாது புல்லிய போகத்தை விழைந்தாள்.

O உவமைகள் கடுமையாக உள்ளன.

மாயையின் காமப்பெருக்கும் நாணமும்

29. ஒன்றிரண்டு தவிர அம்புகள் இருப்பவைற்றையெல்லாம் மன்மதன் தூர்த்தான். இரண்டு குன்றுகள் போன்ற தனங் களை உடைய கோமகள் மாயை ஆற்றாளாகி, மின்னல் திரண்டு ஓர் உருக்கொண்டாற் போன்று விளங்கும் திருமே னியை உடைய அல்லமன்மேல் சாய்ந்துவீழ எழும் கருத் தினள், திருமகளிர் திரண்டுவந்தாற் போல் தோன்றும் மகளிர் அவ்விடத்து நிற்பதால் வீழாது நாணி நின்றாள்,

காமத் தீ

30. தளிர்போன்ற தன்மையளான மாயை காமத் தீயில் சருகாக அகப்பட்டு, தன் உள்ளத்தைப் போல்கின்ற மகளிர்

சிலர் உடன்வர எழுந்து உள்ளே சென்று, வண்டுகள் மொய்க்கும் மலர் அணிந்த கூந்தல் சோர அழகிய முலை மேலாடை விலங்க, வாயால் மூச்சு எறிந்து வளம் மலிந்த மலர் அணைமேல் வீழ்ந்தாள்.

### தோழிகளிடம் அல்லமரது இருப்பிடம் வினாதல்

31. அல்லமன் அல்லாத ஆடவரை வென்ற மாயை, கைகளால் அள்ளிக் கொள்ளத்தக்க பேரழகை உடையவனது அருட்பெயரைச் சொல்ல வேண்டும் என்ற அவாவாலும், தன் உள்ளக் கருத்தை உயிர்போற் சிறந்த தோழியர்க்கு உணர்த்த எண்ணும் நினைப்பாலும் மெள்ளப் பவள வாய் திறந்து ''அல்லமன் குடியிருத்தற்கு வீடு ஏது? பிள்ளைப் பிறைவாள் (ஒளி) நுதல் மடவீர்!'' என்று வினவினாள்.

### மாயையின் கருத்தைத் தோழிகள் வினவல்

32. இறங்கிய நீர்த்துறையிலே (விழுந்து) நீந்துதல் உண்டாயினாற் போல, மாயையிடத்துக் காம வேட்கையானது பிறந்த பொழுதே உயிர் எவ்வளவோ அந்த அளவாக நின்றது என்னும் தன்மையை அறிந்து தோழியர், ''நின் கருத்தை யாம் அறிய உணர்த்துவாயாகில் அல்லமற்குச் சிறந்த மனை ஒன்று கொடுப்போம்'' என்று உரைத்துப் பின்னும் செப்புவார்கள்.

### இதயத்தில் காப்பாக இருப்பதனைக் கூறுக எனல்

33. ''அழகிய மணிமேகலை சூழ்ந்த இடையையும் வடிவேல் எனக் கண்டோரை மருட்டும் களிப்புப் பொருந்திய கண்களை உடையவளே! காமத்தின் முளை உன்பால் தோன்றிற்று என்று எங்கள் கருத்தில் தோன்றிற்று. யாமும் உனது உள்ளமும் வேறல்ல, ஒன்றேயாம்; நின் உள்ளத்தில் சேமமாக (மறைத்துப் பாதுகாத்து) இருப்பதனை நாணாமற் செப்புக'' என்றனர் திருந்திய அணிகலன்களை அணிந்த மகளிர்.

### மாயையின் மௌனம்

34. தன் கன்னிமை அழியும் என்று உண்டாகிய நாணத்தையும், உலகங் காக்கும் ஒரு மன்னனின் மகளென்ற பெருமையையும், மத்தளிகனைப் புணர்ந்தாள் என்று பின்

வரக் கூடியதாகிய பழிச் சொல்லையும் தன் உள்ளத்தில் உன்னி, கரிய கண்களும் மடப்பமும் உடைய மாயை மறு மொழி ஒன்றும் உரையாதிருந்தாள்.

### சகளை என்பவள் விலாசியிடம் வினாவல்

35. மாயை ஒரு சொல்லும் சொல்லாமல் சும்மா இருக்கவே, ஏவல் புரிந்து நெருங்கிய உறவாக அமைந்து நின்ற சகளை என்னும் மாது, ''நம் பெருமாட்டி வாய்ச்சொல்லும் பிற செய்கைகளும் வேறுபட்டிருக்கின்றாள். பெண்ணே இதன் காரணம் யாது, அறிகிலேன்'' என்று உணர்வு மயங்கி, அவளை விட்டு நீங்குதல் இல்லாத அணங்கு அனைய விலாசி என்பவளை வினவினாள்.

### மாயை மயங்கினாள் என்று விலாசி கூறுதல்

36. ''உங்கட்கு இனி யான் மறைப்பது என்ன? இன்று வந்த அல்லமனாம் தனி நாயகனின் பேரழகு என்ற மதுவைக் குடித்துப் பொறுக்க மாட்டாமல் கனிவாய் மடந்தை (மாயை) கருத்தழிந்தாள்'' என்று விலாசி என்பவள் சொல்ல, மாயை அதற்கு முனிவின்றி இயைந்து முகம் கவிழ்ந்து புன்னகை கொண்டிருந்தாள்.

### மாயையின் மையலைத் தோழியர் அறிதல்

மாயை முலையால் இடையை உடையவள் மற்றை மாதர் போல என்று தூய மதிஞர் (அறிவாளர்) அனுமானத்தால் அறிந்து சொல்லும் இடையை உடைய மயில் போன்ற அவளது வாயில் இள வெண்ணகை தோன்ற வாய் யாதும் பேசாதிருக்க, அது நோக்கி, ஆயுமிடத்து, காம வேட்கை உடையவள் என்று அருத்தாபத்தியினால் தோழியர் அறிந்தனர்.

O அனுமானம்: காரியத்தால் காரணம் உண்டென உணர்ந்து கொள்ளுதல்.

O அருத்தாபத்தி: பகலில் உண்ணான் பருத்திருப்பான் என்றால் அவன் இரவில் யாருமறியாமல் தின்பான் என்று உணர்ந்து கொள்ளுதல்.

O இந்நூலாசிரியர் தருக்கம் இலக்கணம் ஆகிய நூல்களில் வல்லமையுள்ளவர் என்பதனையும் கவிதைச் சுவையில் அவற்றை இழைவு படுத்த வல்லவர் என்பதனையும் இச் செய்யுட் பகுதி காட்டுகின்றது.

அல்லமரின் கருத்தை அறிய ஒருத்தி போதல்

38. வல்லி (மாயை) யின் உள்ளம் அறிந்தோம், இம்மாயை தனையும் மயக்கவல்ல அல்லமன் கருத்தை அறிதல் வேண்டும் என்று அத்தோழியர் சொல்ல, விரைந்து மதமானி என்பவள் ''யான் அந்தத் தோன்றலைக் கண்டு மெல்லக் கருத்தை அறிந்து வருவேன்'' என்று, மாசிலாத் திருவிளையாட்டு உடைய அல்லமனிடத்துப் போயினாள்.

அல்லமர் உரை

39. மங்கை தன்னிடம் வருகின்ற அவ்வரவின் காரணத்தை அறிந்து, அவள் ஒரு சொல் சொல்லுவதற்கு முன், ''நான் தங்கியிருக்கும் மனைக்குச் சென்று அங்கு இருப்பேன். திங்கள் போன்ற நுதலும் வெண்பல் கருங்கண் செவ்வாயும் உடைய திருமகள் போன்றவளே! உங்கள் தலைவி என்னைத் தேடுவாளாயின் சொல்லுக'' என்று சொல்ல, மதமானி இயம்பத் தொடங்கினாள்.

O வெண்ணகை கருங்கண் செவ்வாய்-முரண்தொடை

மதமானி அல்லமரிடம் உரைத்தல்

40. ''ஐய! புறத்தே வீடு இருக்க விரும்ப வேண்டாம். விளங்கும் மணிகளால் ஆகிய எங்கள் மாளிகை உன்னுடையதே, இவண் தங்குக. அரசர்க் கரசனின் மகள் தன் நெஞ்சமாகிய பீடத்தில் உன்னை விடாமல் இருத்தி வைத்துள்ளாள், பிரிவின்றி நீ தன்னோடு கூட இருக்க வேண்டும் என்ற விருப்புடையவள் ஆக உள்ளாள்'' என்று அவளது குறிப்பு வெளிப்படக் கூறினாள்.

அல்லமர் மறுத்தல்

41. "ஒன்றும் இல்லாதவன் நான். நீங்களோ எல்லாம் மிக உடையவர்கள். உங்கள் தலைவி வெற்றிவேந்தர் குலமடந்தை.

நானோ சாதி இன்னதென்று கூறமுடியாத விகிர்தன் (வேறுபாடானவன்). அதற்கு மேலும், நீங்கள் பெண்டிர். நான் ஆடவன், ஆகையால் உங்களோடு உறைதல் எனக்கு என்றைக்கும் அடாது'' என்று அல்லம தேவன் புன்னகை கொண்டு புகன்றான்.

O ஞானியர் இயல்பு அல்லமர் கூற்றில் அமைந்துள்ளது.

நேயத்தாரிடம் வேறுபாடு காட்டாள் மாயை
என்று மதமானி

42. அதற்கு உரை வல்லவளாகிய மதமானி, "வள்ளலே! அந்த மாயை நட்புக் கொள்ளாமல் இருக்கலாம். அங்ஙன மன்றி நட்புக் கொண்டு விடுவாளே யானால் பிறகு ஒருவரிடத்தும் வேறுபாடு கொள்ள மாட்டாள். அப்படியிருக்க, உயிர் போற் சிறப்பாகக் கொண்ட உன்னிடத்து எள்ளல் புரியாள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ! என்னுடைய சொல் எல்லாம் சில காலம் இருந்தபின் அறிவாய்'' என்று இன்மொழி புகன்றாள்.

அல்லமர் இணங்காமை

43. மாயைக்கு இணங்குவான் போல் நடித்து விடுத்து நழுவும் அல்லம தேவன் ''காரிற் சிறந்த மலர்க்குழலாய்! உன் சொற்கள் இரட்டைப் பொருள் கொண்டிருக்கின்றன. அவற்றின் உண்மையை யான் தெரிகிலேன். ஒருவரிடத்தில் பணி புரிகின்றவர்கள் தூரத்தில் இருக்க வேண்டும். பணி புரிதற்கு வரவேண்டிய காலத்தை அறிந்து வருவது தான் முறை'' என்றான்.

O பணிஞர் பாங்கு அல்லமர் கூற்றில் வைத்து விளம்பப் பெறுகின்றது.

மதமானியின் மதிப்புரையும் அல்லமரின் மறுமொழியும்

44. ''திருவோலக்கம் காண வரும் மைந்தர்களில் உன்னை ஒருவனாக, எம் மன்னர் மன்னன் மகள் நினைப்பாள் அல்லள்; உன்னைத் தலைவனாக நினைத்தனள்'' என்று மதமானி சொல்ல, அதற்கு அல்லம தேவன், ''அன்னம் போல்பவளே!

உன் தலைவியின் இயல்பு, உயர்த்துதல்; ஆனால் முன் போலவே அடங்கி நடத்தல் எனக்கு முறை'' என்றான்.

மதமானி மாயையின் நிலைமை கூறுதல்

45. ''யாங்கள் தொழும் இறையா யிருப்போனே! இனி நாம் இருவரும் சொற்போர் செய்து மறைக்கத் தக்கது யாதுளது? சலனமின்றி மலைபோல் நின்ற அரியத் தவத்தி னரும் தன்னைக் காணுதற்கு முன்பு உன்னைக் கண்ட தான் போலே நின்று மயங்க, உன்னைப் போல் கலங்காது நின்ற தலைவி, உன்னை எதிர்ப்பட்ட அளவில் யானை உண்ட விளாங்கனி போல உள்ளீடு அழிந்தாள்''.

O நிலையில் திரியாது மலைபோல் இருந்த மாதவத்தோரை யும் நிலைகலங்க வருத்தித் தான் மட்டும் அல்லமனாகிய நின்போல் கலங்காதிருந்த மாயை, இப்பொழுது தன்னைக் கண்டு கலங்கி நின்ற தவத்தினர் போல் உன்னைக் கண்டு கலங்கி நிறையழிந்தாள் என்கிறாள் மதமானி.

அல்லமர் இசைந்தது போல உரைத்தல்

46. என்று மதமானி கூற, ''தலைவி கருத்தை நீ அறிவாய். அன்றியும் இன்றைக்கு வந்த புதியனான யான் அறிவனோ? நட்புக் கொண்டு நின்ற உன்றன் மொழி கேட்கும் அதுவே எனக்கு நெறியாகும்'' என்றான், மலையை வென்ற குவிந்த தனத்தை உடைய மாயை மகிழ, எம்மை ஆட்கொண்ட அல்லம தேவன்.

நீ நல்ல சகுனம் கண்டு வந்தாய் எனல்

47. ''நம்பியே! நீ என்ன நல்ல சகுனம் எதிர்கண்டு வந்தாய்? வல்லவராகிய அசுரர் தேவர் முனிவர்களெனப் படும் யாவரும் மயங்குதற்கு இடனாகிய மாயையை புல் போல எளியள் என்னும்படி அவள் தானாக வந்து தழுவு தற்கு அமைந்தாய் எனப் புன்முறுவலோடு சொல்லி, மகிழ்வு கொண்டு, அந்தச் சுடர்த் தொடி (மத மானி) தன் தலைவியிடத்துத் திரும்பி வந்தாள்.

### இதற்கிடையில் மாயை அடைந்த மனச் சோர்வு

48. அங்கு மாயை, மதமானி அல்லமனிடத்துப் போன பின்பு, மனம் சோர்ந்து ''அத்தோழி உண்மையைச் சொல்லி உடம்படுக்கச் செய்வாளோ? அரசன் மகளுக்குப் பழுதாம் என்று என் உயிரனையானைச் சினந்து நீங்கச் செய்வாளோ? இங்கு நான் என்செய்வேன், அறியேன்,'' என்று இருந்து சோர்வாள்.

### மாயையின் சிந்தனை

49. ''என் காம நோயை அறிந்து சென்றவள் தூது கை கூடாமல் வந்து விடுவாளோ? அந்தோ, அரசகுமாரி என்று அஞ்சி அழகன் (அல்லமன்) அகன்று விடுவானோ? இத்த கைய எண்ணம் இல்லாது என்னையே நினைத்துக் கொண்டு இருப்பானோ? பொன் போன்று விளங்கும் அவனது முகத் தைக் கண்டால் அல்லது என் துயரம் போகாது.''

### மதமானி வருதல்

50. என்று பலவற்றையும் நினைத்து இளைய மாயை இருக்க, இகுளைமார் (தோழிகள்) மின்னற் கருங்கண்களில் இடக்கண் துடித்தலாலும் நல்ல குறிகள் தோன்றலாலும் கன்னி மாயைக்கு உவகை கைகூடும் என்று கருதி இருக்கும் போது மதமானி அன்னப் பெடை போல் நடந்து மகிழ்ச்சி கொண்டு வந்து அடைந்தாள்.

### சென்ற காரியம் வெற்றியே என்றாள் மதமானி

51. தூது சென்ற மதயானி, வளம் பொருந்திய தாமரை மலர் போல் முகம் மலர்ந்து வந்தாளைக் கண்டனர் பெண்டிர். ''அவன் உள்ளம் காயோ பழமோ (இணங்கியதா இணங்க வில்லையா) சொல்'' என்றனர் ''குளிர்ந்த மாலை அணிந்த மென்கூந்தல் தோழியர்களே! பழமே!'' என்று சாற்றினாள் மதமானி. தோழிமார் மகிழ்ச்சி கொண்டனர். மாயை கொண்ட மகிழ்ச்சியை யாரால் கூற முடியும்?

### தோழிகளின் அச்சமும் மாயையின் களிப்பும்

52. இச் செய்தியை மன்னன் அறியின் என்ன ஆகுமோ?

அறியோம். இதனை மறையுங்கள்'' என்று மொழிந்து மனத்தில் அடக்கி, இரவின் வரவை எதிர்பார்த்திருந்தார்கள் தோழிகள். அல்லமனின் உடம்பாடு உரைத்த அம் மொழியே, கரும்பு வில்லையுடைய மன்மதனால் எய்யப்பட்ட பசும்புண்ணிற்கு மருந்தாகக் கொண்டு, அன்னம் அனைய மாயை களிப்புற்றாள்.

### கதிரவன் மறைதல், திங்கள் தோன்றுதல்

53. தண்ணீரில் குதித்து விளையாடும் இயல்புடைய இரண்டு பிள்ளைகள் தமக்குள்ளே ஒருவன் எழுந்து ஓடிப் போய் நீரில் விழுவது போன்று ஒளியுடைய ஞாயிறு மேலைக் கடலில் விழுந்தது. நீரில் விழுந்து முழுகிய மற்றொருவன் எழுவது போல, இருள் பருகிப் புதிய வெண்மை பொருந்திய திங்கள் நீரின் மேல் வந்து எழுந்தது.

O உவமை எளிமையோடு இனிமையும் கொண்டுள்ளது.

### மாலைக் காலத்தில் தாமரை முதலியன

54. நெருங்கிய தாமரை மலர்கள் வாய் மூடவே கள்ளுண்டு தடுமாறும் வண்டு இனங்கள் மொய்க்கும் நறுமென் குவளை மலர்கள் வாய் திறந்தன. நீர்க் கயங்களில் இரை தேடிய நாரைகள் முகில்கள் தங்கி உறங்கும் இளம் பொழில்களை அடைந்தன. செவ்வானம் என்ற நெருப்பில் பொரிக்கப்பட்டுத் தெறித்த பொரி போல வீண்மீன்கள் பூத்தன.

O விண்மீன்களுக்கான உவமை இனியது.

### செக்கரின் சிறப்பு

55. தூய ஒளியுடைய பகலவன் போய் மேலைக் கடலில் முழுகிய அளவில், மாயை என்னும் பெயர் கொண்ட மணி மென் கலாப மயிலை, வானம் என்ற கோம்பி (பச்சோந்தி) கண்டு சினந்து உடலம் சிவப்புற்று அடங்கல் போல் பொருந்திய மாலைப் பொழுதில் பரந்த செக்கர் (செவ்வானம்) தோன்றி அடங்கியது.

O வான் ஆய கோம்பி, உருவகம்.

O மயிலைக் கண்டு பச்சோந்தி சினம் கொண்டு உடல் சிவப்புறும் என்ற நம்பிக்கை இங்கு உருவகத்திற்கு இடனாக உள்ளது. பச்சோந்தியைக் கண்டால் மயில் மயங்கி விடும் என்பதும் அப்பொழுது அந்த மயிலின் கண்ணைப் பச்சோந்தி பிடுங்கிவிடும் என்பதும் நாட்டவர் கொண்டுள்ள நம்பிக்கை யாகும்.

மாயைக்கு மதநோய் மிகுதல்

56. காலைப் பொழுதில் அரும்பிப் பகலெல்லாம் மலரும் பரு வத்து அரும்பாக இருந்த காமமாகிய பூ, மாலைப் பொழு தில் மலர்ந்ததனால் பொறுக்க முடியாது, ஒப்பற்ற மாயை என்னும் பெயரையுடைய மணிக் கொடி, மூலையிலி- ருந்து வெளிவந்து விரிந்த வெண்மையாகிய நிலா முற்றத் தில், கலாப மயில் போல் வீழ்ந்து, மதநோய் மிகுந்ததால் வாய்பிதற்றலானாள்.

O காலை அரும்பிப் பகலெல்லாம் போதுஆகி, மாலை மலரு இந் நோய் என்பது திருக்குறள்,

நிலவைப் பழித்தல் (5)

57. ''நிலவே, நீ தாயினிடத்தில் தோன்றி அவள் மிகவும் தலையை மோதிமோதி அலறும்படி கோபிப்பாய். உடன் பிறந்தாள் இருந்து வாழும் வாசனை பொருந்திய மனையை நீ வானத்தில் தோன்றி வந்து அழிப்பாய். ஒரு தன்மை யாக இல்லாமல் தேய்பவனே! உன்னுடன் யாதொரு தொடர் பும் இல்லாத என்னை என்ன செய்யமாட்டாய்!

O பாற்கடலைக் கடைந்த காலத்தில் திங்களும் திருமகளும் அதில் தோன்றினர். ஆகவே கடலைத் திங்களுக்குத் தாய் என்றும் திருமகளை உடன் பிறந்தவள் என்றும் கூறினர். கடலில் பிறந்த திங்கள் அந்தக் கடல் பெருகி அலையை வீசி வீசி அலைந்து ஒலிக்கும் படி செய்கின்றது. உடன் பிறந்த திருமகள் இருக்குமிடம் தாமரை. திங்கள் தோன்றி யதும் அது குவிகிறது ஆகலின் மனையைஅழிப்பாய் என்றார்.

நஞ்சும் உனக்கு நிகராகாது எனல்

58. ''ஒளிரும் வெண்மதியமே! தக்கனுடைய வேள்வியில்

ஒருநாள் கடவுளுடைய காலடியில் அகப்பட்டுக்கொண்ட நீ அந்தச் சிவபிரானின் திருமுடியில் ஏறி, சிறந்த தவத்தினை யுடைய முனிவர் மந்திர நீரை இறைக்கவும் இன்னும் இறங்கவில்லை. சிவனது பவளம்போன்ற வாய்ப்பட்டுக் கழுத்திலே இறங்கியது நஞ்சு. அந்த நஞ்சு உன்னை நிகர்க்கும் என்று கூறுவது அறியாமை.

**அமுத கலை என உன்னைக் கூறுவது மங்கல வழக்கு எனல்**

59. "வெண்திங்களே! கழுத்தில் நஞ்சை வைத்த இறைவன், உறுப்புக்களோடு சேராது விளங்கும் சடைமேல் உன்னைத் தங்க வைத்தது உனது கொடுமை கருதி யல்லவா? மிகுதிப் படும் அமுத கலை என்று உன்னைச் சொல்லுதல் இங்கே மானிடர் கருமை ஆட்டை வெள்ளாடு என்று சொல்வதற்கு ஒப்பாகும்.

O காராட்டை வெள்ளாடு எனல் மங்கல வழக்கு

**நெருப்பை வெண்மை என்று நியாயர் கூறக்காரணம்**

60 ''பொதிய மலையிற் பிறந்த சந்தனக் கட்டையால் ஆகிய குழம்பு உலர்ந்து பொரியும் படியாகவும் மலர் அணையும் விருப்பம் தரும் பூ மாலைகளும் எரியுமாறு அழல் வீசி எழுந்த திங்களே! வெப்ப மிகுந்த நெருப்பு சிவந்து உலகோர் காணும் படி ஒளி தந்து நிற்க, நல்ல நியாய நூலோர், நெருப்பை வெண்மை நிறமானது என்று சொல்லுவது நின் குணத்தை ஆராய்ந்து அல்லவா?

O நெருப்புப் போல் சுடுதலின் மதியை நெருப்பு எனத் தார்க்கீகர் கூறுதல் முரண் இயைபு அணி.

O தீயின் நிறம் சிவப்பு. தருக்க நூலோர் அதன் நிறம் வெள்ளை என்பர். அங்ஙனம் அவர்கள் உரைக்கக் காரணம் வெண்ணிறமுடைய திங்களாகிய நின்றன் நெருப்புச் செய்கை குறித்தே என்கிறாள் மாயை.

O கவிஞர் தருக்க (நியாய) நூற் புலமையுள்ளவர் என்பது அறியுமாறுள்ளது.

திங்கள், தேய்ந்து போகக் காரணம்

61. ''இப்பொழுதைய உலகத்திலே, மதியமே! எனக்கு ஒரு தன்மையாகவும் இருக்கின்றாய். இவ்வாறு இருத்தல் உனக்கு நியாயமோ? மனைவியர் இருபத்தேழு பேரையும் சமமாக நோக்காத செய்கையால் அன்றோ, கதிரவன் போல ஒரு படித்தாக வாழாமல் தேய்ந்து போகின்றாய்? அந்தோ? அதனை அறியாயோ?

O இருபத்தெழுவர்: அசுவினி முதலிய நட்சத்திரங்கள்.

தென்றலை வெறுத்தல்

62. ''பொல்லாத தென்றலே! கொல்லா நோன்பு உடைய அகத்தியர் வாழும் பொதிய மாலையில் பிறந்தும் என்னைக் கொல்கின்றாய்! என்ன காரணமோ அதற்கு? கருணை பூண்டிலாய். திருப்பாற் கடலிடைப் பிறந்த நஞ்சினிடத்து அதன் தீக் குணமே அல்லாமல் அமுதத்தின் பண்பு இருக்குமோ? உன்னை வெறுத்து உரைப்பதில் என்ன அறிவு இருக்கிறது?

O இயைபு நவிற்சியணி.

குயிலை வெறுத்தல்

63. ''குயிலே! பெற்ற பொழுதே, ஈன்ற நின் தாய் உன் ஓசை கேளா முன்பே ஓடி விட்டது. இரையூட்டி வளர்த்த தாய் நின் ஓசை கேட்ட அளவில் நடுங்க உன்னைத் துரத்திவிட்டது. பயன் தரும் மலர் உள்ள பூங்காவிடத்தில் இருந்து பல முறை கூவினால் நின்னை நான் வெறுத்தல் சொல்ல வேண்டுமோ?

O முட்டையிட்ட பொழுதே தாய்க் குயில் வெறுத்துச் சென்றது. வளர்த்த செவிலித்தாயான காகம் நின் குரல் கேட்டு வெறுத்துத் துரத்தியது. நான் வெறுப்பதில் என்ன இருக்கிறது? என்கிறாள் மாயை.

O குயிலானது ஈன்ற தாய்க்கும் வளர்த்த தாய்க்கும் வெறுப்புத் தருதல் போல் எனக்கும் வெறுப்புத் தருதல் என்பது தன்மை நவிற்சி யணி.

காமனை இகழ்தல்

''கன்னற் சிலை மன்மதனே! என் மனத்தைக் கலக்கும்

காளையின் கவினைப் பாாத்து அவன் முன் நிற்க நாணம் கொண்டோ இங்கே நின்று முனிகின்றாய்! தன்னிற் பெரியார் இல்லை என்று எண்ணும் அவ் வல்லமனைப் போரில் தோற்கச் செய்யாமல், நல்ல தளிரைவிட மெல்லியராகிய மாதரை வருத்தினாய்! உனது ஆண்மை நன்று!''

O வலியோரை வாட்டாது மெலியாரை அடர்த்தல் காமனுக்கு இயைதலின் இஃது இயைபு நவிற்சி அணி.

மதமானி, அல்லமரிடத்து மாயையை அனுப்புதல்

65. என்று இவ்வாறு கூறிப் புலம்பி மாயை மயக்கம் முதிர்ந்து அழுது மனம் சோர, மணமலர் பெய்து நிறைத்த மெல்லிய பூம் பள்ளி யறையில் மதமானி சென்று ஆடவரிற் சிறந்த அல்லமனை முன்னே அழைத்துக் கொண்டு, வந்திருக்கச் செய்து, தேரையாகிய உணவை வென்றிச் சிங்கத்திற்கு உண்ண வைத்தல் போல் அவ் அறையுள் மாயையை அனுப்பினாள்.

O உவமையணி

மாயை அல்லமரைத் தழுவுதல்

66 வேனிற் காலத்தின் உச்சிப் பொழுதில் வெம்மை உடைய பாலையுள் தாகம் கொண்டவன் அப் பாலை நிலத்து நீராகிய கானல் நீரை எதிர் கண்டு குடிக்க ஓடுதல் போல் குளிர்ச்சி பொருந்திய மலர்அணை மீது இருந்த ஞான நல் விளக்காகிய அல்லமனைக் கண்கள் நிரம்பக் கண்டு நகையோடு அழகிய முகம் மலர்ந்தவளாக, குவளைமலர் போலும் கண்களை யுடையவளான மாயை, நெருங்கிய தனங்கள் பூரிக்க விரும்பி மேலே விழுந்து அணைத்துக் கொண்டாள்.

மாயையின் கைக்கு அகப்படாத அல்லமர்

67. பார்க்கும் கண்ணாடியில் காணப்படுகிற நிழல்போல் அணைமேல் பொருந்தத் தோன்றிய அல்லமனை மதர் விழி மாயை ஓடி விழுந்து தழுவத் தழுவக் கையில் அகப்படாமையால் படுக்கையின்மேல் விழுந்து, கண்ணாடியின் நிழலைப் பிடிக்க நீட்டிய கை கண்ணாடியிற்பட அழுது நின்று வாடுகின்ற மழலைச் சொல்லையுடைய இளங் குழந்தை போல வருத்த முற்றாள்.

அல்லமரை உருவெளித் தோற்றம் என
மாயை அயிர்த்தல்

68. சொல்லில் அடங்காத அழகை உடைய அல்லமனது திருவுருவம் கண்ணில் காணப்படலால் மறுபடியும் எழுந்து மலர்போலும் மென்கைகளால் வெளியை அணைத்தல் போல் அணைத்தாள்; வெறும் வாயைச் சுவைத்தாள். வல்லி (கொடி) மாயை இவ்வாறு வெளியைக் கண்டு மயங்கி, அல்லமன் தன் கையில் அகப்படாமையால் இது உருவெளித் தோற்றம் என்று அவனது உண்மை வடிவை ஐயுற்றாள்.

தீயிற் புழுவென மாயை துடித்தல்

69. செய்தற்கு அரிய தவத்தை நெடுநாள் புரிந்து தான் அடைந்த அமுதை வாய்வைத்திடும் அளவில் கை தவறுதல் போல் அல்லம தேவன் கண்ணிடத்தில் தோன்றியும் மெல்லிய தோளிடத்தில் அணைக்க, வெளி போல் அகப்படாமையால் நெருப்பிடைப் புழுவெனப் பதைபதைத்து மாயை வருத்த முற்றாள். காமத்தை அல்லமனன்றி, உருவமுள்ளவர்கள் யாரால் கடக்க முடியும்?

O உவமைகள்

மாயையின் வெவ்விய பெருமூச்சு

70. துறவியரை அலைத்த அந்த மாயை, கன்னிப் பெண் என்றும் அரசகுமாரி என்றும் எண்ணாது விருப்பத்தை உண்டாக்கி விட்டும், என்னுடைய இணையான மார்பிடத்துப் பொருந்த அணைத்து இதழ் சுவைத்து அணையின் மீது புணர்ந்து இன்னல் இல்லாத இன்பக் கடலிடை மூழ்க இவ் அல்லமனால் யான் அடையப் பெறவில்லை என்று தன் உள்ளம் நொந்து வெம்மையான பெருமூச்சு எறிந்தாள்.

அல்லமரை மயக்க முடியாது எனல்

71. முகிலால் பொழிந்து விழுகின்ற மழையால் காற்று நனையுமாகில், புகைந்து எழுகின்ற நெருப்பினால் வானம் வெந்து போகுமானால், முழங்கு வெள்ளிய அலைகளையுடைய கடல் அகத்தியனை அழுந்துமாறு செய்யுமாகில், நஞ்சு எழுந்து பரமனைத் துன்பப்படுத்துமாகில், அல்லம தேவன் மயக்கம்

அடைவான்; மற்றவர்களை எல்லாம் ஒழிவற மயக்கும் மாயையும் அவ் அல்லமனை மயக்குவாள்.

O மழையால் காற்று நனைதல், நெருப்பால் ஆகாயம் வேதல், கடல் அகத்தியனை அமிழ்த்தல், நஞ்சு சிவனை வதைத்தல் எங்ஙனம் இல்லையோ அங்ஙனம் மாயையால் அல்லமன் மயங்கல் இல்லை.

O முரண் இயைபணி

**மாயையின் கனவும் பொழுது விடிவும்**

72. ஆகாயத்தைக் குத்திக் கை இளைப்பவர்போல், வேல் போலும் நெடுங்கண்ணையுடைய மாயை அங்கிருந்த அண்ணல்அல்ல மனைத் தழுவித் தழுவி உடல் வருந்தித் தன் வசம் இன்றி அணையின் மேல் உறங்க, முன் நினைத்த நினைப்பினால் அவ் அல்லம தேவன் கூடியது போல இனிய கனவு ஒன்று கண்டு எழுந்தாள். இடம் அகன்ற உலகில் இருள் குடிப்பவனாகிய கதிரவனும் கருங்கடல் முகட்டில் எழுந்தான்.

O உவமையணி

**இரவின் நனவையும் கனவையும் மாயை தோழியர்க்குக் கூறல்**

73. காலையில், மாலை வார்குழல் (நெடுங் கூந்தல்) மாதராகிய தன் தோழியரைக் கண்டு சொல்லுவாள்: ''அல்லமன்தன் கோலம் என்சொல்வேன்! கண் எதிரில் தோன்றுவான். அவனை நெருங்கினால் என் கைகளுக்கு அகப்படான். அதனால் மிகவும் நைந்து யான் உறக்கமுற்றேன். அப்பொழுது கனவில் பருத்த மார்பு குழைந்திட அணைத்து மேலும் நல்ல அருள் செய்து உன்னை யான் என்றும் விலகிலேன் என்றனன்'' என்றாள்.

**தோழிகளின் வியப்பு**

74. அருந்தவம் அழிக்கும் அழகுள்ள அணங்காகிய ம் மாயைக்கு அகப்படாத வெற்றியாளன் யாரோ? இந்திரன் அயன் திருமால் தேவர் முனிவர் கிம்புருடர் வித்தியாதரர் என்று சொல்ல விரிந்துள்ள இவர்களுள் ஒருவன் அல்லன்

இவன். தனித்தன்மை உடையவனாகிய இவனை எண்ணிப் பார்க்கில் மேலான கடவுளே என்று திருந்திழை மகளிராம் தோழியர் தம் மனத்துள்ளே வியந்து, மாயையிடம் உரைக் கலாயினர்.

கனவின் கருத்தைத் தோழியர் விளக்குதல்

75. ‘‘உன் உள்ளத்தின் ஆசையை மிக வளர்ப்பதற்காக அல்லமன் இவ்வாறு விளையாடினான். நீ சொல்லிய கனவின் பயனை உனக்குச் சொல்லில், மறுபடி உன்னை உடல் பொருந்தக் கூடுவான். வாசமென் குழல் மாயையே!’ என்று மாயையின் உள்ளத்தில் வருத்தம் நீங்க அறிந்து கூறினார் கள். கவலை தீர்ந்து மாயை மனத்துள்ளே மகிழ்ச்சி கொண்டாள்.

மோகினி தன் மகளின் இடத்திற்கு வரல்

76. இவ் வண்ணம் மாயையாம் மாதிடத்து நிகழ்ந்த இயல் பினைத் தோழியர் சிலர் சென்று தாயாகிய மோகினியின் பால் சொல்ல அவள் மானம் மீக்கூர, அதனால் துன்பக் கடலில் மூழ்கி, தன் ஒப்பற்ற மகள் வாழ்கின்ற மாளிகையை அடைந்து தோழியரோடு மகளையும் அழைத்து, ‘‘ஐயோ, பேதையே, என்ன காரியம் செய்தாய்!’’ என்று மனம் வருந்தி இவற்றைச் சொன்னாள்:

தன் மகளின் செயலை மோகினி வெறுத்துரைத்தல்

77. ‘‘மானமும் உயிரும் ஒன்றாக நில்லாத இடத்து, உயிரை விட்டுத் தான் அடைய வேண்டிய பொருளாக மானத்தையே கொள்ளும் உன் தந்தையின் காதில் விழுந்தால் என்ன ஆகும்? சூரியனும் சந்திரனும் இயங்கி வரும் காலமெல்லாம் இப் பழி–யானது வழிவழி வந்து சேராதோ? நான் உன்னை வருந்திப் பெற்றதும் இதற்குத் தானோ? பாவி, என்ன செயல் புரிந்தாய்!’’ என்று சொல்லுவாள்.

கன்னியர் மணமுறை (2)

78. ‘‘பெற்றோரின் ஆணையின் வழி நடக்கும் கன்னியர், தாய் தந்தையர் இசைந்து கொடுக்காவிட்டால் முருகவேளை

ஒத்த ஆடவராயினும் அவர்களை அருவருத்து ஒதுக்குவர். அவர்கள் (பெற்றோர்) மகிழ்ந்து கொடுக்கின் அழகற்றவரா யினும் அவ் ஆடவரை மேலான கடவுளாகவே நினைந்து இனிமையோடு கூடி வாழ்வர்.

O கணவனே கண்கண்ட கடவுள் என்ற அந்நாள் கருத்து

பெண்டிர் தம் மனம் போல் நடத்தற்கு
உரியர் அல்லர் எனல்

79. ''அணங்கு போன்ற மகளிர், மணம் புரிவதற்கு முன் தாய்தந்தையரது ஆணையிலும் மணம் புரிந்ததன் பின்பு இணக்கமாக இனிமை புரியும் கணவனது ஆணையிலும் நிற்பர்; தம் வசத்தினர் அல்லர் அவர் என்று சொல்லப்படு வதை அறிந்திருந்தும், அறிவில்லாதவளே! அடாத இச் செயலைச் செய்தாய். உன்னைச் சினப்பவர் இல்லை என்று இருந்தனை போலும்'' என்று தாயாகிய மோகினி முனிந்தாள்.

O அந்தக் காலத்துச் சமுதாய நினைப்பு இங்குத் தரப்பட் டுள்ளது.

மாயை வருந்தல் ; தாய் மனம் கரைதல்

80. தேன் போலும் இனிய மென்மொழியுடைய மாயை, தான் செய்யும் தவறும் தாய் செய்யும் முனிவும் தன் மனத்தை மிகவும் வருத்த, இதற்கு நான் என்ன செய்வேன் என்று நாணித் தலை வணங்கி இரு நிலம் நோக்கிக் கண்ணீர் சிந்த இருந்தாள். அது கண்டு மோகினி சினம் தவிர்ந்து மனம் கரைந்து ''மான் போன்ற கண்ணையுடைய மாயையே! உன் மேற் பிழை இல்லை'' என்றாள். மனம் உருகுவதில் அன்னை போல் ஒருவர் உண்டோ?

O தாயுள்ளத்தின் இரக்கப்பண்பு காட்டப்படுகின்றது.

தாய் தோழியரைக் கடிதலும் அவர்கள் உரைத்தலும்

81. ''மங்கையரே நீங்கள் சூழ்ந்திருந்தும், வளைத்திருக்கும் வேலி இல்லாத பயிர்போல் எங்கள் பெண்ணாகிய மாயையின்

நிறை (கற்பு) அழிந்து ஒழிய என்ன செய்தீர்கள், பாவிகாள்!' என்று மோகினி கூற, அங்கிருந்த மடவார் ''எங்கள் பிராட்டியே! அருளோடு கேட்பாயாக. மன்மதன் செய்யும் துன்பத்தால் உங்கள் குலமடந்தை மாயை உயிர் விடாது இருந்தது உன் தவப்பயன்'' என்று மனம் வருந்திக் கூறினர்.

### சகளையிடம் மோகினி வினாதல்

82. தோழியர் இங்ஙனம் சொல்லிய அளவில் மோகினியாகிய அரசி, சினம் சிறிது தணிந்து, தோழியர் குழாத்துள் மிகவும் சிறந்த சகளையின் முகத்தைப் பார்த்து, ''பூங்கணை உடைய மன்மதன் போன்ற அல்லமனை வெளியே நின்று துரத்திவிடாமல் எங்கள் தண்கதிர் மதி போலும் முகமுடைய மாயையின் முன்னே அனுப்பினாய். அது என்ன காரணத்தால்?'' என்று கேட்க, அதற்குச் சகளை சொல்லுவாள்;

### மாயையை வெறுக்காதே என்று சகளை கூறல்

83. ''மானிடப் பிறவி கிடைத்தற்கு அரிது. அப்படிப் பிறத்தலினும் அரசர் மக்களாகப் பிறத்தல் வாய்ப்பது அரிது. அப்படிப் பிறத்தலினும் உறுப்புக்கள் குறைவறப் பிறத்தல் அரிது. அப்படி வாய்க்கப் பெறினும் அறிவுடன் இருந்து போகங்கள் நுகர்தல் கிடைத்தற்கு அரிதாகும் என்று பெரியோர் கூறுதலால் நீ தவம் பல முயன்று பெற்ற, மீன் போல் பிறழும் கண்களை உடைய மாயையை வெகுண்டு வெறுப்பது தகாது'' என்று உரைத்தாள்.

### மோகினியின் மனத்தெளிவு

84. சகளை புகன்ற மொழிகளைக் கேட்டு முகமலர்ந்து ''என் தவப் பயனாம், பாகு போன்ற சொல்லினை உடைய மாயை தவறுடையவள் அல்லள். யாழோர் மணம் (கந்தர்வ மணம்) அரசர்கட்கு உரித்து என்று கூறுவார்கள். ஆகலின் இவளுக்கு (அவள் விரும்பும்) அல்லமனே திருமணத் தலைவன். அவ—டத்தில் இவள் வேண்டியவாறு போகம் கொள்க!'' என்று புகன்று, பின்னும்...

O பழமையிற் புதுமையான சிந்தனை!

அரசர்க்கு இது தெரியலாகாது எனல்

85. ''தேமொழியீர்! உலகெல்லாம் அறியுமாறு திருமணம் புரியும் அளவும் உலகும் மன்னவனும் அறியாவாறு திலக வாள் (ஒளி) நுதல் மாயையினது செய்கையை நீங்கள் மறையுங்கள். இவளது நலமும் தீமையும் உங்களுடையதாகும், நான் சொல்வது என்ன?'' என்று கூறி, மகள் மாயைக்கு அளவிலா மகிழ்ச்சி செய்து போயினள், தன் மனத்தில் சினம் பொருந்த வந்த தாய் மோகினி!

O பெற்ற தாயின் ஆதரவுப் பண்பு புலனாகின்றது.

சகளையிடம் மாயை தன் தாயைப் பாராட்டல்

86. ''எனது பிழையைப் பொறுக்காமல் தாயிடம் என்னிடத்துள்ள தோழியரே சொன்னால், அதனால் அன்புடைய அன்னை முனிந்து கொள்வாளோ'' என்று உரைத்தாள் மாயை. அவள் உரைத்தவற்றைக் கேட்ட திருமகள் போன்ற சகளை, ''(சாந்த ஆங்காரன் என்ற) நம் குரு, உனக்குத் திரிபுரம் எரித்த கடவுளே நாயகன் என்று சொல்லியிருக்கவும், பின்பு நீ இந்தக் காரியம் செய்தால் உன்னைக் குறித்துப் பிழை சொல்வார்மேல் பிழை உண்டோ ?

அல்லமரை வெளியே அனுப்புதல் முறை என்று சகளை கூறுதல்

87. ''மான் போன்றவளே! (மாயையே!) நம்முடைய தாய் அறிந்தபடியால் நொய்துபட்டது (அற்பமாய் மறைந்தது). அன்றி அரசன் அறிவானாகில் எளிதாகுமோ? கோமள வல்லி (அழகிய கொடி) யே! கேட்பாயாக. போனது போக, இனியாகிலும் அவ் அல்லமனை வெளியே விடுப்பது தான் அறிவுடைமை'' என்று கூறினாள். மாயை அதனைக் கேட்டு அயர்ந்து தாங்கரும் துயரத்தோடு இருந்தாள்.

அல்லமர் வினாதலும் சகளை வேண்டுதலும்

88. பின்பு, அல்லமன் நடந்தன அறிந்து, 'உங்கள் திரு மடந்தைக்கு நேரிட்டது என்ன என்று சொல்லுவாயாக' என்று கேட்க, சகளை என்னும் தோழி, ''கொடி போன்ற மாயை

உன்னுடைய மாயைவலையிடை அகப்பட்ட இரகசியங்கள் எல்லாம் அரசமாளிகையில் நிரம்பின. பழைய நல்வினை காரணமாக அரசன் ஒருவன் மட்டும் அறிந்திலன். நாமெல்லாம் பிழைக்க வேண்டி உன்னிடம் சொல்லுவது ஒன்று உண்டு. ஐயனே நீ வெளியே ஓரிடத்தில் இருப்பது நன்று ஆகும்'' என்றாள்.

மாயையைப் பிரிந்தால் பகலிரவு ஏது என்கிறார் அல்லமர்

89. அதற்கு ''மாயையை விட்டு நீங்கினால் நடக்கக் கால் எழுமோ? வாயினிடத்தில் ஒரு சொல் வருமோ? ஒரு பொருளில் போய் மனம் ஈடுபடுமோ? பொருந்திய இரவு பகல் உளவாகுமோ? உடலும் உயிரும் கலந்து வாழுமோ? என்னை ஒருவர் கண்டோம் என்று இங்கு நீ யறியச் சொல்வா ருண்டோ? பெண்ணே!'' என்றனன் அல்லமன்.

O மாயையாகிய பிரகிருதிக்கும் மாயையாகிய (கதை) மடந்தைக்கும் இயைபுறக் கூறப்பட்ட கருத்துக்கள். இயைபு நவிற்சியணி.

விதியிருந்தால் மாயை உனக்குக் கிடைப்பள் எனல்

90. அல்லமன் கூறிய கருத்தினை அறியாமல் அவ் அல்லமன் சொன்ன சொற்கள் தனக்குக் காட்டிய வெளிப் பொருளையே மனத்திற் கொண்டு, முன்பு, எப்போது கருணை செய்குவான் என்று திரிந்தவளாகிய சகளை அல்லம தேவனைப் பார்த்து, ''மணங்கமழும் பூங் கொத்தை அணிந்த மெல்லிய கூந்தலையுடைய மாயை நின்னைக் கூடும் ஊழ் உளதாகில் அது எங்கள் கொடியை (மாயையை) ஒருவன் ஆகிய நீ எங்கிருப்பினும் உன்னிடம் கொண்டு வந்து கொடுக்கும். இதில் ஐயம் வேண்டாம்'' என்று சொன்னாள்.

அல்லமர் புறப்பட்டு, இறைவன் திருமுன் மத்தளம் அடித்தல்

91. சகளை இவ்வாறு சொல்ல, ''நங்கையே! நீ உரைத்தது மிகவும் நன்று, நன்று'' என்று கூறிப் பின்னர், நகை மதி (ஒளியுள்ள திங்கள்) தவழும் செஞ்சடையானாகிய

மதுகை நாயகன் சந்நிதிக்கு வந்து, அரும்பைப் போலும் தனங்களை உடைய மாயை ஆடும் பொழுது, இது தனக்குக் தக்கது என்று வளருகின்ற பேரறிவினால் தன்னைத் தான் அறிய வேண்டுவதன்றி ஏனையவை எதனாலும் அறியப் படாதவனாகிய அல்லமன், தன் தொழிலை (மத்தளம் அடித் தலைச்) செய்யும் செய்கையில் இருந்தான்.

O அல்லமன் அறிவே வடிவாக விளங்குபவர், தன்னைத் தான் அறிதலாகிய ஆன்ம அறிவால் அன்றி ஏனையவற்றுள் ஒன்றாலும் அறியப் படாதவன் என்ற குணச் சித்திரம் ஞான நெறி ஒன்றாலே இறைமையை, உணர்தல் இயலும் என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றது.

O

# 6. விமலை கதி

O அல்லம தேவரின் பிறப்பு வளர்ப்பு இயல்பு, அவர் விடை பெறல் என்பன இக் கதியில் விமலை கூற்றாக வரு கின்றன.

கதைச் சுருக்கம்: கவிஞர் கூற்று

1. இரசோ குணத்தின் வடிவமாகிய விமலை என்பவளை இறைவி அனுப்பி விட, அவள் அகன்ற நிலவுலகை அடைந்து, மலத்தோடு கூடிய மாயையைக் கண்டு நின் மலனாகிய அல்லமனது ஒழுக்கத்தை அன்புடன் சொல்லிய வகையைச் சொல்லுவோம்.

மாயையின் மயக்கம் மிகுதல்

2. மதுகேசுவரனை நாள்தோறும் மாயை மிகுதியாகப் பூசனை புரிந்து வந்தாள். ஆயினும் அல்லம தேவன் கொடுத்த மயக்கமோ அவளது மனத்தில் மிகுந்து வந்தது. இங்ஙனம் எண்ணிலா நாட்கள் கழிந்தன.

இறைவி விமலையை நிலவுலகிற்கு அனுப்பி வைத்தல்

3. இங்ஙனம் இருந்து வந்த காலத்தில், உமாதேவி விமலையிடம், ''பூமியிடத்து மாயை போய் நெடு நாட்கள் ஆகி விட்டன. இன்னமும் வரவில்லை. ஆகவே நீ அங்கே சென்று தங்கி விடாமல், அவளை அழைத்துக் கொண்டு இவ்விடம் வந்து சேர்'' என்று அனுப்பி வைத்தாள்.

விமலை பூவுலகம் வருதல்

4. களங்கம் இல்லாத ஒளியுள்ள கயிலாசத்தினின்று நம் பிராட்டியாகிய பார்வதி ஏவ, விமலை வணங்கினாள். மறு விலா மதி போன்ற அவள், வளர்ந்து வரும் தனங்களின் பாரம் தாங்காமல் விழுந்தாள் என்று சொல்லும்படி பூவுலகம் வந்து அடைந்தாள்.

O தற்குறிப்பணி.

விமலை மாயையைக் காணுதல்

5. மணம் கமழும் மென்மலர்க் கற்பகக் கொடியான விமலை பொன்னாலான மதில் சூழ்ந்த வனவசை என்னும் நகரத்தில் பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்ட செல்வம் மிக்க மாடத்தினைச் சேர்ந்தாள். அங்கே அழகிய மாயைக்கு எதிரே வந்து நின்றாள்.

மாயை விமலைக்கு இருக்கை அளித்தல்

6. விமலை வந்து அப்படி நின்றதைக் கண்ட மாயை, இம் மாது வாழிடம் நிலவுலகு இல்லை போல் தெரிகிறது என்று ஆலோசித்து எழுந்து வணங்கி விரும்பி அவள் அமருமாறு ஓர் இருக்கை அளித்தாள்.

அவர்கள் இருவரையும் கண்ட மடந்தையர் வியப்பு

7. அருகாக அமர்ந்திருந்த அம் மாதர் இருவரையும் கண்ட நகரப் பெண்டிர், இரு கரங்கள் ஏந்திய மாணிக்கங்கள் போல் அமையப் பெற்று இவ் விடத்து ஒரே தன்மையராக ஒத்திருக்கிறார்களே என்று அதிசயித்தார்கள்.

O உவமையணி

மாயையின் வினா

8. வந்த மடந்தையை நோக்கி மாயை, ''உன் இருப்பிடம் யாது? உன் பெயர் என்ன? நீ வந்த காரியம் யாது?'' என்று கேட்டாள். தேயும் நுண்ணிடை விமலை அதற்கு உரைக்கலானாள்:

விமலையின் மறுமொழி

9. ''கற்பகக் கொடி போன்ற மாயையே! நான் வசிக்கும் இடம் கயிலை, என் பெயர் விமலை. பெருமை பொருந்திய இமயமலையின் புதல்வியாகிய இறைவி உன்னிடம் அனுப்பினாள், அதனால் அகன்ற நிலவுலகிற்கு வந்து உன்னை அடைந்தேன்.''

மாயையின் மறுகேள்வி

10. இங்ஙனம் விமலை உரைக்க, மன்னன் மகளாகிய மாயை, ''எம் தலைவியாகிய இறைவி, நிலைபெற்ற வெவ்விய துயர் உடைய மானிடப் பிறப்பினளாகிய என்னை நினைத்து உன்னை அனுப்பியது என்ன காரணத்தினால் என்று கூறுக'' என்று கேட்க, அதற்கு விமலை சொல்லத் தொடங்கினாள்:

மாயையின் வரலாறு. விமலை கூறல்

11. ''அல்லமனது வலிமை நிலையை அறிந்து வா என்று நன்மை மிக்க உமாதேவி உன்னை அனுப்ப, நன்று என்று என் தங்கையாகிய நீ வல்லமை பேசி மண்ணுலகிற்கு வந்த பிறகு, நீ முன்பு சொன்ன பெரிய சூளுரையை மறந்தே போனாய்.

நீ உன்னை அறியவில்லை என்கிறாள் விமலை

12. ''மாயையே! நீ உன்னையே அறிந்திலை என்றால் இவ் விடத்து மன வாக்குகளுக்கு எட்டாத அல்லமனை அறியக் கூடிய தன்மை உண்டோ? உமாதேவியின் தமோ-குண அம்சம் அல்லவா நீ?

O தன்னை உணராதோர், தலைவனை உணரார் என்ற அடிப்படைக் கருத்து நினைதற்கு உரியது.

இறைவி விமலையை அனுப்பிய காரணம்

13. ''இதழ்கள் விரிந்த மலரணிந்த கூந்தலை உடைய மாயையே! ஓடுவதற்கு உரித்தான மருந்தை ஒருவன் உண்டு விட்டு ஓடாமல் உறங்கி விடுகின்ற தன்மை போல் சொல்லிய சபதத்தை நீ மறந்து சோர்ந்தனை. ஆகவே உன்னைத் தேடி அழைத்து வருவதற்கு என்னை நன்மை சான்ற உமையவள் ஏவினள்'' என்று விமலை தெரிவித்தாள்.

O உவமையணி.

மாயைக்குச் சிறிது தன்னுணர்வு வருதல்

14. முறை நூல் உணர்ந்த மன்னனின் மகளாகிய மாயை, விமலையின் சொற்களால் சற்று நினைவு வரப்பெற்றாள். கதிரவன் உதிக்கும் பகற்பொழுதில் பொருள்களைக் காணுமாறுபோல் அல்லாமல் குளிர்மதி உதயமாகும் இரவுப் பொழுதில் பொருளைக் கண்டாற்போல (மங்கலாக)த் தன் முன்னை நிலையையும் தான் செய்து வந்த சபதத்தையும் ஒரு சிறிது அறிந்தாள்.

O சிறிதளவு நினைவு வருவதற்கு அருமையான உவமை தரப்பட்டுள்ளது.

தன் மயக்கத்தை மாயை ஒப்புதல்

15. ''பிரபஞ்சத்திற்கு மூல காரணன் என்று சமயவாதிகள் சிலரால் சொல்லப்படும் திருமாலும் ஒரு மானிடப் பிறப்பில் வந்து தன் பழைய நிலையை அறிந்திலன் என்றால் மிகவும் அறியாமை உடைய நான் இவ்வுலகத்தில் மயங்குதலைச் சொல்ல வேண்டுமோ?

O இராமாவதாரம் பற்றிய குறிப்பு இங்கு அமைந்துள்ளது. மயக்கம் மானிட இயல்பு; தெளிவு இறைமை இயல்பு.

அல்லமனின் இயல்பை மாயை விமலையிடம் கேட்டல்

16. ''பூந்துணர்க் கொடி போல்பவளே! குமுதம் போலும் நின் திருவாய் மலர்ந்து அல்லமதேவனின் இயல்பான குணங்களை எல்லாம் சொல்லுக'' என்று விமலையின் இணையடி தொழுதாள் மாயை. அதற்கு வில்லையொத்த அழகிய நெற்றியையுடைய விமலை உரைப்பாள்;

விமலை அல்லமரைப் பற்றிக் கூறுதல்

17. ''கயிலையில் உமாதேவியுடன், நெற்றிக் கண்ணை உடைய பரமசிவன், வியத்தகு செயல்களை உடைய அல்ல மனது செய்திகளைக் கூறலும் நான் அங்கே பக்கத்திலிருந்து கேட்டறிந்திருக்கிறேன். அந்த வரலாற்றை மயிலினது சாயலையுடைய மாயையே! கேள்'' என்று விரித்துச் சொல்லத் தொடங்கினாள்.

அல்லமன் பெற்றோர்

18. ''இவ்வுலகத்தில் வள்ளிகாவை என்ற வூரில், தன்னிகர் அற்றவனும் இடையறா அருள் உடையவனும் ஆன நிராங்காரன் என்பானும், மடிவிலாக் கற்புடையவளும் அவன் மனைவியும் ஆன குற்றம் நீங்கிய சுஞ்ஞானி என்பாளும், நீக்கப்படாத வேதாகம விதிகளை இவர்களைப் பார்த்து உலகத்தார் தெரிந்து கொள்ள (எடுத்துக் காட்டாக) நடப்பவர்கள்.

O நிராங்காரன்; நான் என்னும் ஆணவம் அற்றவன் (நிர்+ஆங்காரன்) சுஞ்ஞானி: நல்ல அறிவினை உடையவள் (சு+ஞானி). இவை தத்துவப் பொருட் பெயர்கள்.

அவர்களது இலட்சிய வாழ்வு

19. ''சிவமே உண்மை. அஃது அல்லாததாக இருக்கிற விரிந்த உலகம் பொய் என்பதோடு இம்மையும் மறுமையும் நிலையற்றது என்ற கருத்து உடையவர்கள். நன்னெறி இல்லாத உட்கருவிகளும் (அகத்தும் புறத்தும் திரியும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற அந்தக் கரணங்களும்) காமம் முதலியனவும், பொய்ச் செய்கையும் இல்லாதவர்கள் அவர்கள், ஞான ஆசிரியனால் உரைக்கப்பட்ட நூலையே உறுதிப் பொருளாகக் கருதி விடுதலை (முத்தியை) விரும்பும் துணிவுள்ளவர்கள்.

O ஞான நெறி நிற்போரின் இயல்புகள் இங்கு நவிலப் பட்டுள்ளன. மெய்ப்பொருளே உண்மை, சகம் கட்டுக்கதை (பிரம்மம் சத்தியம் ஜகம் மித்தியை) என்பது வேதாந்தத்தின் தொடக்கப் பாடம்.

மக்கட் பேறு இன்மை

20. "இத் தன்மையராக அவர்கள், இருந்து வந்தனர். இல்லறத்தில் நின்றும், மக்கட்பேறு இன்மை கருதி மனம் தளர்வான் போன்று நிராங்காரன் "தியானம் இல்லாத நெஞ்சமும் ஞானம் இல்லாத கருமமும் போன்றது மக்கள் இல்லாத வாழ்வு" என்றான்.

O தத்துவம் சார்ந்த உவமை. இடத்திற்கு ஏற்ப உவமைகளை ஆளுவதில் இந் நூலாசிரியர் வல்லவர்.

மக்களைப் பெறுதல் எதற்கு?

21. "இந்த உலக வாழ்விற்கு (அருந்தல் பொருந்தல்களுக்கு) உதவியாகத் தக்க பல தொழில்களைச் செய்கின்ற மைந்தன் வேண்டும் என்று விழைபவன் மனிதருள் பதர் போல்வான். மேல் உலகிற்கு (காமியத் தவங்களுக்கு) உதவியாக மைந்தன் வேண்டும் என்று நினைக்கின்றவன் அறத்தின் தன்மை உணர்ந்தவன் ஆவான். ஒன்றாகிய பேரின்பத்திற்கு (நிட்காமிய தவத்திற்கு) உதவும் மைந்தனை விழைபவன் ஞானியாவான் என்று நிராங்காரன் நினைத்தான்.

O ஞானநெறியின் கூறு குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

O இவ்வுலக உதவி, மறு உலகிற்கு ஆகும் அற உதவி இவற்றினும் அத்துவிதானந்த உதவி உயர்வானது.

O மக்கட் பதடி என்பது திருக்குறள் தொடர்.

உயர்மகனை விழைகிறான் நிராங்காரன்

22. "துன்பம் கொடுக்கும் பிறவி நோயை ஒழிக்க எண்ணும் மனத்தை உடைய நிராங்காரன், உடம்பை ஐம்பொறிகளை மனம் முதலிய உட்கருவிகளை பிராண வாயுவை, தான் என்று நினைத்து உழலாமல் அவை முழுவதும் ஒழித்துத் தன்னை அறிந்து பேதம் அபேதம் என்ற வாதவகை மயக்கம் நீங்கியிருக்கும் மேலான விடுதலையை அறிவிக்கும் மைந்தன் வேண்டும் என்று எண்ணினான்.

O தத்துவக் கருத்து; ஞான நெறியின் கூறுகள் இயம்பப்பட்டுள்ளன.

இறைவனின் அருளைப்பெற நினைத்தல்

23. "நான்கு இதழ், ஆறு இதழ், பத்து இதழ், பன்னிரண்டு, பதினாறு இதழ், இரண்டு இதழ் ஆகியவை கொண்ட ஆறு ஆதார கமலங்களையும் தரிசித்துச் சென்று(குளத்தில்) நெற்றியில் இருந்த ஒப்பற்ற ஆயிரம் இதழ்களையுடைய நின்மலமாகிய தாமரை மேல் வீற்றிருக்கும் சோதி வடிவமாகிய சிவத்தைத் தன்னுள்ளே கண்டு என் எண்ணத்தை நிறைவேற்றுவேன் என்று எழுந்து

O யோக நுண்கலைச் செய்தி

O ஆறு ஆதாரம்-தாமரைகள். அவை நான்கு இதழ் முதலாகச் சொல்லப்பட்டன. அவை முறையே மூலாதாரம்[4], சுவாதிட்டானம்[6], மணி பூரகம்[10], அநாகதம்[12], விசுத்தி[16], ஆக்ஞை[2] என்பனவாம்.

O குளம்-நெற்றி; குளம் (இருபொருள் அழகு)

வனத்திற் புக்குத் தவம் இயற்றினர்

24. "வேறாகிய இன்னொருவனுடன் இருப்பதும் தவத்திற்கு ஆகாது என்ற உரைக்கு முரணாக, மனைவியும் கணவனும்-சுஞ்ஞானியும் நிராங்காரனும்-வனம் சென்று பத்மாசனத்து அமர்ந்து திறந்தும் திறவா விழியின் (சம) நோக்கோடு தேற்றாங் கொட்டையால் தெளிந்த நீர் போல், பயனாகும் இட்டலிங்கத்தின் மேல் பிறழாது மனத்தை அமைய வைத்து

O தேற்றா விதை—வேதாந்திகளால் காட்டப் பெறும் எடுத்துக் காட்டு

தவ நிலை

25. "உடம்பு தூண் போல் நேராக இருக்க, விளங்கும் இடை பிங்கலை என்னும் இருநாடியின் வழியே போய்த் திரும்பும் காற்றை நிறுத்திச் சுழிமுனையாம் நடுநாடியில் செலுத்தி அறிவு எள்ளளவும் அசையாமல் அன்னப் பெயர் கொண்ட (ஹம்ச) மந்திரத்தை மாறிக் கொண்டு, குறிகடந்ததான ஒப்பற்ற குறியை (பரம்பொருளை) நாடியவர்களாக அவ் வனத்தில் இருந்தார்கள்.

O யோக நிலை பற்றிய குறிப்பு இதில் அழகாக அமைந்துள்ளது.

### பரஞ்சோதியைப் பார்த்தனர்

26. “[அவர்களின் யோக சாதனத்தால்] பிராண வாயு [மிகக் குறைந்து] நின்றது. வாயு நின்றதால் மனம் நின்றது (ஒடுங்கியது) மனம் நின்றதால் பொறிகள் நின்றன. பரவிய பொறிகள் நின்றதால், துன்பப்படும் புலன்கள் நின்றன. புன்புலன்கள் (சிறிய விஷயங்கள்) தோன்றாது நிற்கவே பிரபஞ்சம் தோன்றவில்லை. அகத்தினிடத்துத் தூய பேரின்பப் பெருஞ்சுடர் (பரசிவம்)தோன்ற அதனைக் கண்டிருந்தார்கள்.

O கடவுட் காட்சி எய்தும் முறை கூறப்படுகிறது. யோக வேதாந்தப் பேருண்மையை மிக எளிதாக இங்கு ஆசிரியர் விளம்பியுள்ளார்.

### குழந்தையைக் கண்டனர்

27. “குவிந்த மனத்துடன் இத் தகைய சிவயோக சமாதியில் ஒன்பது திங்கள் பூரணமாக இருந்த காலத்து, நெற்றியின் மேல் அருட்சுடர் [பரசிவம்] திரண்டு குழந்தை வடிவம் ஆகி வந்து புறந்தே இருக்க, அக் குழந்தையை விரும்பி நாடியிருந்த இருவரும் அப்பொழுதே கண்களைத் திறந்து கண்டார்கள்.

O காமத்தால் தோன்றி முந்நூறு நாளில் தாய்வயிற்றினின்று பிறக்கும் குழந்தை போலாது சிவயோக சமாதியால் பிறந்த ஞானக் குழந்தை, நெற்றியில் பிறந்தது என்பது சிந்தனைக்கு உரியது.

### சுடர் மிகு மதலை

28. “அத் தாய் தந்தையர் இருவர்க்கும் தம்மை அறியாத உவகை உள்ளத்தில் பெருகியது, சோதி மதலை (பரசிவமாகிய குழந்தை) வெம்மை நீங்கிப் பூமிக்கு வந்து பிரகாசிக்கும் சூரியனோ? பனி நீங்கி எம்மை ஆள வேண்டி வந்த சந்திரனோ? இடுகின்ற விறகுகளை எரிக்காத செவ்விய

ஒளிமிக்க பெரிய நெருப்போ? அறிதல் இயலவில்லை என்று கூறுமாறு, விளங்கித் திகழ்ந்தது.

இத்தகைய மக்கட் பேறு கிடைப்பதில்லை

29. ''மாயை நீங்கப் பெற்ற நிராங்காரன் சுஞ்ஞானி இணைபோல் மலவிருளைக் கெடுத்து வளர்கின்ற சத் சித் ஆனந்த வடிவான நந்தா விளக்காகிய குழந்தையை, பிறப்பில் அலைந்து ஆங்கார அஞ்ஞான வடிவான மானிடரும் மிகுந்த தேவர்களும் முனிவரும் மற்றையோரும் பெறுவர் களோ?

O தவப் பேறு – பேரின்பப் பேறு – இறைமை நிலை – இங்கு ஓர் உருவாக, மகப் பேறாக உருவாக்கம் பெற்றுள்ளது

அவர்களுக்கு நிகர் அவர்களே!

30. ''[மாயையைப் பார்த்து விமலை மேலும் சொல்லுவாள்] கச்சணிந்த இளமெல் அரும்பனைய தனங்களையுடைய மாயையே! பேரானந்தத்தைப் பிள்ளையாகப் பெற்ற அவ்விரு வர்க்கு நிகர் அவர்களே தான், சிறு புலன் வழியான ஓர் இன்பம் பெற்று அப்பொழுதே ஒழிந்து போகும் உலக மாந்தரை அவர்களுக்கு நிகர் என்று நாம் சொல்ல முடியுமா?

கடவுளைக் குழந்தையாகப் பெற்றார்கள்

31. பற்றாகிய தளை நீங்கிய பெரியோர் சிலர் முன்னாளில் பரஞ்சோதியைத் தமக்குள்ளே கண்டு வாழ்வு பெற்றார்கள். ஆயினும் அவரைப் பிறர் காணக் காண்பிக்க வில்லை. தொண்டுபடும் இந்த நிராங்கார சுஞ்ஞானித் தம்பதியர் தம் முள்ளே கண்டுகொண்ட ஒளியை உலகமெல்லாம் உய்தற் பொருட்டுக் குழந்தையாக்கிக் காட்டினார்கள்.

புனிதர் குழந்தையாகப் பிறந்தபோது எழுந்த புதுமைகள்

32. தூயோன் [மா தேவன்] குழந்தையாக உதித்த நாளில் சங்குகளும் தெய்வ துந்துமிகளும் ஒலித்தன. மலர்கள் மாமழை பொழிந்தன. திசைகளெலாம் பிரகாசித்தன, மரங் கள் துளிர்த்தன. சேறு கலந்த புனல்கள் தெளிந்தன. கொடி யோர் மனங்களும் தெளிந்தன. அருள்பொங்கும் துறவியர் மனமும் மகிழ்ந்தன. [மாயை பிறந்த காலத்து யாண்டும்

மயக்க மயமானது. அல்லமர் பிறந்த காலத்து யாண்டும் தெளிவு மயம் ஆனது].

நிராங்கரன் குழந்தையைத் தழுவி எடுத்தல்

33. ''வாடாத மனத்தினனான நிராங்காரன் ஞானத் திரளா கிய, மெய்யறிவு வடிவாகிய, பிள்ளையை உண்மையாகிய அகக் கண்ணால் பார்ப்பதோடு இந்தப் புறக் கண்ணாலும் பார்க்கப் பெற்றோம் என்று தன்னை அறியா உவகைக் கடலில் மூழ்கிக் கரை ஏறாதவனாகக் குழந்தையை மார்போடு பொருந்தத் தழுவிக் கொண்டு கையால் எடுத்தான். அப் போது, எங்கும் நிறைந்த கனவானாகிய குழந்தை எடுத்தற்கு எளிதாகிய கனவானாக இருந்தான்.

○ 'கையால் எடுப்ப, எங்கு நிறை கனவான் கனவான் நொய் தாகி' என்பதில் கனவான் கனவான்என்பது சிலேடை.பெருமை யுடையோன், கனக்காமல் (இருந்தான்) என்பன பொருள். எங்கும் நிறைந்த பெருமகன் எடுக்க இலேசான குழந்தையாக இருந்தான் என்பதாம்.

கணவனிடம் சுஞ்ஞானியின் வினா

34. ''சிவந்த வாயினள், ஞானமயில் போன்றவள் ஆகிய சுஞ்ஞானி தன் கொழுநனின் செந்தாமரைப் பாதங்களை வணங்கி, ''நமக்கு இங்கே வந்து வாய்த்த சிறந்த பிள்ளையின் இயல்புகளை நீ இயம்புக'' என்று கேட்டாள். அதற்கு நிராங்காரன் ஆராய்ந்து, ''சிவ ஆகமங்களாலும் வேதங் களாலும் சொல்லுதற்கு அரிய நம்முடைய குழந்தையின் தன்மையை யான் எப்படிச் சொல்லுவேன், மாதே!'' என்று வியந்து சொல்லுவான் :

இறைவனே குழந்தையாக வந்துளான் என்று கூறல்

35. ''மூங்கிலினால் செய்தது போன்ற தோளையும் கனி போன்ற வாயையும் தடங்கண்களையும் உடையவளே) சுஞ்ஞானியே!) நாம் பூமியில் குழந்தையாகப் பிறவாமல்

நம்மிடத்தில் குழந்தையாகப் பிறந்தவன், இனிய பாற்கடலில் துயில்வோனும் (திருமாலும்) செந்தாமரை மேல் உறைவோனும் (பிரமனும்) காணற்கு இயலாத அடியும் முடியும் உடைய பெரியோன் சிவனே ஆவன். இதற்கு ஐயம் இல்லை'' என்றான்,

O 'நாம்பார்க் குழவி ஆகாமல் நம்பாற் குழவி ஆயினான்' என்பது கவிஞரின் திறமான சொல்லாட்சி. நமது பிறவிப் பிணியைப் போக்க வந்தோன் நம்மிடம் மகனாக வந்துள்ளான் என்பது அதன் நயமுள்ள கருத்து.

O மாலும் அயனும் அடி முடி காண முயன்றது புராணக்கதை

தாயின் உவகைப் பெருக்கு

36. ''பசும்பொன் மலை போல வளர்ந்திருந்தும் இடையின் வறுமையைப் போக்க அறியாத இளம் மார்பை உடைய மாயையே! (என்று விமலை தொடர்ந்து மேலும் கூறுவாள்) மிகுந்த மயக்கம் தரும் உடற் சேர்க்கையினால் அன்றி, தவ யோகத்தினால் பெற்ற பொழுதில் (அடைந்த மகிழ்ச்சியை விட) தன் மகனைச் சான்றோன் என்று சொல்லக் கேட்டதனால் உண்டாகிய உவகைக் கடலில் மூழ்கினாள் தாய்.

O பசும்பொன் மலைபோல் வளர்ந்திருந்தும் இடையின் மிடியை நீக்க அறியாத இளம் மார்பு என்பது சாமர்த்தியமான [வஞ்சப்] புகழ்ச்சி. இடையின் சிறுமையையும் மார்பின் பெருக்கத்தையும் மிகுத்துப் புகழ்தல் அது.

O ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய் என்ற குறளின் கருத்து இங்கே ஒளிர்கின்றது.

O உடலாற் பிறக்கும் குழந்தையினும் அறிவாற் பிறக்கும் குழந்தை உயர்ந்தது; மெய்யறிவாற் பிறக்கும் குழந்தை அதனினும் மேன்மையானது.

அல்லமாப் பிரபு என்று பெயரிடுதல்

37. ''மயக்கம் பொருந்திய மனத்தினுடன் தங்கள் புத்தியினால் ஒன்றைச் சொல்லி அதுவே உண்மைப் பொருள் என்றும்,

அதனை வேதம் ஆகமங்கள் ஓதும் என்றும் யுக்தியினாற் கூறி, கண் கூடாகக் காணும் பொருளைப் பழிக்கின்ற சமய வாதிகளின் மயக்கத்தை 'அல்ல' என்று மறுத்துத் தெளி-வுறுத்தும் அம்லமாப் பிரபு என்று குழந்தைக்குப் பெயரிட்-டார்கள்.

O அல்லம தேவரின் பெயர்க்குக் காரணம்- பொருள்-இங்குத் தற்குறிப்பாக விளக்கம் பெறுகிறது.

அல்லம தேவர் தெருவில் விளையாடல்

38. ''இருவினைப் பயனால் இறைவன் கொடுத்துப் பெற்ற உருவம் உடையவன் அல்லாமல் அந்த இறைவன் தானே ஒரு மனிதனாகி நடிக்கின்ற வடிவம் உடையவன் ஆதலாலே அல்லமன் தான் எண்ணியபடி தவழ்ந்து, பின்பு நின்று, மெல்ல நடந்து போய், மாணிக்க மணிகள் பதித்துச் செய்யப் பெற்ற பெரிய மாளிகைகளை உடைய தெருவில் ஆடல் நடத்தினான்.

அன்னை அழைக்க வருதல்

39. ''வருக எங்கள் உயிரே! வருக கண்ணால் நுகர்தற் குரிய அமுதமே! வருக எங்கள் குல தீபமே! வருக கெடாத செல்வமே! வருக பாசத்தைக் கெடுப்பவனே! வருக ஞானத் தைப் பொழுது போக்காகக் கொண்டவனே! வருக!'' என்று தாய் சுஞ்ஞானி சொல்லி அழைக்க, உள்ளம் மகிழ்ச்சி அடை யுமாறு மேலே வந்து விழுவான் அல்லமன்.

O குழந்தைமை குறித்த வருணனை இனிதாக அமைந் துளது.

சிற்றில் சிதைத்தல்

40. ''மானிடன் போலவே விளையாடல் புரியும் அல்லமன், மாயையால் உண்டான பெயர் வடிவுகளைக் கெடுத்து, என்றும் இருப்பதாகிய பிரமத்தை அறியும் வழியை அறிவித் தல் போல், கூடிய பேதைப் பருவப் பெண்கள் மணலினாற் செய்த சிறு வீடுகளைத் தனது தாள்களால் அழித்துப் போய் உலாவுவான்,

○ தற்குறிப்பு. உலகியலுக்குத் தத்துவச் சார்பான உவமை வந்துளது.

சிறுதேர் உருட்டலும் பம்பரம் ஆடுதலும்

41. நான் அசைத்தால் அசையும் இவ் வுலகம் என்று தெரிவித்தல் போல் நல்வீதியில் பொன்னால் செய்யப்பட்ட சிறு தேரைச் செலுத்துவான். யான் தேறாத உள்ளம் இதற்கு நிகராகும் என்று சொல்பவனைப் போல, நமக்கு உயிராயிருக்கும் அல்லமன் புதிய பம்பரம் ஆடுவான்.

○ குழந்தை விளையாட்டு தற்குறிப்பேற்றம்.

○ பம்பரம் சுற்றுதல் இங்கு இடம் பெற்றுளது. உலகியல் விளையாட்டுக்கள் தத்துவ அர்த்தத்துடன் மிளிர்கின்றன.

கல்வி கற்றல்

42. பெருமை பொருந்திய பழமறைகளும் சொல்லுதற்கு அரிய புகழாளனாகிய அல்லமன், எதிரே ஒரு கண்ணாடியை வைத்துக் கொண்டு தம்முடைய முகத்தைப் பார்க்கின்றவர்களைப் போல ஞானத்தை உடைய குருவைச் சேர்ந்து அவரை எதிர் கொண்டு, தன்னுடைய பெரிதாகிய வித்தைகளை ஆராய்ந்து ஒள்ளிய நூல்களைக் கற்றுக் கொள்ளுதல் போல் பல கூத்துக்கள் செய்தான்.

○ உவமையணி

○ பிறவிப் பெரும் பிரம்ம ஞானிக்குக் கல்வி கற்றலும் ஒரு விளையாட்டுத்தான்.

எங்கணும் செல்ல அல்லமர் நினைத்தல்

43. தந்தையும் தாயும் மனம் மகிழத், தனது பெரிதாம் அருளினால் மைந்தனாகி வந்து ஒரு இளமை விளையாட்டு நடித்த எம் தந்தையாகிய பிரபு தேவன் உலகு முழுமையும் போய் மக்களின் வலிய பாவங்களை அழிக்க நினைத்துத் தன் பெற்றோரிடம் இது சொல்லத் தொடங்கினான் :

அல்லமர் தம் நோக்கத்தைத் தந்தை தாயரிடம் உரைத்தல்

44. ''உங்களுடைய ஒருமைப்பட்ட நினைப்பினால் நான் மகனாக வடிவம் கொண்டு இங்கு மேவி இருந்தேன், இனி

நடந்து உலகம் முழுமையும் போய் அங்கங்கும் வசிக்கின்ற முனிவர் முதலியோரது நினைப்புக்களை நிறைவேற்றுவேன்'' என்று எங்கள் கடவுளாகிய பிரபு தேவன் இயம்பப், பெற்றோர் சொல்லுகின்றார்கள்:

### பெற்றோரின் மறுமொழி

45. ''பிறப்பு என்னும் கடலில் ஏற்படும் குற்றத்தை உடையவர்களாகிய எங்களுக்குக் கிடைத்த தெப்பத்தைப் போன்றவனே! நீ எங்களை விட்டு நீங்குவையாயின் வீடு (முத்தி) என்னும் ஒள்ளிய கரையினிடத்தில் சேராமல் நாங்கள் அக் கடலில் மூழ்கி விடுவோம்'' என்று மறப்பு இல்லாத இருமுது குரவரும் மனம் உளைந்து கூறினார்கள். அவர்கள் தெளியும்படி ஞான சிகாமணியாகிய அல்லமன் சொன்னான்:

O பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார் என்ற குறட் கருத்து விளக்கம் பெற்றுள்ளது.

### உங்களை விட்டு நீங்கேன் என்று கூறுதல்

46, ''சிறிது பொழுதும் உங்களை விட்டு நீங்க மாட்டேன். மனம் தளர வேண்டா. நான் சொன்னது உங்களுக்கு ஐயமாக இருந்தால், உறுதியாகக் கொள்ளப் பெறுகின்ற ஆகம வேத நூல்களைக் கற்றவர்களிடம் ''நிராங்கார சுஞ்ஞானிகளை இவ் விடத்திற் பொருந்திய அல்லமன் நீங்குவானா சொல்லுங்கள்'' என்று வினவி உணருங்கள்.''

O ஆணவமற்ற நல்லறிவாளரிடமிருந்து (நிராங்கார சுஞ்ஞானிகளிடமிருந்து) இறைவன் நீங்கான் என்பது உட்பொருள். தன் பெற்றோரை விட்டு அல்லமர் நீங்கார் என்பது வெளிப்படைக் கருத்து.

### அவர்களுக்கு உண்மை உணர்த்துதல்

47. என்று, பின்னிடுதல் இல்லாத அல்லமப் பிரபு ஆகிய குருதேவன் சொல்லி, அழியும் தன்மையவாகிய உடல் முதலான எல்லாவற்றையும் வேறாகத் தள்ளிய பிறகு மீதியாக இருக்கும் தன்னை (ஆன்மாவை)த் தவிர வேறு அல்லன் என்கிற நிலையிலே ஊன்றிநின்று ஐக்கிய நிலையைப் பொருந்தும் முறையை அவர்களது சக்திக்கேற்ப உணர்த்தினான்.

O உணரும் வண்ணம் உணர்த்துதல் என்பது கல்வி கற்பிக்கும் முறை

O அல்ல அல்ல என்ற தள்ளுதலை வேதாந்தம் கற்பிக்கிறது.

**நிரங்காரன், சுஞ்ஞானி ஆகியோரை மக்கள் போற்றுதல்**

48. "தங்களுக்குக் குழந்தை இல்லை என்ற மன வருத்தத்தைப் போக்கவும், பின்பு முதன்மையுடைய மேலாம் முத்தியை அளிக்கவும், தாய் தந்தை இல்லாதவன் – எல்லாவற்றுக்குந் தாணு (பற்றுக் கோடு) ஆனவன் - ஆகிய சிவனையே தங்களுக்கு (மகனாகவும் குருவாகவும்) கிடைக்கப் பெற்றவர்கள் இந்த மாதவராகிய நிராங்கார சுஞ்ஞானிகளைத் தவிர வேறொருவரும் இல்லை என்று உலக மக்கள் போற்றினார்கள்.

**விமலை கூறி முடித்தல்**

49. "ஆகையால் அழகிய அல்லமனது அருளினால் கிடைக்கப் பெறுவது, வாதித்தல் இல்லாத நல்ல முத்தியே. இதனை மலைதருங் கொடியாகிய பார்வதியே அறிவாயாக! என்று சிவபிரான் உரைத்தான். அதனை அப்பொழுது அவ்விடத்து நானும் கூட இருந்து தெரிந்தேன்'' என்று அறிவின் மிக்க மாயை அறிந்திட விமலை கூறினாள்.

**அன்பர் மனத்தில் அல்லமர் விளங்குதல்**

50. "எள்ளில் எண்ணெய் போலவும் மிகுந்த கட்டைகளிடத்தில் நெருப்பைப் போலவும் வாய்திறக்கும் மென்மலரிடத்து மணம் போலவும், கலந்து எவ்விடத்தில் இருப்பினும் வள்ளலாகிய அல்லமன், தெளிந்த இன் சுவை மிகுந்த பாலானது திரண்ட முலையினிடத்தில் ஒழுகல் போல் அன்பர்களின் மனத்தில் இருந்து காணப்படுவான்.

O எள்ளில் நெய், கட்டையில் நெருப்பு, மலரில் மணம் என்பன இறையுண்மைக்குச் சான்றோர் பலரும் காட்டும் சான்றுகள் ஆகும்.

O

# 7. மாயை கோலாகல கதி

கதைச் சுருக்கம் : கவிஞர் உரை

1. நல்ல எழில் வாய்ந்த விமலை இவ்வாறாகச் சொல்ல முல்லை அரும்பு போலும் வெள்ளிய பற்களை உடை மாயை, தான் வந்த முயற்சியை நினைத்து, அவனைக் கட்டித் தழுவு வேன் என்று எழுந்த போது அல்லமன் அகன்ற தன்மையை யாவரும் அறியக் கூறுவோம்.

விமலையிடம் மாயையின் வினா

2. இளம் திங்களை அணிந்த இறைவன் இறைவியிடம் உரைத்த வரலாற்றை விரிவாக விமலை உரைத்தலும் மாயை மனம் நெகிழ்ந்து, அல்லமப் பெருந்தகையை அடைவது எங்ஙனம் சொல் என்று வினவினாள்.

வழிபட்டால் அல்லமர் வருவர் என்றாள் விமலை

3. வலப்புறம் மழுப்படையை ஏந்திய வள்ளலாம் சிவ பிரானை அழகுபெறப் பூசனை புரிவாயாகில் அல்லமன் நின் கண் முன்னே தோன்றி நின் மனம் வேண்டியதை முற்றும் கொடுப்பன் என்றனள் விமலை.

வழிபாடு பயன் தரவில்லை என்றாள் மாயை

4. அதற்குப் புதுமயக்கம் கொண்ட மாயை, ''தலைவியாகிய விமலையே! நீ சொல்லும் முன்பே அருள்மிகு மதுகேசனை வழிபட்டு ஏத்தினேன். அதனால் பயன் இல்லை என்று அறிகிறேன்'' என மனம் வாடிக் கூறினாள்.

அது கேட்ட விமலையின் மனக் கலக்கம்

5. அதைக் கேட்ட விமலை 'சிவசிவ' என்று தன் செவிகளை அங்கையால் பொத்தினாள். இவளுக்கு அகவிழி (ஞானக் கண்) இல்லை. ஆகலின் பரசிவ பூசனையாற் பயனில்லை என்று அச்சமின்றிக் கூறுகிறாள் என்று நினைத்தாள்.

இறைவழிபாடின்றி எதுவும் நிறைவேறாது என்று கூறல்

6 ''சிவ பூசனை புரிந்தும் பயனில்லை என்று சொன்னாய். அயன் அரி முதலிய அமரரும் விருப்போடு சதாசிவ நாதனை வழிபட்டாலன்றி ஓர் எண்ணமாவது நிறைவேறுமா?

ஆலயங்களைப் பார்த்ததில்லையா எனல்

7. ''மேகலை அணிந்த மாயையே! தேவர்கோனும் பிரமன் திருமாலும் முனிவரர் பலரும் இம் மண்ணுலகில் விதி முறையின் வண்ணம் பூசனை புரிந்த திருக்கோயில்களை நீ பார்த்ததில்லையா?

நன்மைகள் பெற்றமை நினைக்கவில்லையா எனல்

8 ''உமாதேவியும் தெய்வ மாதரும் பாற்கடலில் தோன்றிய திருமகளும், மாதவத்தோரின் மனைவியரும் கலைமகளும் நுதல் விழிக்கடவுளைப் பூசித்ததால் பெற்ற நல்ல நிலைமைகளை நீ சிந்திக்க வில்லையோ ?

எல்லாப் பேறும் இறை வழிபாட்டால் வரும் என்று கூறல்

9. ''தளரும் இடையை உடைய மாயையே! எம் முதல்வனாம் சிவனைப் பூசிப்பதால், இம்மை மறுமை விருப்பம் உடையோர் எண் வகைச் சித்திகளையும் நீண்ட வாணாளையும் மேன்மையையும் பெறுவர். இம்மை மறுமைக்கான விருப்பம் அற்றோர் அப் பூசனையால் முத்தி பெறுவர். இது சத்தியம், சத்தியம்!

வழிபாடு அற்ற வாழ்வு பாழ் எனல்

10 ''பீடு மிகும் மானிடப் பிறப்பு வாய்க்கப் பெற்றும் இதழ் விரிந்த மலர்களால் இறைவனைப் போற்றாதார் பெருமை பொருந்திய வாழ்நாளைப் பாழுக்கு இறைப்பவரேயாம். அறிவிலாரின் வரிசையில் அவர்கள் முந்தி நிற்பவர்கள்.

பூசனை புரிவோர் ஈசனைப் போன்றோரே

11. ''மூங்கிலை வென்ற தோளினையுடைய மாயையே! முக்கண் இறைவனின் அடித் தாமரைகளை மணங்கமழ் மலர்களால் பூசனை புரிபவர்களை, பாம்பினை அணியாத பரமன் என்று கொண்டாடி இவ்வுலகம் அவர்களின் பொலிவான பாதங்களை மன மகிழ்ந்து துதிக்கும்.

இறைவனைப் போற்றாதார் இழிந்தோர் எனல்

12. "நோய்ப் பிறவி இல்லாத கண்ணுதல் கடவுளைப் பூசித்துத் தம் தலைக்கு ஒரு மதி (சிந்தனை) பெறா

தோர் நரனாக (மனிதனாக) ப் பிறந்துள பிறவியைக் காட்டிலும், அறிஞர்களால் இகழப்படாத நாய்ப் பிறப்பு மிகவும் நன்று, நன்று.

குருவின் அருளினால் வழிபாடு செய்ய வேண்டும்

13. ''ஒப்பில்லாத சிவ ஆகமங்களில் புகலப்பட்ட மந்திரங்களையும் கிரியைகளையும், குற்றமற உபதேசிக்கும் அருள் நிறை குருவின் அனுக்கிரகத்தைப் பெற்றுப் பூசை செய்கின்றவர்கள் மேலாம் சிவன் பூசனையின் பயனை அடைவார்கள்.

அன்பு உள்ளம் இன்றியமையாதது

14. ''அண்ணலாம் சிவனது ஐந்து முகங்களும் தந்த ஆகமத்தில் பொருந்திய விதிப்படி தவறாது செய்தாலும் அளவிலாத அன்பு உள்ளத்தின்கண் இலையாகில் பண்ணிய பூசனை பயன் தராது.

ஆசிரியனால் அறிதல் வேண்டும்

15. ''வழிபடுகின்ற தன்னைப் பற்றியும் வழிபடப்படும் ஈசனது இயல்பு குறித்தும் ஈசன் பூசைக்கு உரிய பொருள்கள் பற்றியும், அறியத் தக்கவற்றை அறிந்து உயர்ந்த குருவின் அருளால் தெளிதல் வேண்டும்.

உனது வழிபாடு பயனிலாது போனது ஏன் ?

16. ''பைந்தொடி அணிந்த மாயையே! வழிபாட்டு வகையில் மந்திர தந்திரங்களில் வழுக்கள் வந்தனவோ? உன் சிந்தை வெளிப்புலன்களில் சென்றதோ ? பூசனை பயனில்லை என்று நீ நிந்தனை செய்தது எக்காரணம் பற்றியோ சொல்லுவாய்'' என்று விமலை கூறினாள்.

மாயையின் மறுமொழி

17. இவ்வாறு நல்ல விமலை இயம்ப, மாயையை வென்ற அல்லமன் கண்ணிற் காணப்பட்ட நன்மையைத் தன் செய்த சிவபூசையால் அறிந்திலளாய், அவ் அல்லமன் தன்கையில் அகப்படாது இருத்தல் குறித்து மிக்க துன்பம் கொண்டு மாயை சொல்லுவாள் :

வழிபாடு பயன்தர வில்லை என்கிறாள்

18. ''வேறொன்றையும் நான் நினைத்ததில்லை. எம் குரு உரைத்த நெறியால் இயன்ற வரைக்கும் சிவ பூசனை செய்தும் ஒரு பயனும் கிடைக்கவில்லை".

O பக்குவப்பட்டவர்களுக்குப் பெரிய மறைப்பொருள் உரைத்தால் பயன்படும். பக்குவப் படாதவர்க்கு ஓதினால் அது பயன் படாது என்ற நல்ல கருத்து ஈங்கு எண்ணற்கு உரியது.

**மாயையின் மயக்கம், விமலையின் தளர்ச்சி**

19. பல நெறிகளை முறைமையாகச் சொல்லியும் அதனை நினைக்கவில்லை, அந்தோ! கலங்கிய மனத்தை உடையவளாகி மாயை மயக்கம் கொண்டிருந்தாள். அறிவில்லாதவர்களுக்கு அறிவிக்கின்றவர்கள் தாம் அறிவிலாதவர் ஆவர் என்று வாசனை பொருந்திய மலரணிந்த தாழ்ந்த கூந்தலை யுடைய விமலை மனம் சோர்ந்தாள்.

O காணாதார்க் காட்டுவான் தான் காணான் என்றதிருக்குறள் கருத்து, பொருத்தமான அனுபவ வாக்கு ஆகும்.

**மலர்க் கணைக்கு உள்ளானோயோ என்று கேட்டல்**

20. 'இம் மாயையினது மனம் கவலை கொண்டிருந்தது. இதனை நான் தெரிந்து கொள்வேன், என்று குவிமுலை விமலை நினைந்து, "கோல்வளை மடந்தையே! மலர்ந்த மலர் அம்பு உன்மேல் பட்டதாகத் தெரிகின்றது. தாயாகிய மலை மகள் மேல் ஆணை, எனக்குச் சொல்லு, ஒளிக்க வேண்டாம்" என்றாள்.

**மாயை தன் மையலைத் தெரிவித்தல்**

21. விமலை ஆணையிட்டு உரைத்ததற்கு அஞ்சி "அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானும் மனம்விரும்பக் கூடிய மத்தளத் தொழிலை உடையவன், விழிக்கு விருந்து என்று உரைக்கத் தக்க அழகு மிக்கவன் ஒருவன் வந்தான். அன்னானைக் கண்ட அளவில் நான் என்னைக் காணேன்" என்று ஞானிகள் போல் பேசினாள்.

O அனுபூதி மேலீட்டால் ஞானிகள் உரைத்தல் போல் மோக மேலீட்டால் இங்ஙனம் கூறினாள் மாயை.

**அவன்பெயர் அல்லமன்**

22. "அத் தகையோன் பெயர் அல்லமன் அவனுக்கு அல்லாது என் மனமாகிய கல் உருகாது. முக்கண் இறைவனுக்கு அல்லாது மேருமலை வில் வடிவு ஆகுமா? விளங்கும் இழை

அணிந்த விமலையே! உன்னைக் காண்பதற்கான புண்ணி யம் ஒன்று இருந்ததால் நான் இன்னம் உயிர் தாங்கி இருக் கிறேன்'' எனறாள்.

அந்த அல்லமனே இந்த அல்லமன் எனல்

23. ''வேல் போல் நீள் விழியும் ஒளி பொருந்து நெற்றியும் உடைய மாயையே! நீ நவின்ற அல்லமன் நான் நவின்ற அல்லமன் தான். விருப்பிய உனக்குத் தகுந்த மானிட வடிவம் கொண்டு வந்தான் போலிருக்கிறது. அவன் நல்ல ஞானக் கண்களுக்கு அல்லாது நயந்து தன் உண்மை வடிவத்தைக் காட்ட மாட்டான்.''

இவன் மத்தளம் அடிப்பவன் என்கிறாள் மாயை

24. இப்படி நல்ல விமலை கூற, இலை போலும் நெடிய வேலை ஒத்து இலங்கும் கண்ணை உடைய மாயை, ''அணங்கே, தனக்குத் தானே நிகரான அல்லமன் உண்மை அறிவு வடிவினனாக இன்பம் செய்வோன் என்றாய். நான் உரைப்பவன் அத்தன்மை உடையவன் அல்லமன். இவன் மத்தளத் தொழிலை உடைய அல்லமன். நீ முன்னும் பின் னும் மயங்க மொழிந்தாய்'' என்றாள்.

அல்லமர் ஆற்றலை உன்னால் நிச்சயிக்க முடியாது

25. ''தான் விரும்பும் வடிவத்தைக் கொண்டு விரும்பியவாறு செய்பவன், யாவரையும் ஆட்கொண்டு அருள் புரிபவன் ஆகிய அல்லமனுக்கு இச் செயல் இயலும் இஃது இயலாது என்று மாறுபட்ட உன் கோணல் மனத்தினால் தீர்மானிக்க முடியுமோ. பூண் திகழ் இளமென் கொங்கைப் பொற்றொடி மாயையே ?'' என்று சொன்னாள்.

ஆடரங்கில் காட்டுவேன், பார்த்துச் சொல் எனல்

26. ''உன்னுடன் சொற்போர் இடல் எனக்கு முடியாது. இனிமேல் நடனசாலையில், என் மனத்திற் பொருந்திய அந்த அல்லமனைக் காட்டுவேன். நீ அவனைப் பார்த்து இத் தன்-மையன் என்று சொல்லு. ஆராய்ந்து தெரிதற்கு அரியவன் என்று நீ முன் சொன்ன அல்லமனாகில் அப்படிப் பட்டவனது வல்லமையைப் பார்ப்பேன்'' என்று சொன்னாள்.

### விமலையை அழைத்துச் செல்கிறாள் மாயை

27. பார்த்து வாங்குதற்கான மணியின் இயல்பைத் தெரிந்து சொல்லவல்லவர்களை உடன் அழைத்துச் செல்பவர் போல், கயிலையிலிருந்து வந்த விமலையைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போய், முன்பு தான் பூசை புரிவதற்குப் போகும் தன்மைபோல் அன்றும் மகளிர் சூழ, அழகிய கோவைக் கனி போன்ற வாயையுடைய மாயை, சுடர்மணி பதித்த மதுகேசு வரருடைய கோயிலிற் புகுந்தாள்.

O உலகியலில் காணப்படும் பழக்கத்திலிருந்து பொருத்தமாக உவமை அமைந்துள்ளது.

### நடன மண்டபத்தினுள் மாயை வருதல்

28. வரிசையாக வளையல்களை அணிந்த தளிர்போன்ற கை களையுடைய மாயை பூசையை முன்பு தான் செய்து வந்தது போல் நன்றாகச் செய்து மதுகேசுவரனுடைய திருவடிகளைத் துதித்துப் பின்பு, செவ்வரி பரந்த நெடிய கண்களையும் சிவந்த வாயையும் வாசனை பொருந்திய கொத்தாகிய பூவை அணிந்த மெல்லிய கூந்தலையுமுடைய விமலையோடும் வந்து நடன மண்டபத்தினுள் புகுந்தாள்.

### அல்லமர் மத்தளம் அடிக்க மாயை ஆடுகிறாள்

29. 'இவர்தாம் அல்லமர், இவர்தாம் அல்லமர்' என்று அறி-யும்படி சும்மா இராமல் சொல் என்று அடிக்கும் காட்சி போல வல்லவனாகிய பிரபுதேவன் 'தாம் தாம்' என்று அடித்த அளவில் மாயை தன் மனம் ஊஞ்சலாட சிலவாகிய பரலை உடைய மணிச்சிலம்பு சிலம்புற (ஒலிக்கும் படி) ஆடுகின்றாள்.

O அல்லமர் 'தாம் தாம்' என்று மத்தளம் கொட்டுவதைக் கவிஞர் தற்குறிப்பேற்றமாக அழகுறக் கூறுகிறார்.

### மாயையின் கண்ணும் கருத்தும் மாறுபடல்

30. முன்னே நிற்கும் ஞான வடிவினனாகிய மதுகேசனிடத்து விழியையும், மத்தளம் அடித்துப் பின்னே நிற்கும் சிறந்த வடிவினனான அல்லமனிடத்துப் பலவற்றின் பாலும் பெயர்ந்து செல்கின்ற நெஞ்சையும் நிலைபெற வைத்து நின்று மாயையானவள், தன்னைப் பார்க்கின்றவர்களுடைய சுண்

களும் மயக்கமுற்ற மனமும் தன்மேல் வந்து விழும்படியாக நடனம் ஆடினாள்.

மாயையின் கருத்திற்கேற்ப அல்லமர் காணப்படல்

31. இரேகைகளும் செருக்கும் குளிர்ச்சியும் கொண்ட கண்களை உடைய மாயையினது மனத்தில் உற்ற காமம் செந்நிறம் சேர்ந்த பளிங்கு (கண்ணாடி)க்கு ஒப்பாகத் தன்னிடத்துக் காணும்படி அல்லமன் விளங்கி நின்றான். வருந்துகின்ற செய்கையை உடைய மாயையினிடத்தில் பொருந்திய சத்துவம் முதலிய குணங்கள் அடுத்துப் பரம்பொருளாம் பிரமத்திடத்தில் காணப்படும் என்று சொல்வதும் உண்மையன்றோ.?

O அடுத்தது காட்டும் பளிங்கு. அவ்வாறே பர வடிவினராகிய அல்லமதேவர் மாயையின் காமிய (உலகின்ப விருப்பு) வழிபாட்டிற்கு ஏற்பத் தம்மைக் காட்டிக் கொண்டார்.

O வேற்றுப் பொருள் வைப்பு அணி; தத்துவக் குறிப்பு.

மாயையின் நாணமின்மையும் நாணமும்

32. ஆட்டுவிக்க வந்த அல்லமனது மத்தள ஓசையின் வரிசைக்குச் சதி தப்பி நடனம் செய்த மாயை அதற்கு வெட்கப்படாமல் சொற்களுக்கு எட்டாத ஞானக் கடலாகிய அல்லமனைச் சுட்டி விமலையிடம் வாயாற் சொல்ல, முதிர்ந்து குறைந்து வரும் சந்திரனை வென்ற முகத்தை யுடைய மகளிர் கூட்டத்தில் வெட்கமுற்று மனம் வேறுபட்டு நின்றாள்.

விமலையும் அல்லமருக்கு மயங்குகிறாள்

34. விருப்பைத் தரும் அல்லமனே இவ் வடிவு கொண்டு இம் மாயை செய்கின்ற பூசையின் பயனைக் கொள்ளுதற்கு வந்தானோ அல்லது பெரிய தவத்தாற் பிறந்த வேறொரு மகனோ என்று விமலை ஐயமுற்றுத் தெளியாதவளாய் இருக்க, எம் கோமானாகிய அல்லமன் மாயம் (மயக்கம்) செய்து நின்றனன்.

O அல்லமரைக் குறித்த 'மாறரும் அல்லமன்' என்ற தொடர் விருப்பைத் தரும் அல்லமன் எனவும் யாதொன்றானும் மாறுதற்கரிய அல்லமன் எனவும் பொருள் தர நின்றது.

விமலையே மயங்கினாள்!

35. இருளில்லாத பொழுதில் தொலைவான இடத்தில் காணப்பெறும் ஒருவன் பொருந்த வருதலையும் போதலையும் ஐயமுற்று அறிய மாட்டாதவர் போல அமலனாகிய பிரபுவை விகாரத்தையுடைய மனிதன் என்றும் பிரகாசிக்கும், விகார மில்லாத கடவுளென்றும் விமலையே மயங்குவாளாகில் மாயையை வெறுத்துச் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

O உவமை அணி

O விகாரம் என்பது மாயையுடன் கூடியது. நிர்விகாரம் என்பது மாயை அற்றது, கருவினில் வயமாகிப் பிறவாத விமலையே மயங்கினாள் என்பது தேற்றேகாரத்தின் பொருள்.

அல்லமரை விமலை கண்ணால் காட்டுதல்

36. தண்ணீரின் ஆழத்தைக் கோலால் அறியும் தன்மை போல இவ் விடத்தில் நின்றவனது குணத்தின் தன்மையை மாயையினால் தெளிவுற அறிவேன் என்று அழகின் இருப்பிடமான வடிவத்தையுடைய மாயையிடம் இவனே அல்லமன், என்று கச்சணிந்த மடந்தை யான விமலை கூர்மை பொருந்திய கண்ணால் காட்டினாள்.

O உவமை யணி

உண்மை தெரிகிறது மாயைக்கு

37. கண்ணையே காதாகக் கொண்டு கேட்கின்ற பாம்பினைக் கடகமாகக் கொண்ட மதுகேசனது சந்நிதியில் தன் கண்களால் காளையரது மனவலியை நீக்கி ஆடுகின்ற மாயைக்கு, கைலாயத்திலிருந்து வந்த விமலை கண்ணினாலே குறிப்பாற் காட்ட, அந்த மாயையானவள் ஞானக் கண்ணால் காணற்குரிய அல்லமனை தன் ஊனக்கண்ணாலும் ஞானக் கண்ணாலும் கண்டு கொண்டாள்.

அல்லமரைக் கட்டிப்பிடிக்க மாயை முயல்தல்

38. அற்பமாகிய காமத்தைக் கருதி நின்ற மாயையின் மனத்தில் இருந்த இன்ப நோக்கம் அழிந்தது. வளம் மிகு கயிலை மலையில் தான் உரைத்த சூளுரை மனத்தில்

தோன்றியது. அதனால் சுழன்று (சுற்றி) ஆடிச் சென்று அல்லமன் மேல் (தற்செயலாக) விழுகிறவள் போல் மேல் வீழ்ந்து கட்டிக் கொள்ள நினைத்துச் சென்றாள்.

O 'புல்லிய (தழுவ) நினைந்து சென்றாள் புல்லிய (இழிந்த) நெறியில் நின்றாள்' என்பது கவிதை அடி; சிலேடை அழகாக அமைந்துள்ளது.

### மத்தளத்தை எறிந்துவிட்டு அல்லமர் ஓடுதல்

39. அவளது கருத்தை அறிந்தான் அல்லமன். இம் மாயையின் மனத்துள் இருக்கும் காமத்தை இவ் வுலகம் அறியச் செய்து விட்டுப் போவேன் என்று உளம் கொண்டு கை தப்பி விழுந்த குடம் போல மத்தளம் உடையும்படி போகட்டு (போட்டு) விட்டு ஓடினான்.

### மாதரெல்லாம் வியப்புறுதல்

40. இம் மாயைக்கு இவ்வளவு ஆட்டமும் இந்த மத்தளத்தால் தான் என்று நினைத்து அதனை வீசி எறிந்து போவது போல வள்ளல் அல்லமன் போகவும், மாதரெல்லாம் இவனென்ன பைத்தியம் கொண்டானோ என்று தளிர்போலும் தம் கைவிரல்களை முடக்கிக் கன்னத்தின் கீழ் வைத்து மயங்கி நின்றனர்.

### தோழியரின் மனவருத்தம்

41. இம் மாயையின் செய்கையை இன்று வரையில் மத்தளம் அடித்து மறைத்த காளை (அல்லமன்) வாத்தியத்தை உடைத்து அதனைப் பாரெலாம் அறியச் செய்தான். உரல் போன்ற அடிகளையும் செருக்கினையும் உடைய நல்ல யானையையும் பெருமை பொருந்திய வீரக் கழலையும் சீற்றத்தையும் உடைய மன்னவனின் மகளாகிய மாயைக்கு உயிர் நில்லாது என்று தோழியர் மனம் வருந்தினார்கள்.

### மாயையின் கலக்கம்

42. முத்துப் போல் ஒளி பொருந்திய பற்களை உடைய, கற்பகப் பூங்கொம்பனைய மாயை, கரும்பு வில்லை உடைய மன்மதன் இப்போது செய்கின்ற காமப்போருக்கே

யல்லாது, வெள்ளி மலையில் சொல்லிய சூள்மொழி பிழைபட நேர்ந்தது என்றும், போக நாயகன் நீங்குதலினால் கையில் வரலாகும் பொருள் போனதே என்று வருந்தும் முலைவிலை மகளிர் போல மனம் கலங்கினாள்.

O உவமை.

அல்லமரைத் தேடிக்காண்போம் என்கிறாள் விமலை

43. மாயையின் ஒளிதங்கும் முகம் மாலைக் காலத்துத் தாமரை போன்றிருப்பதை (வாடி இருப்பதை)ப் பார்த்து வேல்வடிவம் உலாவும் கரிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய விமலையானவள் அம் மாயையினது உள்ளத்தில் மிகவும் நிறைந்த துக்கத்தை அறிந்து ''விசாலமான கண்களை உடைய மாயையே! வருந்தாதே. உன்னுடைய நல்லொழுக்கமுள்ள தலைவன் போகின்ற இடத்திலும் தேடி நாம் காண்போம்'' என்றனள்.

அல்லமரைத் தேடிப் புறப்பட்டனர்

44. வில்போலும் நுதலை உடைய விமலையின் சொல்லால் மனம் தெளிந்து அல்லமனை நாடிக் கொண்டு கலை (ஆண்) மானைத் தொடருகின்ற உழை (பெண்மான்) போல மாயை காட்டினில் தொடர்ந்து போனாள். மலரைத் தொடர்கின்ற வண்டுகள் போல, கொலைபடும் வேலோடு பொருது காதுடன் போர் செய்யும் கண்களை உடைய மகளிர் மாயையைத் தொடந்து சென்றனர்.

O உவமைகள்.

மாயையின் செயல்; பார்த்தோர் கூற்று

45. மன்னன் மமகாரன் மெய்யான தவம் செய்து பெற்று வேந்தர்க்கு மணம் முடித்துக் கொடாமல் முக்கண் பரமனுக்கென்று வீணாக வைத்திருந்த பெண் மத்தளம் கொட்டு-வோன் பின்னே போனாள். அந்தோ, மகளைப் பத்து ஆண்டுக்கு மேலாகியும் திருமணம் செய்து கொடாமல் வைத்திருத்தல் பாவம் என்று இகழ்ந்தார்கள் பார்த்தவர்கள்.

O உலகியலை ஒட்டிய கூற்று இங்கு அமைந்துள்ளது.

காமத்தால் வருவன

46. பிரகாசமான அற்பக் காமம், பாவமும் பழியும் நல்கும், பல வகைப்பட்ட புகழையும் அறங்கள் யாவற்றையும் அழிக்கும். தன்னால் (காமத்தால்) வரும் சிறிய இன்பத்தையும் அவ்வின்பத்தால் வரும் துன்பத்தையும் நல்ல வழி மரபையும் (பரம்பரையையும்) செய்கின்ற நோன்பு நல்லொழுக்கம் மேன்மை என்பவற்றையும் எண்ணாது இருக்கும்படி (மறக்கும்படி) நிலைபெறும் என்று சொல்லுவார்கள்.

O 'தயங்கு (விளங்கும்) புன் காமம்' பற்றிய கருத்துக்கள் சிந்தனைக்கு உரியன.

அல்லமரே நினைவாக மாயை செல்லுதல்

47. பஞ்சின் மேல் மிதித்தாலும் பதைபதைக்கின்ற மெல்லிய பாதங்கள் பருக்கைக் கல்லின் மேல் மிதிப்பது குறித்து அச்சம் கொள்ளவில்லை. நீர் பருகுதலை நினைக்கவில்லை. ஞாயிற்றின் மிகவும் முதிர்ந்த கதிர்களின் வெம்மை குறித்தும் அஞ்சாள். தன் நெஞ்சினை அல்லமன் மேல் வைத்து அந்த நிரைவளை மாயை சென்றாள்.

பாலைநிலம் மாயையைச் சுடாமைக்குக் காரணம்

48. காம வெந்தழலால் உடல் வெந்து உள்ளம் கருகி இருந்தமையில் கோமடந்தையாகிய மாயை பாலை நிலத்து வெம்மையைத் தாங்கினாள். அவளன்றி, பாற்கடலிற் பிறந்த குளிர்தண் பூமடந்தையாகிய திருமகள் அப்பாலையில் போக நேர்ந்தால் இளம் கயல்மீன் சுடுமணலில் அகப்பட்டது போல வருந்துவாள்.

O கற்பனைத் திறம்.

பாலை நிலத்தின் கடுமை(5)

49. கருங் குவளை மலர் போன்ற அழகிய கண்களையுடைய மாயை போகிய கொடிய பாலை நிலத்தில், யானையின் துதிக்கை யனைய நீர்த்தாரைகளை நெடுங்காலம் இடைவிடாமல் நின்று பெய்யினும் தீயிற் காய்ந்த இரும்பின் மேல் நகத்தால் தெறித்த நீர்த் துளிபோல் விரைவாகச் சுவறிப் போகும்.

உலகை விழுங்கிய திருமால் பாலையைக் கக்கினார்!

50. திருமால் இவ் வுலகத்தை உண்ட பொழுது தன் வயிற்றில் இருந்து விடாமல் இந்தப் பாலை நிலத்தை அந்த நாளில் உடனே உமிழ்ந்து விட்டார். அங்ஙனம் வெளியே துப்பாமல் இருந்திருந்தால் உடம்பு பதைத்து அவர் பாற்கடலினிடத்தில் வீழ்ந்ததனாலும் வெண்ணெயை உண்டதனாலும் வெப்பக் கொடுமை நீங்கி உயிர் பிழைத்திருக்க மாட்டார்.

O கற்பனைத் திறம். திருமால் மண்ணை உண்டது, பாற்கடலில் பள்ளி கொண்டது, வெண்ணெய் உண்டது ஆகியன இயைபுறக் கூறப்பட்டன.

மாயை பின் சென்ற மாதர் துயரம்

51. நாயினது நாவிலுள்ள நீரைச் சிறுமுயல் குருளைகள் (குட்டிகள்) நக்குகின்ற கொடிய பாலை நிலத்தில், தன்னை மறந்து பரவசப்பட்டு நடந்த மாயையின் பின்னே தொடர்ந்து செல்கின்ற மலர்முக மாதரின் வாயில் நீர் உலர்ந்து கண்களில் (கண்ணீர்) நீர் சுரந்தது.

O பாலை வருணனை.

கானல் நீர்

52. மான் போன்ற மங்கையர் சிலர், மிகுந்த வெம்மையினால் நீர் போல் தோன்றும் (கானலை) பேய்த்தேராம் பொய்க்காட்சியை உண்மைத் தண்ணீர் என்று எண்ணிச் சிறிது தூரம் விரைவாகச் சென்று இளைப்பார்கள். கடைவாயை நாவினால் தடவி ஒரு கையால் முகத்திற்கு எதிரே வீசி மெய் தளர்வார்கள். 'வேனிற்காலம் ஆ கொடியது' என்று தமது விதியினை நொந்து கொள்வார்கள்.

மாயைக்கு முன் மான்கள் ஓடுதல்

53. மாதர் இங்ஙனம் தொடர்ந்து பின்னே வர, எழில் மாயையினது பாத தாமரைகள் பாலையுள் நடந்து வருந்தின. ஆதலால் ஆதிநாயகனாம் அல்லம தேவனை மடக்கிக் கருமணல் போலும் மென் கூந்தலையுடைய மாயைக்கு உதவி செய்து அவளுக்கு நட்பு ஆவோம் என்று விரைவது போல மான்கள் முன்னே ஓடின.

O காட்டில் மான்கள் மாயையையும் அவளுடைய தோழியரையும் கண்டு மருண்டு ஓடுதலுக்குக் கவிஞரின் கற்பனை விளக்கம் அழகிய தற்குறிப் பேற்றமாக அமைந்துள்ளது.

மாயை வருதல்

54. கூந்தலானது மேலே விரிந்த முகிலினது தோற்றத்தைத் தருதலாலும், உதடானது இந்திர கோபத்தைக் காட்டலாலும், எடுப்பான கொங்கைகளின் மேலுள்ள முத்துவடங்கள் மலை அருவியை நிகர்த்தலாலும் அழகிய கைகள் காந்தள் மலரின் தோற்றத்தைக் கொடுத்தலாலும் வருகிறது கார்காலம் என்று கலாப மயில்கள் மகிழ்ச்சி கொள்ளப் பெரிய வனத்தில் மாயை வந்தாள்.

O மாயையைக் கார்காலமாக உருவகம் செய்தது உருவக அணி. மயில்கள் மயங்கியது மயக்க அணி.

மாயையைக் கண்ட முனிவர்கள் ஓடுதல்

55. சிங்கமும் யானையும் தங்களுக்குப் பணி செய்யத் தவம் செய்து அவ் வனத்தில் உறைகின்ற மாதவர் மாயையின் கொங்கைகளாகிய யானைகளையும் இடையாகிய சிங்கத்தையும் கண்டு மிகுந்த துயரத்தோடு எழுந்து ஓடினார்கள்.

O உருவக அணி. காட்டிலுள்ள சிங்கம் யானையை ஏவல் கொண்டோர் இடைச் சிங்கம் கொங்கை யானை என்பவற்றைக் கண்டு ஓடினார்கள் என்பது முரண் அழகு.

அல்லம தேவர் மனம் இரங்குதல்

56. கொடிய வாள் வரி வேங்கையைக் கண்ட மான் கூட்டங்கள் போல நீண்ட சடையை உடைய முனிவரர் மனம் கலங்குகின்ற நிலையும் வளைகள் உலாவும் மெல்லிய கைகளையுடைய மடவார் துயரமும் கண்ட அருள் மூர்த்தி (வடிவினன்) ஆகிய அல்லமன் அவற்றை நீக்குதற்கான அருள் செய நினைத்தான்.

அல்லமர் முனிவர்கட்கு அருளல்; மாயையின் முன் வரல்

57. மாயை நீங்குமாறு ஒரு கணத்தில் ஓட்டுவேன். நீங்கள் மனத்தில் வருத்தமுறல் வேண்டாம் என்று ஒரு முனிபோல்

அல்லமன் நின்று சொன்னான். பிறகு பழைய அல்லமன் வடிவில், தேயும் நுண்ணிடையுடைய மாயைக்கு எதிரே சிரித்துத் தோன்றினான்.

அல்லமரைக் கண்ட மாதர் மனம் குளிர்தல்

58. பொங்கும் நெருப்புப் போல் சுடுகின்ற வெவ்விய பாலை நிலத்தில் புகுந்த பூவையர்க்குக் கங்கை ஆறு எதிர்ப்பட்டாற் போல, கண்ணுக்கு எதிரே தோன்றிய எம் தலைவனாகிய அல்லம தேவனது திருவடித் தாமரை இணையைத், தங்கள் வருத்தம் நீங்கி உடல் குளிர்ச்சியடையுமாறு சார்ந்தார்கள்.

O பொருத்தமான உவமை.

மாயையைத் துறந்தது ஏன் எனத் தோழியர் கேட்டல்

59. ''இளம் காளையே! பெருகிய சேற்றில் மூழ்கி அவ் விடத்தினின்று எழுந்திருக்கின்றவன் பிடித்த கையை நீக்கி விட்டு நீங்குகின்றவனைப் போல வாசனை பொருந்த மலர்க் கணை பட்டு மனம் வருந்துகின்ற மாயையை அருளின்றி நீங்கினாய், என்ன காரணத்தாலோ ?''என்றனர் அம் மகளிர்.

O உவமை

நீவிரே அவ்வாறு செய்தீர் என்றார் அல்லமர்

60. ''பிடித்து அவ்விடத்தில் விட்டது நீங்களே. பிடித்து இந் நாள் வரையில் நான் உங்களை விடுத்திலேன். இதனை உலகமெல்லாம் கூறும். பிறரிடத்தில் குற்றத்தை நாடிச் சொல்வார்களே யல்லால் தம் குற்றத்தைச் சொல்பவர் உளரோ ?''

O உலகியல் உண்மை இங்குக் கூறப்பட்டுள்ளது.

'முன்னம் நீ கோபிக்க வில்லை' என்றார்கள்

61. என்று அல்லமன் உரைத்தான். அதற்கு, ஏந்திழை மடவார் ''மன்னன் மா மகளாகிய மாயையினது மனத்தில் எழுந்த காமநோய் வளரும் முன்னம் நீ சினங் கொள்ளாமல் இருந்து இன்று தான் கோபித்தாய். என்ன காரியஞ் செய்தாய்! மேலேறும்படி செய்த பிறகு ஏணியை எடுத்து விட்டாய்'' என்று சொன்னார்கள்.

O பழமொழி.

'வஞ்சக நடிகன்' என்று மாயை கூறல்

62. அப்பொழுது மாயை அல்லமனைப் பார்த்து, ''முதலில் உன் அழகிய வடிவம் போல் உள்ளமும் தூயதாக, நீ நல்லவனாக இருப்பாய் என்று உன்னை நம்பினேன். நீ வஞ்சகமாகிய நடிப்பில் வல்லவனாக இருப்பாய் என்பதை நான் அறியேன்'' என்று வன்சொல் உரைத்து நின்றாள். அதற்கு அல்லம தேவன் இதனைச் சொல்லுவான்.

நடிப்பவர் யார் என்று ஞானிகளைக் கேள் என்றார் அல்லமர்

63. ''தடங்கண்களும் பஞ்சின் மெல்லடிகளும் உடைய மாயையே! வஞ்சகமாகிய நாடகத்தை அபிநயிப்பது மாயையின் செய்கையோ தஞ்ச அல்லமனது செய்கையோ என்று தேவர்களையும் பொய்யில்லாத நெஞ்சம் உடைய முனிவர்களையும் நீ கேட்டறிவாயாக'' என்றார்.

O தஞ்ச அல்லமன் - தஞ்சம் எளிமை; ஆதாரமும் ஆம்.

மாயையின் மறுமொழி

64. ''நீக்கக் கூடாத தேவர்களும் முனிவர்களும் சொல்லுவர் என்ற தகுதி களவுபோன பொருளினைக் கண்டு அறியும்படியாகிய நல்ல குறிகளைச் சொல்லுதற்குக் கள்ளன் மனைவிக்குள்ள தகுதியை ஒக்கும்'' என்று புன்னகை கொண்டு உரைத்தனள் மாயை.

O களவுபோன பொருளைக் கண்டுபிடிக்கக் கள்ளனின் மனைவியிடம் குறிகேட்கப் போவது என்பது பொருத்தமான உவமை.

தேவர்கள் மாயையைக் கடந்தவர்கள் அல்லர்

65. ''மாயை எளியவள் என்று இகழத் தகுந்த சொல்லைக் கற்றவனே! திருமால் எந்த மனத்தால் என்னை அகன்றிட நினைப்பான். தான் மாயை இல்லாதவன் என்று சொல்லப் பிரமனுக்கு வாய் உண்டோ? விஞ்சும் வானின் தலைவனாகிய இந்திரன் என்னை எந்த உடம்பால் உதறி விடுவான்?

O திருமால் மார்பில் இருக்கிறாள் திருமகள். நான்முகன் நாவில் கலைமகள் இருக்கிறாள். தேவர் கோனின் உடல்

முழுதும் பெண்மை அடையாளங்கள் இருக்கின்றன. ஆகவே அவர்கள் தன்னைக் (மாயையைக்) கடந்தவரல்லர் என்று வாதிடுகின்றாள் மாயை.

முனிவர்கள் அஞ்சி ஒளிந்தனர்

66, ''எனக்கு அஞ்சி, மிருகங்கள் திரிகின்ற காட்டில் சென்று இருக்கும் முனிவர்கள் என்னை வெற்றி கொள்ள வல்லரோ? அல்லர். அப்படி யாயின் என்னை வெற்றி கொள்ளத்தக்க வர் யாவர் சொல்?'' என்று மின்னை வென்ற நுண் ()டை மாயை சொல்ல, அல்லமன் சொல்லுவான் :

அல்லமர் விடை

67. ''என்னுடைய ஆணையைக் கடப்பவர் இல்லை இல்லை என்று வெற்றியைச் சொல்லுவாயாகில் அவர்கள் இருக்கட்டும்; வேலை ஒத்த விழிகளை உடைய மாயையே! நிலைபெற்று நிறைந்த உயிரின் செய்கையினாலே சொல்லிய சொல்லல்லாமல் நிலைபெற்ற வேத ஆகமங்களிடத்து அறிவாயாக'' என்று உரைத்தான்.

மாயை செருக்கொடு பதில் கூறல்

68. மயக்கங்கள் எல்லாம் பிறப்பதற்கு இடமாகிய மாயை, ''நான்கு வாக்கினையும் நீ பார்த்தாலும் நான் அவற்றி னுக்கும் முதற்காரணம் ஆவேன். நான் சொல்லிய இச் சொல்லை நூல்கள் எல்லாம் சொல்லும்'' என்று செருக்குடன் உரைத்தாள்.

O நாலு வாக்கு : பரை, பைசந்தி, மத்திமை, வைகரி. தனித்துப் பிரிக்க முடியாதபடி ஒன்றாக இருப்பது மூலகாரணம் அல்லது முதற்காரணம். மண் குடத்துக்கு மண் போல்வது அது. சத்தியே முக்கியம் என்பது மாயையின் வாதத்துக்கு ஆதாரமாக உள்ளது.

அதற்கு அல்லமர் விடை

69. ''பேதையே, இவ்வுலகங்களை எல்லாம் ஆடச்செய் வேன் என்று சொன்னாய். உன்னை ஆடச்செய்பவர் யார் என்று அறியாய். உன்னை ஒரு பொருள் என மூடர்தான் சொல்லுவர். நிலை நிறுத்துகின்ற என்னை (உயர்பொருள்;

உன்னை ஆட்டுவிப்பவன் என்று) நன்றாக அறிந்து உயர் ஞானிகள் சொல்லுவார்கள்''

### மாயையின் வேண்டுகோள்

70. ''யாரை யார் இருந்து ஆட்டுவார்களோ அதை அறியேம். மன்மதன் செய்யும் நோயைக் கெடுத்து (என்னொடு கலந்து) விடு. அதன் பின் எனது வாதத்தைப் பார்'' என்று பசிக்கு அன்னம் இட்டால் பசிநோய் தீருமாறு பெரிய மருந்து கொடுப்பேன் என்று சொல்லுகின்றவர் தன்மை போல மாயை சொன்னாள்.

O என் பசிக்குச் சோறு போட்டால் உன் பசிக்கு மருந்து தருவேன் என்று கூறுபவர் வாக்குப் போலிருந்தது மாயை யின் பேச்சு. எவ்வளவு பொருத்தமான உவமை!

### அல்லமரின் வன்சொல்

71. ''அச்சம் தரும் வேல் போலும் நெடிய கண்களை உடைய மாயையே! நீ உலக இன்பத்தை (காமியத்தை) விரும்பியவளாகப் பூசனை உறுதியாகக் கொண்டமையால் நானும் காமி போல் நடித்தேன். தீய நெஞ்சினால் உன் சூளுரையை நினைந்தாய் ஆதலால் உன்னைத் தீண்ட மாட் டேன். மின்னற்கொடி போன்ற தோழிப் பெண்களுடன் நீ போ'' என்று புனிதனாகிய அல்லமன் கடினமான சொல்லால் உரைத்தனன்.

O காமியத் தவத்திற்குக் காமியப் பொருளும் நிட்காமியத் தவத்திற்கு நிட்காமியப் பொருளும் கிடைக்கும் என்பது தத்து வக் குறிப்பு. பொருளை விரும்பித் தவம் செய்தால் அதற்கு விரும்பிய பொருளும், பலன் கருதாத் தவத்திற்குப் பேரின் பப் பொருளும் பலனாகக் கிடைக்கும்.

### மாயையின் மனத்துயர்

72. மண்ணுலகில் ஈனமான குடிப் பிறந்த மத்தளங் கொட்டு கின்றவனை விரும்பிப் பயனின்றி வறிதே திரும்பினாள் என்னும் பழியை மாளாமல் நிலை நிறுத்தி, விண்ணுலகில் தேவர்கள் கைகொட்டிச் சிரிக்கச் சூள் முடியாமல் சிவனின் பாதி யாக்கையில் இருக்கும் இறைவியின் முகத்தில் எவ்வாறு

விழிப்பேன் என்று மாயை மனத்தில் துன்பம் அடைந்தாள்.

அன்பினால் பெறலாம் வன்பினால் இயலாது என்கிறார் அல்லமர்

73. மாயையைத் துரத்த வல்லவனாகிய அல்லம தேவன், ''வெறுத்தற்குரிய கசப்புப் பொருளை முதலில் விதைத்து விட்டுப் பிறகு அது கரும்பாக விளைய வேண்டி மிக முயன்று நெஞ்சில் துன்பமுற்றவராய்த் திரிகின்றவர் போல் அன்பர் தம் அன்பினால் அடைதற்கு எளியவனாகிய என்னை ஒரு சூள் அறைந்து வந்து வன்பினால் பெறுதற்கு விருப்பி நின்று மனவேதனை அடைந்தாய், இது தகுமோ, மாயை மாதே!'' என்று சொன்னான்.

O பிறிது இயைபு அணி.

O விதைப்பது தான் கூடுதலாக விளையுமே அன்றி வேறெதுவும் விளையாது. தினைவிதைத்தவன் தினையறுப்பான் என்பது பழமொழி.

விமலை அல்லமரை வேண்டுதல்

74. கரையைக் குறுக வந்த கப்பலானது கவிழப்பெற்ற வாணிபன் போல, மலைபோன்றும் மிருதுவாயும் இருக்கின்ற தனங்களையுடைய மாயையை விமலை பார்த்து மனம் சுழன்று மயங்கி ''ஐயனே! இரச குளிகை, தன்னைச் சேர்ந்த களிப்பு நிறைந்த செம்பினது குணத்தைப் பாராத தன்மை போல இவள் குணத்தைப் பாராமல் அருள்புரிக'' என்று தொழுது அஞ்சிச் சென்னாள்.

O கரைக்குப் பக்கத்தில் வந்து கப்பல் கவிழ்தல் சோகத்தை, ஏமாற்றத்தை, மிகுதிப்படுத்தும் உவமையாகும்.

O இரசவாத உண்மை இன்னோர் உவமையாக வந்துள்ளது.

அதற்கு அல்லமரின் விடை

75 ''விளங்கிய இலையை ஒத்த வேலை மயங்கச் செய்யும் மதர்விழி விமலையே, பயனற்ற மண் ஓடானது இரசகுளிகையினால் நலங்கிளர் பொன் உருவம் பெறுமானால் என்னால் இம் மாயையும் சுகத்தைப் பெறுவாள்'' என்று

புலங்களால் அறிய முடியாத பரமானந்த சிவயோகியான அல்லம தேவன் சொல்ல மாயை கலங்கி, கனிந்து ஆறாத புண்ணின் மேல் சிவந்த வேல் பட்டது போல வருந்திச் சொல்லுகின்றாள்.

O வெந்த புண்ணில் வேல் பட்டது என்பது பழமொழி.

மாயை அல்லமர் வாக்குவாதம்

76. ''விழிப்பு நிலையினை அற்பமான ஒரு கனவாக மயங்கி என்னைப் புணர்ந்ததினாலே எப்போதும் வெற்றியானது என்னுடையதே'' என்று மனத்தில் செருக்குற்றுப் பேதைமை யுடைய மாயை சொல்லிய அளவில், எங்கள் தலைவனாகிய அல்லம தேவன் ''கனவில் உண்ணப்பட்ட உணாவு குறையுமோ? அதனால் பசியை நீக்குவது இயலுமா? பேதைமை உடையவளே! நினைவில் வந்த ஒரு கனாவைக் கண்டு நீதான் செருக்குற்றாய்'' என்றான்.

மாயை சூளுரை புகல்தல்

77. ''அழகிய மலர்ப் பகழியைக் கையிற் கொண்ட காமனைப் போன்ற அல்லமனே! நீ எவ்வகையாகச் சொல் வன்மை கொண்டு தள்ளினாலும் இப்பொழுது நான் போகேன்; உன்னைத் தழுவிக் கட்டிக்கொண்டு, சிவந்த நிறத்தை யுடைய இறைவன் அமர்ந்த கைலாசத்திற்கு ஏகி என் சூளுரையை நிறைவேற்றுவேன்'' என்று, மைவண்ண மலர்க் கூந்தல் மாயை ஆகாயத்தை உருட்டி ஒன்றாக்கி விழுங்குவேன் என்ற சொல்லைப் போல் செருக்கடைந்து சொன்னாள்.

O ஆகாத காரியத்தைச் செய்ய நினைப்பதற்கு அழகான உவமை கூறப்பட்டுள்ளது.

அல்லமர் மறைந்தார்

78. மலரை முடித்த கூந்தலை உடைய மாயை சபதத்தை நிறைவேற்றுவேன் என்று சொன்ன சொல்லுக்கு முறுவல் செய்து, ''பிடி (பெண்யானை போலும்) நடையாய்! மாயையே என்னைப் பிடிக்க வல்லமை உடையவளானால் டிபி''

என்று கூறி அல்லமன் (பிரான்) மறைந்தான். மடக்கொடி மாயை தனது கண்களால் காண்பதும் போய்ப் புத்தி கலங்கிப் பயனில்லாமல் நின்றாள். ஒளிரும் வளைகள் பொருந்திய மெல்லிய கைகளை உடைய மாதர்கள் 'இப்பொழுது இம் மாயையை இழந்தோம்' என்று துயர் அடைந்தார்கள்.

தூயோர்க்கே அகப்படுவார் அல்லமர்

79. வெள்ளிய சந்திரனின் நிலவுக் கற்றையானது வாயில் நுழைந்தாலும் அதனைச் சகோரம் என்ற மெல்லிய பறவை தான் புசிக்கும், மற்று அதனைப் புசித்து வாழும் உயிர்கள் வேறில்லை. அதுபோல ஒப்பற்ற நம் அல்லம தேவனும் இசை பொருந்திய சொல்லையுடைய மாயையின் கையில் அகப்பட்டாலும் தொண்டு அன்பின் வழி நின்று மனமாசு தீர்ந்த பெருந்தூயோரால் அல்லால் அவளால் அகப்படுத்தப் படுவானோ ?

O உவமை அணி.

முனிவர் அல்லமரைத் தொழுது தவம் இயற்றினர்

80. நன்மை பொருந்திய வீர சைவ சித்தாந்த குலதீபம் ஆகிய அல்லம தேவன் மாயையை வாதம் செய்து தள்ளி தனது நிலையில் நின்று மாயா வாதி (மாயையோடு வாதம் செய்வோன்; மாயையின் இயல்பை நன்கு ஆய்ந்து அறி-வோன்) ஆயினன் என்று முனிவர்கள், தளர்ச்சியடைந்த தங்கள் உள்ளத்தை நிறுத்தி, முக் காலம் உணர்ந்த அவர்கள் அல்லமனைத் தொழுது தவத்தினை மேற்கொண்டு வாழ்ந்தார்கள்.

O தங்களது ஓயும் மனத்தை மாயை தோற்றபின் முன்போல் உறுதிபெற நிலைநிறுத்தி அல்லமரைப் போற்றி முனிவர்கள் தவம் மேற் கொண்டார்கள்.

O இறைமைத் தன்மையர் அல்லமர்; ஆயினும் ஒவ்வாக் கருத்துக்களை வாதிட்டு மறுத்து உண்மையை நிறுவுகிறார். மெய்யறிவினார்க்கு இவ்வாறான செயல்-மறுதலைக் கருத்தை மறுத்துத் தம் மெய்க் கருத்தை நிறுவுதல் - வேண்டற் பாலதே என்பர் ஆன்றோர்.

O மாயாவதி என்ற சொற்கு இந் நூலாசிரியர் கூறும் பொருள் புதுமையானது. மாயையோடு வாதம் செய்வோன் மாயையின் இயல்பினை நன்கு ஆய்ந்து அறிவோன் என்பன அப் பொருள். மாயாவாதம் என்ற சொல் கண்டனத்துக்குரியதாக இருந்த நாள்களில் அதற்கு உண்மைப் பொருளின் அடிப்படையில் உயர்வு தந்து ஆள்கிறார் கவிஞர். வீர சைவம் என்பது சிவ அத்துவிதம் ஆகலின் அவ்வாறு ஏற்றம் தருகிறார் அவர்.

O

# 8. வசவண்ணர் வந்த கதி

O வசவ தேவர் பிறந்த வரலாற்றைக் கூறுகிறது இந்தக் கதி. சென்ற கதியின் கதைத் தொடர்ச்சியை, மாயையின் வரலாற்றை, முதலில் கூறி அதை நிறைவு செய்து அதன் பின் வசவ தேவர் பிறப்புக் கூறப்படுகிறது.

கதைச் சுருக்கம் : கவிஞர் கூற்று

1. எதற்கும் நிலை திரியாத அல்லமனைக் காணும் பொருட்டாக உமாதேவியின் சத்துவ குண வடிவும், வசவ தேவனும், வல்லமையுடைய சிவ கணங்களும் ஊற்றெடுக்கும் அன்பினோடும் கயிலையினின்று தென்திசையில் வந்து பிறந்த தன்மையைச் சொல்லுவாம்.

அல்லமர் மறைவு, மாயை வருத்தம்

2. உயிர்கள் பசியால் தீமைகள் அடையக் கூடிய, சிறு பொருளும் பெருவிலையாக விற்கும் பஞ்ச காலத்தில் கடன் வாங்கிய ஒரு பொருளை இழந்து விடும் வறியவர் போல் ஞான நெடுந்தகையாகிய அல்லம தேவன் மறைந்து போய் விட மாயை மூச்சு விடுதலும் இன்றி நின்று ஏங்கினாள்.

O பொருத்தமான புதிய உவமை,

பெற்றவர் வருந்திப் பின் தொடர்தல்

3. மத்தளம் அடித்துக் கொண்டு வந்தவனுடன், பொய்

யென்று சொல்லத் தக்க நுண்ணிடை உடைய மாயை போயி னாள் என்று அயலார் சொல்ல அவளைப் பெற்ற தாய் தந்-தையர் கேட்டு, மனத்தை வெட்கமும் துயரமும் தின்பது போல் வருந்தப், பைத்தியம் கொண்டவர் போல் அம் மாயை யின் பின் தொடர்ந்து சென்றார்.

அரசன் வருந்திச் செல்லுதல்

4. தகுந்த தந்தையும் தாயும் நாணத்தால் வருந்தித் தலை யைச் சாய்க்குமாறு பழியை விளைக்கின்ற மக்கள் இல்லாமல் தாங்கள் பிள்ளைப் பேறின்றி இருத்தலும் மிகுந்த வன்பிணி அடைதலும் நல்லன என்று அழிந்த மனத்துடன் மன்னவன் ஓடினான்.

தாயின் வருத்தம் (4)

5. ''சுடுகின்ற பசிக்கு வருந்தி மாமிசம் தின்ன வாய் பதைக்கின்ற வேடருடைய வலையிடை இளமையான மான் கன்று போய் விழுந்து அகப்பட்டுக் கொள்ள, அதனது தாயா கிய பிணைமான் அவ்விடத்திற் சென்று துடிப்பதை என் மகள் தன்னெதிரில் காண்பாளோ?

O காண்பாளாகில் தன்னை நினைத்துத் திரும்புவாள் என்பது கருத்து. பாலை நில இயல்பும் தாயின் பரிவும் அழகாக ஓவியம் பெற்றுள்ளன.

9 ''நீண்ட வில்லையுடைய வேட்டுவர் குஞ்சுகளைத் தேடிக் கண்டு எடுத்துக் கொண்டு போய்விடப் பறவைகள் தம் கூட் டில் வந்து பார்த்து ஏக்கமுற்று மூக்கில் (அலகில்) கொண்டு வந்த உணவு சோர்ந்து விழ மண்டும் வருத்தத்தில் சுழலு தலை என்மகள் காண்பாளோ?

7. ''மழைபோல் சொரியும் மதத்தையும், துதிக்கை உடைய முகத்தையும் உரல் ஒத்த கால்களையும் பிறைபோன்ற ஒள்ளிய மருப்பு (தந்தம்) களையும் உடைய யானைகள் வழியுண்டாகத் தூறுகளை மிதித்துக் கொண்டு பூக்கள் பொருந்திய கிளைகளையுடைய மரங்களை முறித்து நடக்கக் கண்டு என்மகள் அஞ்சி ஓடுவளோ?

8. ''என் மகள் மாயை, பருக்கைக் கற்களின் மேல் மென் பாதங்களை வைத்துத் துடிப்பாளோ? பாலை நிலத்தில்

மேனி துவண்டு வெதும்பித் தண்ணீர் கேட்பாளோ? என்ன செய்வாளோ?'' என்று எண்ணி அன்னையானவள் தாங்கு தற்கரிய துன்பம் அடைந்து சென்றாள்.

மன்னன் இன்னல் கண்டு ஊரார் வருந்தல்

9. திருமகள் போன்ற புதல்வி மாயையின் பொருட்டு இவ்விடத்து மன்னர் மன்னர் மமகாரன் மனத்தில் வளர்ந்து எழுகின்ற துயரத்தைக் காணவும் ஊழ் ஒன்று இருந்தது என்று எண்ணி மயங்கி வனவசை நகர மக்கள் அவ் அரசன் பின் சென்றனர்.

மகளைக் கண்டு மன்னவன் கூறுதல்

10. அயர்ந்து நிற்கும் மகள் மாயையைப் பார்த்து, ''நான் முயன்று மெய்த்தவம் முற்றும் செய்து முடித்து உன்னைப் பெற்றதற்கு விரும்பி எங்களுக்கு நல்ல பயன் உதவினாய்!'' என்று மமகாரன் சொல்லினன்.

ஏன் இப்படி வந்தாய்? என்று தாய் அழுதல்

11. தாயாகிய மோகினி, ''கன்னிகையாகிய மாயையே, நீ என்னை நீங்கி, (மத்தளம் அடித்தலாகிய) இழி தொழில் செய்பவன் தன்னை விரும்பி அரசன் மகள் என்ற பெருமையை இழந்து என்ன காரணத்தாலோ கொடிய காட்டினிடத்து வந்தனை'' என்று சொல்லி ஓ! என்று அரற்றி அழுதாள்.

விமலை விளக்குதல் (3)

12. ''மலை போலும் தோள்களை உடைய அரசே! அவ் அல்லமன் மானிடனும் அல்லன். மாயை உங்கள் மகளும் அல்லள். ஆகவே வாட்கண் அரசி மோகினியும் நீயும் இவ்விடத்தினின்று செல்லுங்கள்" என்று கூறி விமலை மேலும் சொல்லுவாள்...

வருந்துவது அறிவிலார் செயல்

13. ''தாம் முன் செய்த இருவினைப் பயனை நுகர விரும்பியவர்கள், தமக்கு விதிக்கப்பட்ட ஓர் இடத்தை அடைய அத் தொடர்ச்சியளவினாலே இவர் எனக்கு இன்ன முறையினர்; உறவினர் என்று ஓர் அபிமானம் பொருந்தி நின்று மனம் வருந்துவர் அறிவிலார்.

எல்லோரும் உறவினரே எனல்

14. ''விளங்குகின்ற நீண்ட இலைவடிவு போன்ற வேலினை உடைய அரசனே! மைந்தராகியும் தந்தை தாயாகியும் உன்னைச் சேராத உயிர் இவ் வுலகில் இல்லை. ஆதலால் இன்னார் எனக்குக் கேளிர் இன்னார் எனக்கு அயலார் என்று நீ எண்ணாதே.''

O தத்துவ நெறியில் 'யாவரும் கேளிர்' என்பது விளக்கப் படுகிறது. யார் மாட்டும் மிக்க விருப்பு வெறுப்புக் கூடாது என்பது உலகியலுக்கும் ஏற்புடையதே.

மாயை பெற்றோர்க்கு உரைத்தல் (2)

15. வேல் நெடுங்கண் விமலை இந்த நியாயங்களைச் சொல்ல, கருங்குவளை போலும் அழகிய கண்களையும் பனி மதி போலும் ஒண் முகத்தையும் பூநறுங் கூந்தலையும் பொற் றொடியையும் உடைய மாயையானவள், தன் தந்தை மமகார னிடம், தான் கயிலையிலிருந்து பூவுலகிற்கு வந்த வரலாற் றைத் தெரியக் கூறி,

16. ''கருங்குவளைக் கண்களும் கனியொத்த உதடுகளும் கொண்ட உமா தேவியானவள் அனுப்ப வந்த நான் என் எண்ணம் முடித்திலேன். ஆதலால் புரிகுழல் விமலையோடும் அக் கயிலாயத்திற்குப் போவேன், நீங்கள் என்னை நினைத்து வருந்தாதீர்கள்'' என்று சொல்லி,

மாயை விமலையோடு கயிலை அடைதல்

17. (அல்லமதேவர் தன் வசப் படாமையின்) வருந்துகின்ற மனத்தையுடைய மாயை யானவள் விரைந்து எழுந்து விமலையாம் அணங்கினுடன், அக் காட்டினிடத்துத் தன் பொருட்டு வந்திருந்த மக்கள் பிரிவுத்துயரால் அழுகின்ற குரல் பின்னே தொடர, (சிவபுண்ணியம் இல்லாதவர்கள்) அடைய முடியாத கயிலை மலையினிடத்துப் போயினாள்.

O கயிலை மலை என்பது பௌதிக மலை மட்டுமன்றி ஆன் மிக ஏற்றத்தையும் குறிக்கிறது.

அரசன் அயர்ந்து நிற்றல்

18. பழுது இலாத தன் பாவை காணப்படாமையால் மமகார

மன்னவன் வாய் விட்டு அரற்றவில்லை. தன் உடல் புழுதி யாடப் புரளவும் இல்லை. எழுதிய ஓவியம் போல் அப்படியே செயலற்று நின்றான்.

மோகினியின் உணர்ச்சிப்பெருக்கு (4)

19. தாயாகிய மோகினி, நிலத்தில் விழுவாள், திரும்பவும் எழுந்திருப்பாள். மனம் இளைத்து இரங்கி அழுவாள். உடல் தள்ளாடி நிலத்தைக் கையால் கிளறுவாள், வாயால் மூச்சு விடுவாள், 'இறப்பேன்' என்று எழுவாள். கைகளை நெரித்து ஏங்குவாள்.

O உணர்ச்சி வடிவமான பெண்மையின் நிலை விளக்கமாக வரைவு பெற்றுள்ளது.

மாயை இருந்த மாடம் கண்டு வருந்துதல்

20. ''பாடுகின்ற மகளிரும், பந்துகளும் அம்மானைகளும் கொண்டு எதிர்நின்று ஆடுகின்ற மகளிரும் ஆகிய அரிவைப் பருவமுடைய மாதர்களோடு [இருந்து ஒப்பற்ற என் மகள் வாழ்ந்து கொண்டிருந்த மாடத்தை இனி நான் பார்த்து உயிரோடு இருப்பேனா?

எங்ஙனம் ஒளிந்தாளோ?

21. ''தேன் மிகத் துளிக்கும் சோலையும் வாவியும் பளிங்கு மாடமும் பாழாகும்படி என் மகள், மான்கள் களித்தற்கிட மான பெரிய காட்டினிடத்து எங்களை விட்டு ஒளிந்த வழி யைச் சிறிதும் உணர்ந்திலேன்.

மோகினியும் பெண்டிரும் கதறுதல்

22 ''பொற்றொடி மாயையே! என்னை விட்டு நீ பிரிந்து இருப்பாயாயினும் உன்னை விட்டு நான் பிரிந்து உயிரோடு இரேன்'' என்று வாய்விட்டுப் புலம்பினாள் அன்னை மோகினி. மின்னிடை மாதரும் அப்பொழுது கடல் ஒலிபோல் கதறினார்.

அரச குரு அனைவரையும் தேற்றுதல் (3)

23. மமகாரனுடைய வழிமரபிற்குப் பரம்பரையாய் வருகின்ற அரசகுலகுரு வந்து, ''திருமகள் போலும் உங்கள் மகளின்

பெருமையை உங்களுக்கு ஆதியில் நான் சொல்ல வில்லையா? ஆகவே நீங்கள் துன்பத்தில் அழுந்தி மனம் வருந்துதல் தகாது'' என்று கூறி மேலும் சொல்லுவான்:

வருந்துவது மடமை எனல்

24. ''அருந்தவம் பல ஆற்றி மெய்ம்மைப் பொருளை அறிந்த முனிவர்களும் அடைதற்கு அரிய கைலாயத்திற்கு மின்னற் கொடி போலும் மாயை சென்ற இயல்பை நேரே பார்த்திருந்தும் நெஞ்சம் ஐயமற உணர்ந்தும் நீர் வருந்தும் தன்மை மிகுந்த அறியாமையே.

உமையின் கலை உமக்கு மகளாக வந்தது எனல்

25. ''வில் போல் வளைந்த நெற்றியையும் பசுந்தேன் போல் இனிய மொழியையும் உடைய உமாதேவியினது, தமோ குணக் கூறு அழகிய மகளாகும்படி நீங்கள் தலைமை பெற்றது (ஒன்றே) போதும். இனி உலகத்தில் உங்களை ஒப்பவர் பிறரில்லை''

மமகாரனும் மோகினியும் அரண்மனை அடைதல்

26. என்று அரச குரு சொல்ல மமகாரமன்னன் மங்கலம் பொருந்திய இல்வாழ்க்கைக்கு உரிய மனைவியாகிய மோகினியுடன், துன்பம் நீங்கித் திரும்பிப் போய் மாளிகைகள் நிறைந்து செல்வ மிகுந்த தனது நகர்த்தில் புகுந்து மலை போல் பருத்து உயர்ந்த மதிலால் சூழப் பெற்ற அரண்மனையினை அடைந்தான்.

கயிலை அடைந்து மாயை இறைவன், இறைவியை வணங்கி நிற்றல்

27. முருக்க மலர் போலும் உதடுகளை உடைய மாயையானவள் விமலையோடும் கயிலையிற் போய் விசாலமாகிய நிலவுலகில் தன்னை அனுப்பிய நாளிலிருந்தது போல, தேவர்கள் நிறைந்திருக்கின்ற அரங்கில் புகுந்து இறைவனையும் மலையரசன் பெற்ற மயில் போன்ற சாயலையுடைய உமையையும் வாழ்த்தி வணங்கி அங்கு இறைவியின் அருகில் நின்றாள்.

நிலவுலகில் நடந்தவற்றை மாயைக் குறிப்பாகக் கூறுதல்

28. அன்னையாகிய உமாதேவி அந்த மாயையினது மலர்ச்சி நீங்கிய முகத்தைக் கண்டபோது மனவாட்டத்தை அறிந்தும், 'நீ போன காரியம் என்ன ஆயிற்று' என்று கேட்டலும் அவள் சூள் உரை பகர்ந்து பரந்த இடத்தை உடைய நிலவுலகில் போய் தான் முன் மயங்கிய வரலாற்றையெல்லாம் நாணமானது வருத்த, குறிப்பினால் வெளிப்படும்படி வருந்தி உரைத்தாள்.

இறைவனது புன்னகை

29, நல்ல மலையரையனுடைய மகளாகிய இறைவி கேட்டு மனம் நாணி முகம் கவிழ்ந்தாள். பாம்புப் படுக்கையையுடைய திருமால் முதலாய தேவர்கள் திரண்டிருந்த அரங்கத்தில், முன்பு நகைசெய்து முப்புரத்தை மாண்டு போகச் செய்த சிவன் தன் இடப்புறம் இருக்கும் புரிகுழல் உமையின் செருக்கு அழியப் புன்னகை புரிந்தான்.

O முப்புரம் எரித்தது தொன்மக் கதை; காமம் வெகுளி மயக்கத்தை அழிப்பது அதன் உட்பொருள் எனலாம்.

இறைவியின் முகவாட்டம்

30. தூயோனாகிய இறைவன், ''அன்பருக்கு அன்பன் என்று நான் இயம்பிய அல்லமன் உனக்கு அரியனோ எளியனோ உரைப்பாயாக'' என்று, இயங்கும் வேலினால் எறிந்தாற்போல வெண்மையாகிய புன்முறுவல் செய்ய எம் தாயாகிய உமாதேவி வெண்மதியம் கண்ட மெல்லிய தாமரை மலர்போல் நகைமுகம் வாடினாள்,

O உவமைகள்.

இறைவி வருந்தி உரைத்தல்

31. மேன்மை பெற்று விளங்கும் இமயம் ஈன்ற மெல்லியல் இறைவி''அடியார் வேண்டிய யாவும் தடையின்றி அருளுகின்ற இறைவனே! நீக்குதற்குரிய சபதம் சொல்லிப் போய்வந்த மாயையானவள் சொன்ன வாக்கில் வருந்துகின்ற என்னை நீ நகைத்து எள்ளுதல் மூக்கில்லாதவளுடைய முகத்தின் முன்னர்க் கண்ணாடி காட்டுதல் ஒக்கும்' என்று வாட்டமுற்றுச் சொன்னாள்.

O உவமை.

இறைவன் கருத்துரை (2

32. நடம் பயிலும் எந்தையாகிய சிவன், இறைவி நாணினால் வருந்தினாள் என்று அருள் கொண்டு சொல்லுவன். "உலகின்கண் உள்ளோரை அலைக்கின்ற அந்த மாயையானவள் சபதத்தால் நெடுந்தகை அல்லமன் முன்பு சென்ற நிலையே நன்று ஆகும்; ஆடுகளைக் கொல்வான் ஒருவன் மடங்கல் (சிங்கத்தின்) முன் அதனை வெல்வேன் என்று வருதலே ஆற்றல் அல்லவா?

O தக்க உவமை.

33. ''நல்லெழில் மலை மடந்தையே! அல்லமன் பெருமை எல்லாம் யாவரும் அறிந்து கொள்ள இதனால் நன்றாக அறிவித்தாய் என்று சொல்பவரல்லாமல் உன்னைப் பழித்துரைக்க வல்லார் ஒருவரும் இல்லை'' என்று இயம்ப அதற்கு, யாவும்ஈன்ற வளாகிய இறைவி கூறுகின்றாள்:

அல்லமரை அறியும் வழியை இறைவி கேட்டல்

34. ''அறிவில்லாத வளாகிய நான் செய்த தீமையைப் பொறுத்து அருளி, மெய்யறிவை அருளிச் செய்கின்ற ஆசிரியனாகிய அல்லமனைக் கண்டறியத் தக்க நெறியினை உரைத்தருள்'' என்று நிரைவளை அணிந்த உமாதேவி தொழுது கேட்ப, மானும் மழுவும் பொருந்தியிருக்கும் தாமரை மலரை யொத்த திருக்கரங்களை உடைய பரமசிவன் சொல்லுவான் :

சத்துவக் கலையால் அறியலாம் எனல்

35 ''உமா தேவியே! மயக்கம் மிகுந்த குணத்தையுடைய மாயையை அனுப்பிய படியால் எக் காலத்திலும் உள்ள அல்லமனாகிய குரவனை நீ அறிய முடியவில்லை. சத்துவக் குண அமிசமாகிய மடந்தையை இனி அனுப்புவையாகில் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் அவனைக் காண்பாய்'' என்றான்.

சத்துவ குண அணங்கை உலகிற்கு அனுப்பல்

36. வறுமை தன்னை வருத்துதலினால் நான் இறக்கக் கட்வேன் என்று சொல்கின்ற ஓர் இடத்தில் செம்பொன் குடத்தோடு இருக்கக் கண்ட வறியவனைப் போல், துடி

யிடை உமாதேவி, கொல்லுதலைச் செய்யும் நாணத்தை விட்டு மகிழ்ந்து எம் இறைவனாகிய சிவனை வணங்கி, அல்லமனைக் காணும் பொருட்டுச் சத்துவ குண மடந்தையைப் ''பூமியினிடத்துச் செல்'' என்று சொல்லினள்.

O உவமை

அல்லமரை அறிய நந்திதேவர் கூறிய 'மை'

37. அப்பொழுது அருகில் நின்ற அருளுடைய நந்திதேவன், ''தாயே ஒப்பில்லாத பக்தி என்னும் மை (அஞ்சனம்) ஒன்று உண்டாயின் சொல்லுதற்கு அரிய ஞானானந்த சொரூபியாகிய அல்லம தேவன் என்ற தங்கப் புதையலை எளிதில் காணலாம்'' என்று மகிழ்ந்து சொன்னான்.

O உருவக அணி, சமுதாய வழக்கம் ஒன்றைத் தெரிவிக்கிறது.

இறைவன் நந்திதேவரைப் புகழ்தல் (2)

38. எங்களை வழிவழி அடிமை கொள்ளுகின்ற வள்ளலாகிய சிவபெருமான், ''அழிவில்லாத நிதிய வைப்பை (புதையலை) அஞ்சனத்தை (மையை)க் கொண்டு அறிகின்ற விழியுடையவன் போல் உண்மையான ஞானக் குரவனை முன் கண்டு மயக்கம் நீங்கிய சிவசரணர் காணும்படி காட்டுவோன்'' இவன் என்று நந்திதேவனைப் புகழ்ந்து,
O புதையலிருக்குமிடத்தை மை வைத்துப் பார்க்கும் வழக்கம் இங்கே தெரியவருகின்றது.

39. ''நான் என்னுடைய மாயா சக்தியால் பிணித்த தளையினைத் தனது தூய பக்தியால் விடுவிக்க வல்லவன், எண்ணிப் பார்த்தால் இந்த நந்திதேவனே ஆவன். இந்தக் காரணத்தால் விலங்கு பூட்டுபவனாகிய இறைவனா அல்லது விலங்கை அவிழ்க்கும் நந்திதேவனா நிறைந்த திருவருள் உடையவன் யார் என்று கூறுக" என்றான்.

அல்லமரை அகப்படுத்த நந்திதேவரை இறைவன் நிலவுலகிற்கு அனுப்புதல்

40. ''நந்தி தேவனே! அல்லமன் என்னும் ஞான வடிவமாகிய யானையை அகப்படச் செய்யவல்ல அறிவுடைய பார்வை

விலங்கு நீயே ஆதலால் மண்ணுலகிற் சென்று அளவில்லாத அடியார்களுடைய நெஞ்சத்தில் இன்பத்தை அருளுக'' என்று, உயிர்கள் தோறும் தோன்றாத் துணையென இருக்கும் பெம்மானாகிய சிவன் சொல்லினன்.

O பார்வை மிருகம்: மற்றைய மிருகங்களைப் பிடித்தற் பொருட்டுப் பழக்கப்பட்ட விலங்கு.

**நந்தியால் அல்லமரைக் காண இயலாது எனச் சிலர் கூறல்**

41. மாலையில் தோன்றும் செவ்வானம் போலும் நிறத்தையுடைய எம் இறைவனாகிய சிவன் அருளால் இவற்றைக் கூற, சிவ கணங்களுட் சிலர் வந்து நகை புரிந்து இறைவியாம் உமையவளுக்கும் எட்டாத தூயவனாம் அல்லமனை நந்தி தேவன் அறிய வல்லவனோ என்று சொல்ல மங்கை பங்காளனாகிய சிவன் சொல்லுவான்!

O சிவனது மேனி நிறத்தின் அழகைக் கூறு முகத்தான் இயற்கை எழிலின் நிறமே அவன் நிறம் என்பது காட்டப் படுகிறது.

**எங்களை நீங்கள் அறியீர்கள் என்று இறைவன் கூறல்.**

42 ''நந்தி என்னை அறிந்துள்ளான். நான் அவனது வல்லமையை அறிந்திருக்கிறேன். நீங்கள் உள்ளம் பொருந்த எண்ணித் தெளிவுற அறிய வில்லை'' என்று எந்தையாம் எம் பெருமான் கூற, நந்தி தேவனை இகழ்ந்து சொல்லிய கணங்கள் எல்லாம் வெந்துயர் கொண்டு நின்றார்கள். மீளவும் பரமன் அதற்குச் சொல்லுவான்.

O இறைவனைப் பக்குவமுள்ள அடியார் அறிவார்; பக்குவமுள்ள அடியாரை இறைவன் கண்டு கொள்வான் என்ற கருத்து இங்கே சிவன் வாக்கில் தரப்பட்டுள்ளது.

**கணங்களை நிலவுலகிற் பிறக்குமாறு இறைவன் ஏவுதல்.**

43. ''மாசற்ற நந்தி தேவனுடைய பக்தியை, நாம் சொல்லும் வார்த்தையால் நீங்கள் அறிந்து கொள்ள மாட்டீர்கள்;

ஆகையால் நிலவுலகில் போய்ப் பிறந்து உங்கள் கண்களால் தெளிவாகக் கண்டு பின்பு வந்து சொல்லுங்கள்'' என்று பெருந்தகையாம் நந்தி தேவனோடு ஒள்ளிய சிவகணங்களை இறைவன் அருள் காரணமாக அனுப்பினான்.

**சிவகணங்கள் 770 பேர் பிறத்தல்**

44. கண்ணுநற் கடவுளின் அருளால் அனுப்பப்பட்ட சிவ கணங்களுள் தலைமை பெற்றவர்கள் மண்ணுலகில் தங்க ளுக்கு விருப்பமாகிய வளம் பொருந்திய நகரங்கள் தோறும் உலகிலுள்ள மானிடர் கண்களுக்கு மானிடராகத் தோன்றும் படி வந்து தோன்றினார்கள். அவர்கள் எழுநூற்று எழுபது என்று உரைக்கும் எண்ணை உடையவர்கள்.

O இறையடியார் சிவகணங்களுக்கு ஒப்பாவர் என்பதும் அடியார்கள் கூட்டமாகப் பணிபுரிய வேண்டும் என்பதும் இங்குத் தெரிவிக்கப் படுகின்றன.

45. நந்தி தேவன் என்கின்ற அறிவுக் கதிரவன் பூவுலகில் உதயமாகில், அஞ்ஞானத்தாற் சிறந்த சமணர் என்று சொல் லப்பட்ட மூடிக் கொண்டிருக்கப் பட்ட வலிய இருள் அழிந்து போய் விடும். பிறை முடிப் பெருமானாகிய இறைவனின் புகழாகிய வெண்டாமரை மலர் மலரும் என்று தேவர்கள் மனம் மகிழ்ந்தனர்.

O உருவக அணி.

O உலகை வெறுத்துக் கடிய துறவு மேற்கொண்டு வைய வாழ்வைச் சூனியமாகச் செய்து வந்த சமணர் கொள்கைக்கு நேர் மாறானது சிவசமயக் கொள்கை. வைய வாழ்வில் இருந் தவாறு நுகர்வன நுகர்ந்து மெய்யறிவு போற்றி வீடுபேறு காண்பது சிவநெறிக் கொள்கையாகும். ஆகவே நந்தி தேவர் பிறப்பு வரவேற்புக்கு உரியதாகின்றது. O

# 9. அக்க மாதேவி உற்பத்தி கதி

O இதில் முதலில் 10 பாடல்களில் மாதேவி பிறந்து வளர்ந்தது கூறப்படுகிறது. அதன்பின் வசவ தேவர் வரலாறு கூறப்படுகிறது.

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. முப்புரம் எரியப் புன்னகை புரிந்த புனிதனாகிய இறைவனது பாகத்தில் பொருந்திய கருந்தடங் கண்ணியாகிய இறைவியின் சத்துவ கலையாகிய மடந்தையும், நந்தி தேவரும், அரிய கணநாதர்களும், விரிந்த நிலவுலகில் பிறந்த வரலாற்றை யாம் அறிந்தவாறு வகுத்துக் கூறுவாம்.

உடுதடை என்றொரு நகரம்

2. பெடையொடு அவற்றுக்கு இனமாகிய சுரும்பு (ஆண் வண்டு) க் கூட்டங்கள் மிகுந்து இரைச்சலிட மணம் பொருந்திய தடாகம் அளவும் வாய்க்காலின் வழி ஓடி மடை உடைக்கத் தக்க தேன்மழையை விடாது பெய்யும் மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த உடுதடை என்று ஒரு நகரம் உண்டு. அங்கு

சிறப்புடைய நிருமலன் என்பவன்

3. நன்மை தருவன என்று நான்மறை கூறும் குணங்கள் அனைத்தும் உடையவன், தீயன என்று கூறுபவற்றை விலக்கியவன் என்பதனைத் தன் இயற்பெயரினால் யாவரும் உணரத் தக்கவன் நிருமலன் என்பவன் நிகரற்றவன், இருந்து வந்தான்.

O நிருமலன்-மாசிலன்

பொன் போன்ற சுமதி

4. அவனுடைய அழகிய மனைவி, ஆடகத்தைச் சுவர்ணம் என்று கூறுவது போல சுமதி என்பதே இயற்பெயராக உடையவள். மேலாய தவநிலைகளினும் மேலாயது என்று யாவரும் கூறுமாறு ஒப்பின்றி இல்லற நெறியில் நடக்கும் தன்மை உடையவள்.

O ஆடகம், சுவர்ணம் என்ற இரண்டுமே பொன் என்னும் பொருளன. பொன் என்ற சொல்லுக்கு உலோகம் என்பது பொருள். ஏனைய உலோகங்களைக் கரும்பொன் (இரும்பு) வெண்பொன் (வெள்ளி) என்று கூறுதல் வழக்கு. அவ்வாறே சுமதியைச் சுமதி என்றே சிறப்பாக அஃதே இயற்பெயராகப் பெற்றாள் என்பதாம்.

சுமதி-நல்ல மதி

இறைவியின் சாத்துவிகக் கூறு அவர்களுக்கு மகளாகப் பிறத்தல்

5. தூய திருமலனுக்கு அந்தச் சுமதியிடத்தில், இடபக் கொடியை உடைய சிவன் தனது அழகிய கையில் தாங்காத மான் போன்ற உமையவளுக்கு ஒத்த சத்துவ குணப் பெண்ணானவள், ஒரு மகளாகச் சார்ந்து பிறந்தாள்.

O இடபம் என்பது வீறு மிக்கிருத்தலின் சின்னம்.

மகப்பேற்றால் தாய்தந்தையர் மகிழ்தல்

6. திங்களைப் பெற்ற பாற்கடலைப் போல, மகளைப் பெற்ற தாய்தந்தையர் கங்கை தங்கிய சடை மகுடத்தையுடைய இறைவனின் உச்சியிடத்தைத் தனக்கு இடமாகப் பெற்ற பிறைமதி போன்ற நெற்றியை உடைய கரும்பு போன்ற உமையவளை முன்னர் மகளாகப் பெற்ற நல்ல புகழ்பெற்ற மலையரசனைப் போல மிக்க களிப்படைந்தனர்.

O ஏற்புடைய உவமை; கண்ணப்பர் கதையிலும் வந்துளது.

திருநீறு பூசிச் சிவலிங்கம் அணிதல்

7. நிருமலன், குழந்தைப் பருவத்து இலக்குமியை ஒத்து விளங்கும் மகளுக்கு, மறைமுறைப்படி திருநீறு சாத்தி, அறிதற்கு அரிய பெருமையினை உடைய அஞ்செழுத்து மந்திரம் ஓதி உண்மையை உணரத் தக்க இட்டலிங்கமாகிய குறியை மார்பில் அணிந்தனன்.

O இலிங்கம் கட்டுதல் வீர சைவ வழக்கு.

மாதேவி என்ற பெயர் சூட்டல்

8. அவளுக்குத் தந்தையாவதற்கு, முன்னர் நல்ல தவம் புரிந்தவனாகிய நிருமலன், திங்களை அணிந்த நீண்ட சடையினை உடைய இறைவனின், இடப்பாகத்தில் உள்ள இறையவளே என்று சிந்தித்தவனாகத் தன் மகளை மாதேவி என்ற ஓர் அழகிய பெயரிட்டு அழைத்தான்.

O மாதேவி என்பது உமையவளின் பெயர்களுள் ஒன்று.

மாதேவி வளர்தல்

9. அறிவு, அருள், ஆதரவு, அடக்கம், வாய்மை, மெய்த்துறவு, நல்லொழுக்கம், தூய்மை என்று இத்தகைக் குணங்கள் தனக்கு உறவாகக் குழந்தைப் பருவத்து அவையும் உடன் வளர, மறுவறு சுமதியின் மகள் மாதேவி வளர்ந்து வந்தாள்.

O பிறப்பிலே எல்லா நற் பண்புகளும் உடன் பிறப்பாகப் பெறுகிறாள் மாதேவி. நற்பண்புகள் இவை எனப் பட்டியல் இடுதல் ஓர் உத்தியாகும்.

மன்மதனின் மயக்கம்

10. வளைந்த கரும்பு வில்லை எடுத்துக் கொண்டு மாதவரின் தவம் குலைக்க, சுருங்கிய இடையை உடைய அந்த மாயை பிறந்த நாளில் உவகை கொண்டு ஓடிய மன்மதன், மாதேவி வளரும் நாளில் மனம் சோர்ந்த வில்லை உடையவனாக வலி குன்றி ஒன்றும் தோன்றாது மயங்கினான்.

O மாயை தோன்றிய நாளில் வலிமை பெற்ற மன்மதன், மாதேவி தோன்றிய நாளில் அறிவு அருள் ஆதரவு அடக்கம் முதலியன அவளுடன் வளர்ந்த காரணத்தால் வலிமை குன்றினான் என்பதாம். காமனை வெல்லும் வலிமையோடு பிறநதாள் மாதேவி என்பது கருத்து.

தீமைகள் கெட்டு நன்மைகள் ஓங்குதல்

11. திங்களின் அழகிய கொழுந்து போல, நிருமலனின் மகள் வளரும் நாளில் கொடிய தீவினைப் பரப்பெலாம் அழிந்தன. நல்லறம் யாவும் மிக்கு உயர்ந்தன. எங்கும் சிவாகமம் முற்றும் முழங்கின.

சிவகணங்கள் உலகில் வந்து பிறத்தல்

12. இங்கு மகாதேவி இங்ஙனம் இருந்து வந்தாள். எம்பிரான் அனுப்பிய கணங்கள் தாங்கள் விரும்பிய சிறந்த ஊர்களில், முற்பிறப்பில் செய்த தவமுடையாரிடத்தில் நல்ல குழந்தையாகி, தீங்கிலாச் சித்த ராமையன் எனவும் மாச்சி தேவன் எனவும் இவ்வாறு இடப்பட்ட ஓங்கு பெயர்கள் வெவ் வேறாகக் கொண்டு நல்ல தவம் முயன்று தங்கினார்கள்.

நந்தி என்ற ஞாயிறு தோன்றுதல்: கவிஞர் கூற்று

13. வீடு பேறு கொடுக்கத் தக்க சிவ வழிபாட்டைப் பல்வகை யாக ஆகமநெறிக்கு இணங்கச் செய்து, செயற்கரும் வினை கள் இயற்றி அந்தச் சிவ கண நாதர்கள் இருந்து வந்தார்கள். கயிலாயத்தைப் போல் தென்நாடு சிறப்படையவும் மயக்கும் உரைகளால் அறிவை ஈர்க்கும் சமணம் என்னும் கொடிய இருள் குன்றவும் வயிணவம் என்னும் விண்மீன் ஒளி மழுங் கவும் வியத்தகு சைவம் என்னும் மலர் விரியவும் நல்ல நந்தி என்னும் அறிவுக் கதிரோன் தோன்றியதை இங்கு விரித்துரைப்பாம்.

O சென்ற கதியின் இறுதியில் நந்தியை ஞான ஞாயிறு என்றார்; இங்கே நந்தி வெய்யவன் என்று பொருந்தத் தொடுத்துளார் கவிஞர்.

இங்குளாபுரி என்ற நல்ல ஊர்

14. வாயில் மண்ணைப் போட்டுக் கொண்டவனைப் பெரிதாக மதித்து நல்ல நெற்றியில் திருமண் இட்டுக் கொள்ளாமல், மோதும் வெள்ளிய அலைகளை உடைய பாற்கடலில் உறங் கும் திருமாலுக்கு உருளை (சக்கர)ப் படையை அளித்த முக்கண் நாயகனையே சிந்தித்து நல்ல நெற்றியாகிய வீதியை வெண்ணீற்றால் அழகுபடுத்தும் தூய நன்மறையோர்க்கு இடமாயுள்ள குற்றமில்லாத நகரம் ஒன்றுண்டு. அதன் பெயர் இங்குளாபுரி.

O வாயில் மண்ணைப் போட்டுக் கொண்டவன் என்று வேடிக் கையாக ஆசிரியர் குறிப்பது உலகை உண்டருளிய கண்ண

பெருமானை. வீரசைவராகிய ஆசிரியர், சைவ சமயத்திடம் நட்புறவும் வைணவத்திடம் வேடிக்கை கலந்த நன் மதிப்பும் சமணத்திடம் கடுவெறுப்பும் கொண்டிருப்பது கவனிக்கத் தக்கது.

### அணி வகுப்புப் போன்ற அழகிய நகரம்

15. கதிர் விளைகின்ற செந்நெற் காடு சூழ்ந்த கரும்பு வனங்களும், கரும்பைச் சூழ்ந்த வாழை வனங்களும், அங்கே அந்த வாழைகளைச் சூழ்ந்த புது நறும்பாளைகளை உடைய பாக்கு வனங்களும், அந்தப் பாக்கு வனங்களைச் சூழ்ந்த மூன்று பக்கத்தையுடைய பசிய தேங்காய்கள் நிறைந்த தென்னந் தோப்புகளும், அந்தத் தென்னந் தோப்பு களைச் சூழ்ந்த உதிர்கனித் தேமாந் தண் பொழில்களும், பார்க்கின்றவர்களுக்கு மிக்க துயர்தரும் வறுமை அணுகா வாறு அதிர்முரசு இயம்பும் வீதிகளும், அந்த நகருக்கு, அணிகள் வருக்கும் படைகளைப் போலக் காட்சி கொடுக்கும்.

O நெல் வயல், கரும்பு, கதலி, கமுகு, தெங்கு, மாம் பொழில் தெருக்கள் ஆகியன அடுத்தடுத்து வரிசை வரிசையாக அமைந்திருத்தலின் அணி வகுக்கப் பெற்ற படைகள் போல் காட்சி தந்தன என்பதாம்.

O வருணணை நயம் துய்க்கத் தக்கது.

### விருந்து புறந்தரல்

16. அந் நகரத்து வேதிய மடந்தையர் எல்லாரும் விருந் தினுக்கு அன்னம் (சோறு) இடுவார்கள். அன்னத்திற்கு (அன்னப் பறவைக்கு) ப் புனல்வயல் செங்கமலங்கள் விருந் திடும். பாரத்தால் வருந்தும் நுண்ணிடையை உடைய நல்ல மாதரெல்லாரும் தங்கள் கையாகிய மலருக்கு வண்டுகளை (வளையல்களை) க் கொடுப்பார்கள். பேரின்பம் தரும் அந் தத் தனிநகர் சூழ்ந்த தடாகங்கள் வண்டுகளுக்குத் தண்டை யுடைய மலர்களைக் கொடுக்கும்.

O ஆசிரியரின் சொற்சாதுரியம் : அன்னம், வண்டு என்ற சொற்களைக் கையாளும் திறம் சுவைத்தற்கு இனியது.

### மறையவர் பெருமை

17. இந் நகரில் வாழும் மறையவர் செய்யும் வேள்விப் புகை படிந்து அல்லவா, பொன்னுலகில் வாழும் தேவர்கள் நிறைந்த வாணாள் பெற்றுள்ளனர்? இந் நகரில் உள்ள மறையவர் நினைத்தற்கரிய மனுநெறி முறைமையால் வேள்வித் தீ வளர்த்து உலக நடைமுறையைக் காட்டினால் அல்லாமல் வேறொரு வகையால் கலியுகத்தில் மிக்க மழை காணப் படுமோ?

O ஆகம நெறி போற்றும் இந் நூலாசிரியர் வேதம் வேள்வி மனுமுறை என்பவற்றுடன் சமரசமாகச் செல்கிறார்.

### மாதரசன் என்றொரு மறையவன்

18. இத்தகைய மாநகரில் அந்தணர்களுக்கு எல்லாம் தலைமை பூண்டு சிறந்த ஓர் அந்தணன், நினைவு எல்லாம் அவனுக்குச் சிவன் திருவடியிலும், சொல்லெல்லாம் தூய சிவனை துதித்தலிலும் வினையெல்லாம் சிவனின் வழிபாட்டிலும் வைத்தவன். வேதம் உணர்தலிலும் ஒழுக்கம் காத்தலிலும் வல்லவன். இல்லறத்தில் இருந்தவன் ஆயினும் துறந்தவர்க்கு ஒப்பானவன், அவனது இயற்பெயர் மாதரசன் என்பதாம்.

O சிந்தை சொல் செயல் என்ற மூன்றாலும் இறைமையைப் போற்றல் இங்கே சிறப்பாகச் சொல்லப்படுகிறது.

### அவன் மனைவி மாதாம்பிகை

19. விகாரங்கள் அனைத்தி னின்றும் நீங்கிய அந்த மாதரசனின் மனைவியின் பெயர் மாதாம்பிகை. அருந்ததி முதலாகிய கற்புடைய மாதர் தங்கள் அரிய திண்மை நிலை இடையூறின்றி நிறைவேறற் பொருட்டு ஒவ்வொரு நாளும் அந்த மாதாம்பிகையைக் கைகூப்பி வணங்கிச் சிந்தித்துப் பின்பு தம் படுக்கையிற் படுப்பர். கருந்தடங் கண் பூங்கொடி அனைய மாதாம்பிகையின் கலங்கா நிலையினை யாவர்தான் சொல்லவல்லார்?

O கலங்கா நிலையே பெண்மையின் பீடு நிலை.

மாதாம்பிகை மகனாக நந்திதேவர் பிறத்தல்

20. பூங்கொடி அனைய மாதாம்பிகையின் பெருமை பற்றிய அழகிய உரைகள் அன்று முதல் அவ்விடத்தில் ஓங்கின. அபரசிவன் என்று வேதம் விளம்பும் அருள் நந்தி அவள் வயிற்றில் தோன்றினான். அக் காரணத்தால் தக்கவர் தக விலர் என்பதனை அவரவர் பெற்ற மைந்தனால் தெளிய அறியலாம் என்று பெரியோர் கூறுவர்.

O தக்கார் தகவிலர் என்பது அவரவர், எச்சத்தால் காணப் படும் என்பது திருக்குறள்.

O சிவம், பரசிவம் அபரசிவம் என இருவகைப்படும். பரசிவம் என்பது அபரோட்சத்தை; அபர சிவம் என்பது பரோட்சத்தை. பரசிவம் - தத்துவம் கடந்த நிலையில் உள்ள இறைவன். பரம்-மேலானது; அபரசிவம் - தத்துவத்துக்குள் உருவம் அருவம் அருவுருவம் என்ற நிலைகளில் உள்ள சிவம் அபரம்-மேலல்லது, அபரோட்சம்-அபர நிலையைக் கடந்தது; பரோட்சம்-பரத்தை விட்டு விலகியது.

மாதரசன், மாதாம்பிகை, பெருமை

21. ஐந்தொழில் புரியும் ஒப்பற்ற இறைவன் திருவுளம் மகிழுமாறு ஆறு தொழில்களைச் செய்து வருபவன் மாதரசன். பைந்தொடி அணிந்த அவன் மனைவி தன் கொழுநனைத் தொழுது எழும் செய்கை உடையவள். விரும்பித் தீயை (வேள்வித் தீயை) வளர்ப்பவன் கணவனாகிய மறையவன். விருந்தினரின் வயிற்றுத் தீயை (பசியை) அணைப்பவள், செந் திரு (இலக்குமி) அனையவள் அவன் மனைவி. இவர்கள் இருவரது பெருமை அழகிய தாமரை மலரில் எழுந்தருளி யுள்ள நான்முகனின் கலைமகள் இருக்கும் நாவினாலும் சொல்லிவிட முடியாது.

O ஐந்தொழில் : படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல். அறு தொழில் : ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட் பித்தல் ஈதல் ஏற்றல்

O தீ (வேள்வித் தீ) வளர்ப்பான் மறையவன், தீ (பசித் தீ) அவிப்பாள் அவன் மனைவி என்பது ஆசிரியரின் சொல்திற னையும் கருத்து வளத்தையும் காட்டுவதாகும்.

### நந்தி தேவர் பிறப்பு, வானவர் மலர்மாரி

22. இவ் வுலகெலாம் செய்த நல்வினையால், இத்தகைய மாதரசன் தேவியின் வயிற்றில், நிறைந்த வண்டுகள் விருந் துண்ண அழகிய பூங்கொடியின் மலர்கள் பூப்பது போல் என்னை ஆளுடைய நந்தி தேவன் கயிலையினின்று வந்து உதித்தனன். அப்போது தேவர்கள் தலைவணங்கி, தேவ துந்துமிகள் முழங்கப் பூ மாரி பொழிந்தனர்.

### அமணர் வணங்கல், வைணவர் ஞானம் பெறல்

23. எம் குருவாகிய நந்தி தேவன் தோன்றும் நாளில் நடந்த புதுமையை என்னென்று சொல்வாம்? கண்டு முட்டு கேட்டு முட்டு என்று கூறும் கொடிய குணத்து அமண தங் கள் உள்ளத்தில் எறிகின்ற மழுப்படை உடைய சிவனின் தோற்றம் கண்டு அவர்கள் கை குவித்து வணங்க ஆங்கோர் நேயம் (அன்பு) பிறந்தது. திருமாலின் அடியார் உள்ளத்தில், நம் சிவனே இறைவன் என்று தம்மை யறியாமல் அவர் களுக்கு ஒரு ஞானம் பிறந்தது.

O கண்டு முட்டு, கேட்டு முட்டு-சமண குருமார் தம் மாணாக் கர்க்கு விதிக்கும் இருவரன் முறைகள் இவை. பிற மதத்தி னரை அல்லது அவர்களது நூல்களைக் காணில் உண்ணா திருக்க வேண்டும், அது கண்டு முட்டு. அவற்றைக் கேட்டால் உண்ணலாகாது என்பது கேட்டு முட்டு. முட்டு-தடைப்படுதல்; முதனிலைத் தொழிற்பெயர்

### நந்தி தேவர் பிறந்ததும் தீமைகள் ஒழிதல்

24. நலம் மலிந்த தரும மூர்த்தியாகிய நல்ல நந்தி வானவன் இந்தப் புவியில் தோன்றிய நாளில், கொலை களவு பொறா மை வெகுளி கொடுஞ்சொல் பொய் கூறல் பயனில சொல் லல், செய்நன்றியைத் தன் நிலை தடுமாறி மறத்தல், பழி கூறல், வஞ்சனை, பிறருடைய மடவாரைத் தழுவ நினைத்தல் என்று சொல்லப்படும் இத்தகைய தீமைகள் யாவும் போய் ஒழிந்தன.

O தீ வினைகள் தொகுத்துரைக்கப் பட்டுள்ளன. பட்டியலி டுதல் ஓர் உத்தி.

நந்தி தேவர்க்கு இறைவன் இலிங்கம் தரித்தல்

25. தன் திருவடியை எம் (கவிஞரது) தலையில் வைத்து எம்மை (கவிஞரை) ஆட் கொண்ட நந்தி தேவன், தாயின் வயிற்றிலிருந்து தரையில் இதழ் விரிந்த தாமரை மலர் போன்ற ஒளியுள்ள முகம் தோன்றப் பிறப்பதற்கு முன்னரே குருமூர்த்தமாகக் கூடல சங்கமம் என்னும் திருப்பதியிலுள்ள ஈசன் தாய்க்காக ஒளித்து அருகே வந்து நல்ல நெற்றியில் நீறு அணிந்து வீடுபேறு அளிக்கும் இட்டலிங்கத்தை மார்பில் தரித்தனன்!

வசவன் என்று இறைவன் பெயரிடல்

26. அங்ஙனம் தரித்த பின்னர், தனது வடிவம் தோன்றா வாறு தாயின் எதிர் நின்று, இடபப் (நந்தி) பெயரை மாற்றி நல்ல வசவன் என்று பெயரிட்டுப் போயினன், சிவனை பாவனை செய்க என்று ஒருவரிடத்தில் குருவாக வந்து உபதேசிப்பவரது அறவுரை கெட, தானே அருட்குருவாக வந்து அனுக்கிரகம் செய்த, நஞ்சு தங்கிய சூலத்தைக் கையில் ஏந்திய இறைவன்.

O நேரடியாகக் காணாத பொழுது பாவம் (உணர்வு) வேண்டும். நேரடியாக இருக்கும் பொழுது பாவம் வேண்டு வதில்லை. சூல பாணியன் இங்குத் தானே அருட்குருவாக வந்து அருள் புரிந்தனன்

ஒருவன் மற்றொருவன் குருவாக வந்து கடவுளைத் தியானம் செய் என்ற உபதேசிக்கும் பொழுது கடவுள் பாவ வடிவாக வேண்டும். கடவுளே வந்து உபதேசம் செய்வராகில் பாவனை தேவையில்லை என்பதாம்.

வசவரின் திருநீறு முதலியன கண்டவர் வியத்தல்

27. பிறந்த மெய்ஞ்ஞான வடிவமான பிள்ளையின் நல்ல நுதலில் மிக்க ஒளி உடைய திருநீறும் அழகிய கழுத்தில் சிறப்புற்ற அமல லிங்கமும் கண்டு அங்கே கூடி நின்றவர் அனைவரும் வியந்து, இறைவனே தன்னை ஒளித்துக் கொண்டு குருமூர்த்தமாக வந்து இவை புனைந்து மகவினை வசவன் என்றொரு பெயரை இட்டனன் என்பதை, அறிவுக்கு

அறிவாக நின்று இறைவன் அறிவிக்க, யாவரும் அறிந்து கொண்டார்கள்.

### குழந்தையைக் கண்டோர் நந்தி தேவரே என்று அறிதல்

28. குற்றெழுத்தின் முன் நின்ற லகரமானது, றகரமாகத் திரிதலன்றி ஆய்தமாகவும், வருமொழிக்கு முதலாக வந்த தகரத்தின் முன் எழுத்தாக அறிகுறி வடிவமெனத் திரிந்து வருவதுபோல, நந்தி என்னும் வலிமை பொருந்திய இடபம் (காளை) வடிவம் மாறி நின்றாலும் நல்ல தாமரை மலர் போன்ற தமது கண்ணாற் கண்டவர் எல்லாரும் நந்தி தேவரே என்று உள்ளம் மகிழ்ந்தனர். பெறுதற்குத் தவம் செய்த தாய்தந்தையர் இருவரும் அடைந்த உவகையினை யாவர் தான் எடுத்துச் சொல்ல வல்லார்?

O குறில் வழி லளத்தவ் அணையின் ஆய்தம் ஆகவும் பெறுவும் அவ்வழி யாளே என்பது இலக்கண விதி. கல் தீது_ கஃறிது என்னும் உதாரணம் போல் இடப வடிவம் திரிந்து மானிட வடிவம் அடைந்ததை அறிகுறியால் உணர்ந்தனர்.

O இலக்கணத்தையே உவமையாக்கும் ஆசிரியரின் புலமையும் திறமும் இலக்கண ஆர்வமும் மிகவும் நினைக்கத் தகுவன. இலக்கணத்தை இலக்கியம் ஆக்குவதும் வாழ்வோடு இயைப்பதும் பாராட்டுக் குரியன அல்லவா?

### வசவ தேவரின் கலைஉணர்வு

29. பெற்ற நாள் முதல் பிள்ளைக்குச் செய்ய வேண்டிய கடமைகளை மாதரசன் என்ற தந்தை முற்றச் செய்தான். உண்டாகிய ஒப்பற்ற குழவிப் பருவ நிலை கடந்து எங் கோன் வசவதேவன், போதிக்கும் குரு தன் முன்னால் இருக்க, ஆன்ற மா மறைகள் முதலாகத் தான் முன்பு அறிந் திருக்கும் கலைகளை எல்லாம் யாவர்க்கும் சாட்சியாகச் சூரியன் சிறிது சிறிது குறுகி வந்து தன் இடத்துக்கு வரச் சந்திரன் தன் பூரண கலைகளை எல்லாம் தான் அடைவது போல், விரைவில் அறிந்தான்.

O உவமை யணி

O தனக்கு எதிரில் சூரியன் சிறிது சிறிது குறுகி வந்து அருகிய பொழுது, சந்திரன் தன் கலைகள் சிறிது சிறிது வளர்ந்து முன்போல் பூரண கலைகளாவது யாவர்க்கும் காட்சியாய்க் காணப்படுவது போல் வசவரும் தான் முன்பு அறிந்துள்ள கலைகள் அனைத்தையும் குருவுக்கு முன் பூரண மாக உணர்ந்தார் என்பதாம்.

கலியாண புரத்தில் விச்சலன் என்ற அமண அரசன்

30. பரமனை இகழ்ந்து, நன்னெறி அல்லாத நெறியில் போகும் அயல் மதமாகிய யானையை அடக்குதற்கு அரத்தால் வாய்ந்த கூர்மையுள்ள அங்குசம் போலவும், சிவனடியார்கள் என்ற ஆவிற்கு ஓர் இளங்கன்று போலவும் அருள் வடிவான வசவதேவன் முறை குன்றாது நடந்து வரும் நாளில், வளமுடைய கலியாண புரத்தில், பொருந்திய ஆட்சி மிக்க விச்சலன் என்னும் அரசன் சமணக் குழாம் புடைசூழ இருந்து வந்தான்.

O உருவக உவமைகள்.

வசவ தேவர், நாகாம்பை, கலியாணபுரம் அடைதல்

31. புவியில் கலியாணபுரம் என்ற ஆடையில், கொடிய புல்லிய சமணம் என்னும் அழுக்கில் உவர்மண் பற்றினாற் போல சிவ பத்தி மேலிட்டால் அந்த ஆடை வெளுக்க, உலகில் இருக்கும் அந்தச் சமயம், அடியார்களின் செல்வம் எனத் தக்க வசவதேவன் கயிலையினின்றும் (அல்லமரைத் தேடி) தன்னைப் போல் உடன் வந்த நாகாம்பிகை (தமக்கை) என்பவளும் தொடர்ந்து வர, அந்த விச்சலன் என்பவனுடைய நகரில் நல்ல தவத்தோர் சூழ அடைந்தான்.

O உருவக அணி,

விச்சலன் வசவரை எதிர்கொண்டு அழைத்தல்

32. வசவ தேவன் என்பவன் வந்தனன் என்று எவரும் சொல்ல, விச்சல மன்னன் அதை அறிந்து, மந்திரி என்று மறைந்த நின்ற அகப் பகையை அறியாது, நீறு மிகுதியாகப் பூத்த தழலை, கொடிய தீ என்று அறியாது எடுத்தற்கு

மெல்லிய கையால் தொடுவது போல, வசவனின் எதிர் சென்று, தனது சமணமதம் இனி நிலைத்தற்கு அரிதாக அழியத், தன்னோடு அழைத்துக் கொண்டு அரண்மனையில் புகுந்தான்.

O உருவக உவமையணிகள்.

அந்தாணி மண்டபத்தை அடைதல்

33. அலங்காரம் அமைந்த அரசிருக்கை மண்டபத்தில், புறச் சமய கோளரி (சிங்கம்) ஆகிய வசவனுக்கு ஆசனம் ஒன்றைக் கொடுத்து, சிங்கம் சுமந்த பூவணை மேல் மன்னன் இருந்தான். அப்பொழுது தானைத் தலைவர், குறுநில மன்னர் அமைச்சர் வெண்கவரி வீசும் மாதர் ஆகியோர் நெருங்கிய பேரவையில் நிகழ்ந்த ஒரு செய்தியை எடுத்துரைப்பாம்.

வானிலிருந்து ஓலைச் சுருள் ஒன்று வந்து விழுதல்

34. இந்திரன் முன் ஆடுகின்ற அரம்பையினது காதிலிருந்து, சிவந்த பொன்னால் இயன்ற அழகிய ஓலை (கம்மல்) ஒன்று நழுவி விழுந்தது போல ஓலைச் சுருள் ஒன்று விண்ணின் உச்சியி லிருந்து அரசனின் அவைக் கண் வந்து, மானிடர் மருட்சி கொண்டு பார்க்குமாறு, எதிரில் வந்து விழுந்தது.

O மாதர் காதில் பொன்னோலை அணியும் வழக்கம் இருந்ததை உணர முடிகிறது.

அரசன், ஓலையை எடுத்து வசவேசரிடம் காட்டல்

35. அங்கிருந்தோர் அதனை எடுத்துக் கொண்டு வந்து நெடுங்கையிற் கொடுக்க, வாங்கிக் கொண்டு வென்றிகொள் மடங்கல் (சிங்கம்) போன்ற மன்னன் அந்த ஓலைச் சுருளைப் பிரித்து எழுத்தைப் பார்த்து (அஃது இவ் வுலக மொழிகளில் ஒன்றும் அன்று ஆகவே) தன் தலையெழுத்துப் போல்வது என்று கருதி ஒன்றும் தோன்றாதவனாகிச் சித்தம் கலங்கி, மிக்க வலியுள்ள அமணர்களுக்கு எமன் போன்ற வசவ தேவனின் மலர் போன்ற கையில் கொடுத்தான்.

அரியணைக்குக் கீழே புதையல். ஓலைச் செய்தி

36. கையில் வாங்கிய ஓலைச் சுருளைப் பிரித்துப் பார்த்து வசவ தேவன் இவ் வோலையானது, உனது அரியணையின்

கீழ் பொன் புதையல் ஒன்று இருக்கிறது எனத் தெரிவிக்கி-றது. நீண்ட தூண் போன்ற தோளை உடையவனே! உனக்கு அதை நான் காட்டுவேன் என்று உரைத்து, அந்த அரசர்கோன் அதிசயிக்க அந்த இடத்தைத் தோண்டும்படி செய்தான்.

தங்கப் புதையல். அரசனது வியப்பு

37. அங்ஙனம் அகழ்ந்திடவும், பொன்மலை பாதாளத்தில் புகுந்து இவ்விடம் மெல்ல மேலெழுவது போலக் காணப்பட அரசர்சேகாமான் மகிழ்ச்சியுற்று, வசவ தேவனைக் காணப் பெற்ற பொழுதே நிகழ்ந்த ஒளி பொருந்திய பயன் என்று உணர்ந்து மிகவும் வியந்தான்.

வசவதேவரை மன்னன் பாராட்டுதல்

38. பொருந்திய நல்வினை எமக்குப் பயனாகத் தந்த இவ் வசவ தேவன் கயிலையாகிய நல்ல மலைக்கு இரண்டாம் கடவுளே என்று வியப்போடு சொல்லி, உரை மடந்தை பொய்யாள் என்பதைப் புதுப்பித்துக் காட்டினான். அந்தச் செயலைக் கண்ணாற் கண்டோர் ஐயம் தெளிந்து நெஞ்சகம் மகிழ்ந்தனர்.

O அதிசயம் நிகழ்த்துவது, தவிர்க்க முடியாத் தருணங்களில் தேவைப்படலாம் என்று அறிய முடிகிறது.

அரசன் வசவதேவரை அமைச்சர் ஆக்குதல்

39. வசவதேவனுக்கு மந்திரிக் கிழமையை அதற்குரிய மரபுகளோடு கொடுத்து "மைந்தனைப் புரக்கும் தாய் போல் என்னைக் காப்பாயாக" என மனமகிழ இன்சொல் செப்பி ஆங்கு இருக்க, வாளேந்து தடக்கை மன்னன் வசவனிடம் நட்புக் கொண்டான்.

விச்சல மன்னன் வசவேசருக்குத் திருமணம் செய்வித்தல்

40, மாலை அணிந்த வேலை உடைய முருகனுக்கு ஒப்பான அரசன், சிறந்த தகைமை உடைய வசவேசரது பெருமைக்குத் தக்கபடி, திருமணம் செய்து வைத்தான். அந்த நகரம் அன்று முதல் கலியாணம் (புரம்) என்றே சொல்லப்படுமானால்

சிறப்புற்ற அந்தக் கலியாணத்தின் சிறப்பினை நாம் விரிவாகச் சொல்வது எங்ஙனம்?

O கலியாணபுரி என்ற ஊருக்குப் பெயர்க்காரணம் கவிஞரது கற்பனையில் பிறந்த அழகு உடையது.

நாகாம்பிகைக்கு மகன் பிறத்தல்

41. இவ்வாறு கலியாணபுரியில் இருக்க, வசவதேவருடைய தமக்கை நாகாம்பை வசவ தேவரின் திருவருளால், உடம்போடு இருக்கும் பொழுதே கிடைக்கும் ஐக்கிய முத்தியை அளிக்க வல்ல வீரசைவம் என்னும் நன்னெறியை வளர்க்கும் ஆண் மகவைப் பெற்றாள்.

நாகாம்பிகை மகனுக்குப் பெயரிடுதலும் அவனது வளர்ச்சியும்

42. மைந்தனை ஈன்று உவந்து புகழுள்ள கற்புடைய நாகாம்பிகை அவனுக்கு (சென்ன) வசவன் என்று பெயர் இட்டாள். திகழும் ஆறு முகங்களும் முடிவிலாத் தலங்கள் ஆறு என்று அறிவித்தற்கு உலகில் வந்த முருகன் என்று எண்ணுமாறு, நாகாம்பிகையின் மகன் வளர்ந்தான்.

O பக்தத் தலம், மாகேசுவரத் தலம், பிரசாதித் தலம், பிராண லிங்கத் தலம், சரணத் தலம், ஐக்கியத் தலம் என்று தலங்கள் ஆறு. அவையே முருகனின் முகங்கள் ஆறு என்று அறிவிக்கப் பிறந்தவன் போன்று (அந்த முருகனைப் போன்று) வசவன் வளர்ந்தான் என்பதாம். ஆறு தலங்கள் என்பதற்குக் கவிஞர் அறிவு சார்ந்த விளக்கம் தருவதை உணரமுடிகிறது. அதனால் ஆறு ஆதாரங்கள் என்பதும் நினைவுக்கு வருவது இயல்பே.

வசவருக்கு ஆண்குழந்தை சங்கமேச தேசிகன்

43. வீர இயல்புடைய மாகேசர் என்ற மெல்லிய பயிரை வளர்க்க எழுந்தருளிவந்த முகில் போல நிகரில்லாத சென்ன வசவ தேசிகன் இருந்து வந்தான்; ஒப்பில்லாத வசவனாகிய பெருந்தகைக்கு ஒரு ஆண்மகவு பிறக்க அதற்குச் சங்கமேச தேசிகன் என்று பெயர் புனைந்தான்.

O நாகாம்பிகையின் மகன் பெயர் சென்ன வசவன். வசவருடைய மகன் பெயர் சங்கமேசன்.

### வசவ தேவரின் பணி

44. சிவனடியார் வேண்டியவற்றைத் தன் மொழி எண்ணம் பார்வை என்பவற்றால் தவிராது கொடுத்துத் தாய் போல் காப்பாற்றினான் வசவ தேவன். புற மதத்தோரின் வழியெல்லாம் வழக்கு (நடப்பு) மாறுபாட்டை அடையவும், மலி புகழ்ச் சைவம் என்னும் பழியில்லா வழி நடப்பவும் அவன் செய்தனன்.

### உலகில் தோன்றிய சிவகணங்கள் யாவும் கலியாணபுரம் வருதல்

45. சிவனடியார்க்குக் காமதேனு ஆகிய வசவ தேவனது மிகுபுகழ் விரிந்த நிலவுலகம் முழுதும் பரவ, கயிலை மலையினின்று நீங்கித் தரைமிசை வந்திருந்த தவத்தினை உடைய சிவ கணங்கள் எல்லாம் அதனால் தெரிந்து, ஒப்பில்லாத கலியாணத்திற்குப் போதல் போல் கலியாண புரத்திற்குப் போனார்கள்.

### அடியார்களை வசவேசர் ஆதரித்தல்

46. பலரோடு வந்தாலும், இகழத் தக்க வடிவோடு தனியே வந்தாலும், மிகுந்த சிறப்போடு வந்தாலும் தேக நலமின்றி வந்தாலும் சிறப்பு மிக்க சிவனின் அடியார் வரக்கண்டால் எதிரே சென்று நிலமிசை வணங்கி அஞ்சி நின்று உபசரிப்பான் வசவ தேவன்.

### அவருக்கு வேறுபாடு கிடையாது

47. சாதி,ஆண்பெண்,என்ற வேறுபாடுகளை நீக்கி அடியார்கள் சிவசொரூபமே என்று அடித்தாமரையை இறைஞ்சி, குற்றமற்ற சுவையுடைய இனிய கற்கண்டால் செய்த செங்கரும்பும் வேம்பும் பேதம் இன்றிச் சாதியும் பெயரும் விட்டு ஒன்றென்று உணர்தல் போல, வசவேசன் பக்தி செய்வான்.

O உவமை

### பலவகைச் சிவனடியார் எண்ணிலர்

48. மாதரை விட்டகன்ற மிகுந்த துறவுடையவர்கள் எண்ணற்றோர், கோதையர் (பெண்டிர்) கூட இருந்தும் கொடு

மையைச் செய்யும் மயல் இல்லாதோர் எண்ணற்றவர், அறிவு மிக்க பூசனைக்கு வேண்டுபவை முழுதும் கொண்டு காலம் தவறாமல் ஈசன் பூசை செய்வோர் எண்ணற்றோர்.

எல்லோரும் வசவருக்கு மாகேசரே!

49. வெவ்வேறு நோன்புகள் கொண்டு நிற்பவர்கள் எண்ணிறந்தோரும், பரதம் (நடனம்) செய்யும் மதர்த்த அரி படர்ந்த கண்களை உடைய பொது மகளிர் மனைகள் தோறும் காம விளையாடல் செய்பவர் எண்ணிறந்தோரும், தூய நல்ல நந்தியாகிய வசவேச வரதனின் அன்பினால் வாழப் பெற்ற குற்றமற்ற மாகேசராம்.

வசவ தேவரின் பணி

50. தீது செய்கின்ற சமணர்களுக்கு முன்னே செயற்கரிய வியத்தகு செயல்கள் காட்டி, வாது செய்கின்றவரின் செருக்கினை அழித்து, சிவனடியார்க்கு எல்லாம் யாது பணிவிடை செய்குவேன் என்று கேட்டு அவர்களின் ஏவலை இயற்றுவன் வசவ தேவன்.

வசவர் அல்லமரின் வருகையை எதிர்பார்த்திருத்தல்

51. உள்ளத் தெளிவுடைய சிவனடியார்களோடு இவ்வாறு நடந்து வரும் நாளில், அளவிடற்கரிய ஒளிவடிவான அல்லம-தேவனின் வருகையை எதிர் பார்த்து, வளம் பொருந்திய திருக் கலியாண வளநகரில் மழையை நோக்கும் இளம் பயிர் போல, எம்மை ஆளுடைய நந்தியாகிய வசவ தேவன் இருந்தான்.

O உவமை

O

# 10. அக்க மாதேவி துறவு கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. காம வேளின் கணை பாய அதனால் தத்தளிக்கின்ற அரசனை, வாந்தி செய்த சோறு போல் அருவருத்த மாதேவி என்பவள், தன் உண்மை நிலையை அறிதற் பொருட்டு, மின்னலைப் போன்ற அல்லம தேவன் விளையாட்டாக அருளித் திரியும் பெரிய காட்டில் தேடி அவனை அடைந்த தன்மையைச் சொல்லத் தொடங்குவாம்.

O உவமை

மாதேவி மங்கைப் பருவம் நண்ணுதல்

2. தனங்களின் பாரத்தைச் சுமக்க முடியாமல் இடையாகிய கொடி தளர, அகங் கையிலுள்ள குடத்தில் நிறைந்த நெய்-யைப் பெய்கிற நெருப்பைப் போன்ற அழகு அடைந்து, இந்தப் பெண்ணுக்கு உலகெங்கணும் இணையாக நாம் கண்டிலம் என்று எவரும் கூற, முற்றும் உணர்ந்த மாதேவி, மங்கைப் பருவம் அடைந்தாள்.

O மருங்குல் ஆகிய கொடி வாடுதற்கும் நெய் பெய்த அழல் போல் அழகு எய்துவதற்கும் இயைந்தது மங்கைப் பருவம்.

மாதேவி இறைவனை அடைய முயலுதல்

3. நான் முந்தி நீ முந்தி என்று வழக்காடிக் கொண்டு ஒன்-றோடு ஒன்று எழுதல் போல் தனங்கள் வளர்ந்தும் பேதை (ஐந்து வயது)ப் பெண் போல் தன் மனத்தில் சற்றும் காமம் தோன்றாமல், பாதியுடல் பெண் வடிவான இறைவனாகிய பேரின்பத் தலைவனைச் சாதித்து எய்தும் முயற்சியில் தலைப் பட்டாள்.

O சாதகமாவது இடைவிடாது நிட்டை கூடும் முயற்சி.

இளம் பருவத்தில் உயர் பக்குவ நிலை

4. தன்னை அறிந்து, நீக்கம் அற, முக்கண் தலைவன் (சிவன்) பால் இரண்டற்று ஒருமை எய்தும் தக்க பக்குவம் அமைந்த பெண்ணை, கருப்பினால் ஆகிய நீண்ட வில்லை உடைய மன்மதனது தேனம்பு பாயத் தக்க இளம் பருவத்தி னள் என்று அறிவு மறையப் பெற்றவர் (தாம்) கூறுவர்.

மாதேவி தவத்திருந்து வருநாட்களில்

5. வண்டுகள் மொய்க்காமல் மலர்ந்த சண்பக மலர் என்று சொல்லும் படியாக வேறுபட்டு முன்பு சிவனோடு அமர் செய்த மன்மதனின் அம்பு படாத மேனியைப் பார்த்தற்கரிய அழகிய ஞாயிறே எனச் சொல்லும்படி அழகு மிகுதியாக, சிறந்த தவத்து நின்மலனின் மகள் இருக்கும் நாள்களில் ஒரு நாளில்.

O சண்பக மலரில் வண்டுகள் மொய்ப்பதில்லை.

கௌசிக மன்னன் உலா வருதல்

6. வீரம் குறைதலில்லாத மும்மத யானை மேல் இருந்து மாலையும் தோளும் மிகுந்து ஒளிர, மதிக்குடை தன் மேலே நிழற்ற மன்மதன் யானை மேல் வந்தான் என்று கூறுமாறு அழகிய பொன்னாலாகிய தேரைச் செலுத்துகின்ற வீதியில் கௌசிக மன்னன் உலா வந்தான்.

கௌசிக மன்னன் உலாவரல் சிறப்பு

7. வாத்தியங்கள் அலையை உடைய நெடிய கடல் என்று கூறும்படி எழுந்து ஒலிக்கவும் வருந்தும் இடையை உடைய மடந்தையர் பாடிக் கொண்டு உடன் செல்லவும் குதிரைகள் மேலேறி இளைய வீரர்கள் பக்கத்தில் அடுத்துச் செல்லவும் புயங்களில் தரித்த மாலைகள் விளங்கவும் விசும்புக்கு இறைவனாகிய தேவர்கோன் போல் (கௌசிகன்) வந்தான்.

உலவ வந்த மன்னனைக் கண்ட மங்கையர் மயங்கல்

8. பெருமை உடைய நீண்ட யானையின் மேல் நகரத்தில் வந்த மன்னனைக் காணுகின்ற மடந்தையர்- யாதும் உணராதவராயினர்; காமம் மிகுதலால் நாணம் இழந்தனர்; ஆடை இழந்தனர்; நல்லனவாகிய அணிகலன்களையும் இழந்தனர். ஆவி மாத்திரம் இழவாதவர்களாக உடன் போனார்கள்.

O மோகத்தின் விளைவுகள்.

வண்டுகளைப் பார்த்து அவர்கள் கூறுதல்

9. ''நல்ல மதத்தை ஒள்ளிய கன்னத்திடத்தில் நன்கு உண்ணும்படி போகும் வண்டுகளே! கொடிய யானையினது தாழ்ந்த காதுகளினூடே ''மெதுவாக நடந்துபோ, என்று

சொல்லுங்கள்!'' என்று சொல்லி வெற்றியும் கூர்மையும் உடைய வேல் போன்ற கண்களையுடைய மாதர் துயருற்றார்கள்.

மாதேவியைக் கௌசிகன் காணுதல்

10. கோதையர் (பெண்டிர்) காம மயலால் இவ்வாறு துன்புற, கொடிகள் தங்கிய மாளிகைகளுள்ள வீதியின் கண் வரும் வலிமையுள்ள மன்னன், இருவினை கடந்த மாதவன் ஆகிய நிருமலனின் ஒப்பற்ற மகளாகும் காதொடு மோதும் கண்களை உடைய மட மாதாகிய மாதேவியைக் கண்டான்.

கௌசிக மன்னன் தன் வசம் இழந்தான்

11. கண்டானோ இல்லையோ என்று உன்னுவதற்கு முன் கொடிய மன்மதன் கரும்பு வில்லை வளைத்து மலர்க்கணைகளைக் கையில் எடுத்துக் கொண்டான். விரைந்தோடி மன்னன் மேல் பொழிந்தான். உண்டோ இல்லையோ என்று ஐயுறுமாறு ஆவி தளர்ந்து யானையின் மேலே உலகாளும் மன்னவன் தன் வசமில்லாதவன் (மையலின் வசம்) ஆனான்.

இவள் யாரோ ? என்று எண்ணுதல்

12. ''கொங்கைப் பாரம் காரணமாகத் தாமரை மலரில் வாழ்ந்திருத்தல் இயலாமல் இங்கு இந்தப் பாரில் வந்த மலர்க்கண் எழில் திருமகளோ ? மங்கையாகக் கோலம் கொண்டு நிலத்தில் வந்த மின்னலோ ? அழகிய கையாகிய காந்தள் மலரில் பொன் வளையல் அணிந்த இவள் யாரோ அறியேன்.

கௌசிக மன்னன் நிலை தடுமாறல்

13. ''வஞ்சிக் கொடி போல்பவள் என் எதிரில் தோன்றிக் காம மயக்கம் தந்தாள். அதனால் நெஞ்சு தளர்ந்தேன். பெருமயக்கில் வீழ்ந்தேன். நிலை காண முடியவில்லை. அஞ்-சாதே என்று இப்போது வந்து தழுவாளாயின் காமன் கணையால் நெருப்பில் உற்ற பஞ்சு படும்பாடு யான் படுவேன்.''

அவள் யார் என அறிந்துவர ஒருவனை அனுப்புதல்

14. இவ்வாறு எண்ணமிட்டு வெந்தீயிற் பட்ட வெண்ணெ-யைப் போல் மன்னன் மனம் உருகிப் பக்கத்தில் தன்முன்

இருந்த ஒருவனை நோக்கித் "திருமகள் போல் வந்து அந்த வாசலில் நின்று புறப்பட்ட தேவ கன்னி போல்பவள் எவள் என்று நீ அறிந்துவா" என்று காம மேலிட்டுக் கூறினான்.

### எவ்வாறாயினும் இவளை அடைவேன் என்று மன்னன் குறித்தல்

15. அந்த ஏவலன் விரைவில் ஓடி அவளைப் பற்றி அறிந்து வந்து உரைக்க, சுருங்கிய மருங்குலை உடைய மங்கை இன்னாருடைய மகள் என்று, மிகுதியாக அதிகரித்த காமத் துன்பம் கொண்ட மன்னன் அறிந்து "எவ்வகையிலாவது இந்த அணங்கினைக் கூடுவேன்" என்று மனத்தில் எண்ணிப் புறப்பட்டு,

### ஆசிரியரும் பெண்டிரும்

16. அரண்மனையிற் போய் இருந்து; 'உயர்ஞான வழி காட்டும் தூயவராகிய ஆசிரியரும், விளக்கம் பொருந்திய செம்மையான அணி கலன்களை அணிந்த பெண்களும் வலிந்து வந்தால் இனிமை புரியார்; ஆகையினால் தூதின் மூலம் அம் மாதினை அணைவேன்' என்று உள்ளத்து எண்ணி,

### நிருமலனிடம் மாதர்களைத் தூது அனுப்பல்

17. வியனிலம் புரப்பவனாகிய மன்னவன் கௌசிகன், தூது வினையை நன்கு முடிக்க வல்ல அறிவின் மிக்க மாதரைத் தேர்ந்தெடுத்து, "நீதி வல்லவனாகிய நிருமலன் மகளை எம் மனைக்கு உரியளாகும் (மனைவியாகும்)படி உரைத்து வாருங்கள்" என்று ஏவினன்.

### பெண் கொடுக்க நிருமலன் மறுப்பு

18. "ஐய, அவ்வாறே செய்குவம்' எனப் புகன்று நிருமலன் வீட்டுக்குச் சென்று அவனது திருமுகத்தை நோக்கி உலகாளும் அரசன் இவ்வாறு கருதுகிறான் என்று அவனது உள்ளக் கருத்தைத் தெரிவித்தனர். அதனை ஏற்காது, "தூய மங்கையரே! எங்களுக்கு அது தகாது" என்று அவன் மறுத்துக் கூறினான்.

தானாக வந்த திருமகளைப் புறம் போக்கலாமா?

19. ''நும் மகள் வேந்தனுக்குச் சிறந்த மனைவியானால் அவ் வேந்தனைச் சார்ந்த வாழ்வனைத்தும் நுமக்கும் உரியனவாம் என அறிய மாட்டீரோ? வலிய வந்த ஒரு திருமகள் வருகையை வேண்டாம் என்று புறத்தே அனுப்பி விடும் மாந்தர் யாருளர்'' என்று மங்கையர் சொல்ல, அதற்கு விடையாகச் சொல்லுவான்:

இம்மைப் பயன் கருதித் தகாத இடத்தில் பெண் கொடுத்தல் தகாது எனல்

20. ''இப் பிறப்புக்கு உரிய பயனை நினைத்துத் தகாதவரிடத்தில் மகட் கொடைக்கு இசைந்த கொடியவர்கள் மறுபிறப்பில் ஆழ்ந்த நரகத்தில் விழுந்து அழுந்தி, தம்மை நோக்கி இரங்குவர்; ஒருவரும் இன்றியே சோர்வார்கள்.

தகாதது செய்து உயிர் வாழ்வது தகாது என்கிறான் நிருமலன்

21. ''தனக்குத் தகாதது செய்து உயிர் வாழ்வதினும் தாங்கத் தகாத தேகத்தை விடுதலே நன்மை என்று அறிந்தோர் சொல்வர். (இங்ஙனம் இருக்க) எங்களுக்கு அடாதது சொன்னீர்கள், மங்கையர்களே! இச் சொல் உங்களுக்கு அடாதது'' என்று நிருமலன் கூற அதற்கு மங்கையர் சொல்வர்;

O திருக்குறள் கருத்து.

அரசன் இரப்பது கூடாது என மங்கையர் கூறல்

22. ''உறையில் வாளொடு, விலங்குகள் திரியும் வனத்தில் விரைந்து சென்று வழிப் போக்கர்களை ஒரு பொருள் தருக என்று வேடன் இரத்தலுக்கு ஒப்பாகும், அரசன் தனது ஆளுகையில் வாழ்கின்ற ஒரு குடியிடத்தில் ஒரு பொருளை இரத்தல் என்று அறநூல் உணர்ந்தவனாகிய நீ இதை அறிந்திலை போலும், அந்தோ!''

O உவமையணி.

O வேலொடு நின்றான் இடுவென்றது போலும்
கோலொடு நின்றான் இரவு என்பது திருக்குறள்.

தன் மகளிடமே கேட்குமாறு நிருமலன் கூறல்

23. என்று வந்த மங்கையர் கூறலும், நிருமலன். "எங்கள் மணந்தங்கிய நீண்ட கூந்தலையுடைய மாதேவி அறிவு வல்லமையுடையவள். உங்கள் எண்ணத்தைச் சென்று அவளிடமே கூறுங்கள். அவள் மனமிசைந்து உரை செய்யின் சரி" (எனக்கும் அஃது உடன்பாடு தான்) என்று கூறினான். அதற்கு அவர்கள் மனம் மகிழ்ந்து,

மங்கையர் மாதேவியிடம் கூறுதல்

24. மாதேவியிடம் சென்று, "மன்மதனது வலிமை கெடுமாறு கொங்கையாகிய சிறந்த அரும்பினை உடைய பூங்கொடியே! நீ அருள் கூர்ந்து எங்கள் அரசனின் ஆருயிரைப் போகாது நிறுத்துவையாகில் அழகிய இடத்தை உடைய உலகத்தில் உயிர்கட்கெல்லாம் நீ அன்னை ஆதவை" என்று கூறினர்.

O மகளிர் திறமாகச் சொல்லும் முறை இனிதாக இருக்கிறது.

துறவு மேற்கொள்ள மாதேவி ஆலோசனை

25. என்று மாதர்கள் சொல்லவும், நிருமலன் பெற்ற மகள், என் தாய் ஆகிய மாதேவி, மன்னனால் வீட்டைத் துறந்து பற்று நீங்கிச் செல்வதாகிய ஒரு சூழ்ச்சியை எண்ணி, "பொன் (திருமகள்) போல்வீர்! அரசன் எனக்கு ஒரு சூளுரை தர இசைவானாகில் நீங்கள் உரைத்ததை நான் இயற்றுவேன்" என்று பகர்ந்தாள்.

மாதர்கள் வாக்குறுதி தந்தார்கள்

26. தூதராகச் சென்ற மாதர், பொற்கொடி போன்ற மாதேவி உரைத்த சொல்லை வைத்து, அவள் காதல் கொண்டாள் என்று மாறுபட எண்ணி, "மாதே! நினது பேரன்பு காரணமாக, எங்கள் மன்னன் நீ எது செய்யக் கூறுகிறாயோ அதனைச் செய்குவன்" என்று கூறி,

மாதரார் மன்னனிடம் சென்று உரைத்தலும் அவன் மாதேவியிடம் வருதலும்

27. மனக் களிப்போடு திரும்பி வந்து மாதர்கள் மன்னனிடத்தில் சொல்ல, வள்ளலாகிய மன்னன் மனமகிழ்ந்து, தெளிந்த

ஆரமுது போன்ற மாதேவி இருந்த இடத்திற்குச் சென்றான். இகழத்தக்க காமநோய் கொண்டவன் என்ன தான் செய்ய இசையான்?

O வேற்றுப் பொருள் வைப்பணி.

O எள்ளு காமநோய் கொண்டவன் என் செய இசையான்—அழகான தொடர்.

### தனக்கு அகப்படும் பெண் என்று அரசன் நினைத்தல்

28. வல்லி (கொடி) போன்றவளது கொங்கையைப் பொன் மலை என்று மதியாதவனாய், வீட்டிலுள்ள குடம் என்றே நினைத்தான். அவளது நெற்றியை வெண்பிறை என்று உணராதவனாய் வில்லென்று நினைத்தான். தனக்கு எளிதிற் கிடைக்கும் பெண்ணாகத் தீர்மானித்துச் சொல்லுவன்:

### அரசனிடம் வாக்குறுதி கேட்டல்

29. ''அருள் செய்து என்னை நீ காத்தற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்; அதை நான் செய்வன்'' என்று அரசன் உரைக்க, ஒரு பக்கமாக மாதேவி ஒதுங்கியிருந்து, ''மலை போன்ற தோள் உடையவனே! என்னை நீ வலியச் சேரா திருப்பதற்கு ஓர் உண்மைச் சொல் (உறுதிமொழி) தருவாயாக'' என்றனள்.

### அரசன் சூள் புகலத் தொடங்குதல்

30. ''கார்முகிலில் தோன்றிய மின்னற் கொடி போலும் சிற்றிடை கொண்டவளே! உனது உடன்பாடு இல்லாமல் உன்னை வலியப் புல்லேன் என்பதற்கு ஒரு சூள் உரைப்பேன், கேள்!'' என்று சிறுபுள்ளிகளும் கரிய கடாமும் கொண்ட களிற்றினை உடைய அரசன் புகலத் தொடங்கினான்:

O இன்னதை யான் இவ்வாறு செய்யாது ஒழியின் இன்ன (தாழ்) நிலைக்கு இலக்காவேன் ஆகுக என்று எடுத்துக் கொள்ளுவது வஞ்சினம் ஆகும். அம் மரபிற்கு ஏற்ப அரசன் சபதம் உரைக்கிறான்.

பாவச் செயல்கள் புரிவோர் (11)
வந்த விருந்திருக்கத் தனியாக உண்போன் முதலியோர்

O பாவங்கள் என்று அக்காலச் சமுதாயம்-கவிஞர்—கருதியவை வரும் செய்யுட்களில் உரைக்கப்படுகின்றன. கவிஞரின் ஒரு சிறிய ஆசாரக் கோவையாக இந்தப் பகுதி விளங்குகிறது.

31. ''தன்னிடத்தில் வந்த நல்ல விருந்தினர் இருக்கத் தன் அறையில் தனித்துக் காணாது உண்பானும், பந்தியினிடத்தில் உணவு வேறு தனியாகச் செய்து கொள்ளும் பாதகனும் தாய்தந்தை இருவரும் உணவு உண்ணாமற் செய்த கொடியோனும், நண்பகலில் பசி முதலியவற்றால் நொந்து வந்தவரை நோக்காமல் தான் மட்டும் உண்ணும் பாதகனும்,

விலக்கப்பட்ட உணவு உண்போன் முதலியோர்

32. ''பெரியோர்களால் விலக்கப்பட்ட உணவை உண்பவனும், இறை வழிபாடு புரியாமல் வந்து உண்பவனும், விலக்கப்பட்ட புலால் உண்ணச் செய்பவனும், நல்வினையால் தரப்பெற்ற பெருஞ் செல்வம் அடைந்தவர்களைக் கண்டு மனம் பொறாது அழுங்கி (வருந்தி) அவர்களது செல்வ முடிவின் கண் மனம் களிப்பவனும்.

கன்றுக்குப் பால் விடாமல் கறப்பவன் முதலியோர்

33. ''கன்று உண்ண விடாமல் ஆவின் பாலைக் கறந்து கொள்பவனும், செய்ந்நன்றி மறப்பவனும், நடுவுநிலைமையிற் கோணிப் பிழைபடுகின்றவனும், ஒன்றைக் கொன்று அவ் வுயிர் பதைப்பதைப் பார்க்கும் கொடியவனும், போர்க் களத்தில் தன் தலைவனை விட்டுவிட்டுத் தெரியாது ஓடிப் போகின்ற முழுமூடனும்.

அடைக்கலம் புகுந்தோரைக் காப்பாற்றாதான் முதலியோர்

34. ''அடைக்கலம் என வந்தவனைப் பாதுகாவாமல் துரத்தி விடுபவனும், கொடுக்கிறேன் என்று உறுதி உரைத்துப் பின் கொடாதவனும் ஈவது விலக்குபவனும், தீவினை முயற்சியில் உதவி செய்து நடப்பவனும், ஆராய்ந்து நட்புக் கொண்டபின் வஞ்சிப்பவனும்.

குரவர் உரை தவறும் கொடியோன் முதலியோர்

35. ''பெற்றோர் ஆசிரியர் ஆகிய குரவரின் சொல் கடந்து நடக்கும் கொடியவனும், துறவிகளின் வரவு கண்டு எழுந்து மதிப்பளிக்காத தீயவனும், அறிந்தான் போல் நடித்துக் கரவினில் மெய்யறிவு நூல் கற்கும் கயவனும், புதியராகி இரவு நேரத்தில் வந்த நல்லோர்க்கு இடம் கொடாது அகற்றுவானும்,

முன்னால் புகழ்ந்து பின்னால் நகைக்கும் தாழ்ந்தோன் முதலியோர்

36. ''ஒருவனுக்கு முன் அவனைப் புகழ்ந்து சொல்லி அவனில்லாத இடத்தில் நகைத்து எள்ளுபவனும், தன் பெரும் சுற்றத்தார் வறுமை மேலிட்டுத் தளர்வுறத் தான் மட்டும் இனிது வாழ்பவனும், மிக்க ஆசை கொண்டு ஒருவன் பாது காக்குமாறு கொடுத்த அரிய திரவியங்களை வஞ்சித்துக் கவர்கின்றவனும், துன்புறும் தொழிலைச் செய்ய வைத்து அதற்குத் தான் சொன்ன ஊதியத்தை இல்லை என்பவனும்,

ஒழுக்கமில்லாத மனைவியோடு வாழ்பவன் முதலியோர்

37. ''கற்பில்லாத மனைவியோடு கலந்திருப்பவனும் வேறொருவனின் அழகிய மனைவியைக் கூடுவதற்கு எண்ணு வோனும், சொற்பொருள் உணர்த்திய ஆசானை வணங்கு தற்கு வெட்கப்படுவோனும், விற்கத் தகாதனவற்றை விற்று உடம்பை வளர்த்து அழிகின்றவனும்,

வயல் முதலிய இடங்களில் மலசலம் கழிப்போன் முதலியோர்

38. ''நலம் மலிந்த வயலிலும் ஆற்றிலும் பூங்காவிலும் கோயிலிலும் சலமலம் கழிப்பவனும், (இயங்குதற்கான) ஒரே வழியை அடைப்பவனும். உரைத்த (உரிய) விலைக்குப் பிறழ்ந்து விற்கும் கொடிய வணிகனும், குடிகெட்ட தாழ்ந்த வனுக்குக் குற்றேவல் செய்து கூலி கொள்பவனும்,

உறவான காலத்து இரகசியத்தைப் பகையான காலத்தில் வெளியிடுவோன் முதலியோர்

39. ''உறவு கொண்டு தெரிந்த சொல்லை வெறுப்புப் பிறந்த காலத்துப் பிறரறியக் கூறுபவனும், பிறர் குற்றத்தையே

நாடிப் பிறரொடு மகிழ்ந்து பேசுபவனும், ஒழுங்கு கெட்ட கொடுஞ் சொல்லைச் சினம் நேர்ந்த காலைப் பேசுபவனும், அறிவு கெட்ட மனைவி சொல்லின் வழி நடக்கும் புத்தி கெட்டவனும்.

**நண்பரைப் பிரித்துக் கலகம் செய்ய வல்லன் முதலியோர்**

40. "நட்பாக இருப்பவர்களை வேறுபடுத்திக் கலகம் உண்டாக்க வல்லவனும், அறிவை வளர்க்கும் நூலில் இல்லாத பொருளைக் கூறுபவனும், ஒருவரது நல்லொழுக்கத்தைப் பொறாமை கொண்டு நகைத்து இகழ்பவனும், மெலிந்தவரிடத்து மிக்க சினத்தைக் காட்டுபவனும்,

**பிறர் பொருளை வைத்துப் புண்ணியம் செய்வோன் முதலியோர்**

41. "பிறர் பொருளை வைத்துத் தனக்குப் புண்ணியம் தேட முயல்பவனும், இம்மைச் சுகத்திற்காக மறுமைக்கு நன்மை தரும் வேலையை விடுகின்ற அறிவிலியும், தவத்தோரை இகழும் இயல்பினனும், தான் செய்கின்ற வினைகளில் பாவத்தையே பழகுபவனும்,

**மன்னவன் சூளுரை, மாதேவி உடன்பாடு**

42. "ஆகிய, மேல் உரைத்த கொடியவர்களில் நானும் ஒருவன் ஆவேன். இது உண்மை. நீ யாது சொல்கின்றாயோ அதனை நிறைவேற்றாமல் உன்னை நெருங்க மாட்டேன்" என்று மதனவேளும் விரும்பத் தக்க அழகினை உடைய கௌசிக ராசன் கூற, கருங்குவளை போன்ற விழிகளை உடைய மாதேவி கருத்து இசைந்து, "அவ்வாறு ஆயின் போவம் வா!" என்று சொன்னாள். அரசன் அது கேட்டு உவகை பூத்தான்.

**சிவிகையில் மாதேவி அரண்மனை அடைதல்**

43. அரசன் முன்னே அரண்மனைக்குச் சென்றான். பல்லக்கில் கில் ஏற்றி ஆயிழை மடந்தை நல்லார் அருகு சூழ்ந்து போக, வேல் போன்ற செவ்வரி படர்ந்த நெடுங்கண்களும் சிவந்த வாயும் திலக வாள் நுதலும் உடைய மாதேவி போனாள், அரசன் புகுந்த இடத்தில் அவளும் புகுந்தாள்.

தனியே இருந்த மாதேவியிடம் மன்னன் வேண்டுதல்

44. மடந்தை மாதேவியைத் தனியே கண்டு, நெருப்பைப் பொருந்திய அரக்குப் போல நெஞ்சு நெகிழ்ந்துருகிக் காம வேட்கை பொறுக்க முடியாத உள்ளத்தோடு, ''இளம் பூங் கொம்பே! கடத்தற்கு அரிய காமமாகிய கடலை யான் கடந்து கரையேறத் தனங்களாகிய குடங்களை எனக்குக் கொடுக்கத் திருவுளம் கொள்வாயாக!'' என்று மன்னவன் இறைஞ்ச,

யான் சொல்வதை நிறைவேற்றிய பின்னர் என்னோடு பேசுக என்று மாதேவி கூறல்

45. காவலனின் காமம் மிக்க கழிபடர் (மிகுதியாகப் படரும்) கிளவி (மொழி) கண்டு, பாவை மாதேவி புன்முறுவல் செய்து, ''நற்பண்பு என்னும் தொடரால் கட்டுண்டு அது தன்னை விட்டு நீங்காது நிற்கின்ற ஒரு களிறு போன்றவனே! யான் இடும் கட்டளையைச் செய்த பிறகு என்னோடு பேசுக'' என்றாள்.

சிவபூசை செய்தபின் என்னைப் பொருந்துதி என்று கூறல்

46. யான் செய்ய வேண்டுவது யாதோ, அதனை இயற்று வன் சொல்லுக'' என்று அரசன் உரைத்தான். அவன் உரைத்தலும், அழகிய வளையலை அணிந்தவள், 'அயன் மால் ஆகியோர் தேடத்தக்க ஒளிவடிவான சிவலிங்கத்தை நீ தூயவனாக உன் கையாகிய பீடத்தின்கண் மலர்களால் வழி பட்டுப் பின்பு என்னை அடைக'' என்றாள்.

O மாதேவியின் கடவுட் பற்று - சமய - உணர்வு - கருதத் தக்கது.

நீருண்ணப் போகும் கையைத் தடுத்தது போன்று இருந்தது மாதேவியின் கட்டளை

47. அளவில்லாத காமம் மேலிட, அதனால் இளமையாகிய தனங்கள் அழுந்தக் கைகளால் தழுவுவேன் என்று எழுந்த அரசனைத் தடுத்து அன்னம் போன்ற மாதேவி சொல்லியது பாலைவனத்தில் நீரை அள்ளி வாய்க்குக் கொண்டு போகும் அழகிய கையை ஓடிப் போய்ப் பிடித்துக் கொள்ளுதலை ஒக்கும்.

O உவமையணி.

அமண அரசன் உள்ளத்தில் சிவநேயம் வராது எனல்

48. அரும்பில் வாசனை உண்டாகுமானால், முளையில் விளைவு உண்டாகுமானால், குழந்தைப் பருவத்தில் மதன இன்பம் வருவதுண்டாகுமானால் சைவப் பகையோடு மருவி நின்ற அரசனது உள்ளத்தில், செலுத்தும் விடையை (காளையை) உடைய இறைவனை வழிபடும் ஒழுக்கமும் வந்து சேரும்.

O இல் பொருள்கள்.

உங்கள் இறைவனை வழிபடோம் என்று அரசன் கூற உன் தோள்களைத் தொடோம் என்று மாதேவி கூறல்

49. தான் சொன்ன உறுதிமொழியை நினைந்து மன்னன் இப்போது தீண்டாதவனாய், ''முப்புரம் சீறிய உங்கள் முதல்வன் பூசனை யாங்கள் எப்பொழுதும் செய்யத் தக்கது அன்று'' என்று கூற, அதற்கு மாதேவியானவள், ''உன் வலிமை பொருந்திய தோள்களும் யாங்கள் தொடத் தக்கன அல்ல'' எனப் புகன்றாள்.

அரசன் அடங்கி இருக்க, மாதேவி அவ்விடம் விட்டு அகல நினைத்தல்

50. மணம் விரியும் கூந்தலை உடைய மாதேவியின் வாய் மொழி மன்னவனின் கையையும் வாயையும் கட்டிவிட்டாற் போல அடங்கி, விறகில்லாத நெருப்பைப் போல் காமம் கெட்டுப் போக, விளங்கும் மணிகள் பதித்த தூண் போன்ற தோள்களை உடைய அரசன் வறிது (சும்மா) இருந்தான். நீண்ட இலை போன்ற கூர்மை பொருந்திய வேல் போன்ற கண்களை உடைய மாதேவி நீத்துப் (அரசனை, இல்லறத்தை) போக நினைந்து,

மாதேவி ஆடை அணிகளைக் களைந்து கூந்தலால் மூடப் பெறல்

51. துறவு என்னும் அரசன், நெஞ்சம் என்ற தொன்மை யான நகரைப் பிடித்துக் கொள்ள ஆசையாகிய அரச ஆணை

யெல்லாம் கெட்டு ஓடுதல் போல், பூண்கள் யாவற்றையும் ஆடையையும் அகற்றித் தன் கூந்தலை அவிழ்த்து மைக் குழலினால் மறையப்பெற்ற பொற்பாவை போல் உடல் முழுவதும் மறையும்படி விட்டுக் கொண்டாள்.

O உருவக உவமை அணிகள்.

மாளிகை விட்டு மறுகுக்கு வருதல்

52. பித்துற்றனளோ என்று மருண்டு மன்னவன் ஒன்றும் தோன்றாது இருக்க, தெளிவடைந்து உள்ளங்கையிற் கொண்ட சிவலிங்கத்தோடு, தான் நினைந்த மெய்ப் பொருள் அடைந்தது போன்று மகிழ்ச்சி பொங்க, மன்னனை நீங்கி, அருள் அடைந்து ஒழுகு கண்ணாள் ஆகிய மாதேவி அழகிய வீதி வழியே சென்றாள்.

வருந்திய தாய்தந்தையர்க்கு மாதேவி உரைத்தல்

53. தாய் தந்தையர் இச்செய்தி கேட்டு அரிய மகளுக்கு நேர்ந்தது என்னவோ என்று நினைத்து வந்து வருத்தமுற அவர்களை நோக்கி, ''நீங்கள் உங்கள் மகள் என்று மாழ்கி (மயங்கி) இன்னல் கொண்டு வருந்த வேண்டா. என்னை நான் அறியும் பொருட்டுத் தேடி, தனது பெரிய தண்ணளி (கருணை) செய்யும் சற்குருவை அடைவேன்''

நன்றே நினைத்தாள் என்று பெற்றோர் கருதுதல்

54. என்று கூறி அந்த மாதேவி அவர்களைப் பாராமல் அயலாரைப் போல அவர்களை விட்டு நீங்கிச் சென்றாள். நிருமலன் என்ற பெயருடைய புண்ணியனும் சுமதி என்பவளும் இவள் நினைந்தது நன்றே, நம்முடை மரபிற் கெல்லாம் புகழ் நிலைபெறும் என்று எண்ணித் தங்கள் பெயரை நிலை நிறுத்தினார்கள்.

கண்டோர் கண்ணீர்

55. அவளைக் கண்டவர்கள் எல்லாரும் உள்ளம் கரைந்துருக, கண்களில் நீர்மல்க, ''மிக்க வலிமையுடைய மன்னனுக்குப் பின்னே சிவிகை ஏறி அலர்ந்த தாமரைக் கோயிலில்

எழுந்தருளிய ஒள்ளிய திருமகள் போலச் சென்ற ஒள்ளிய வளையலை யணிந்த மாதேவி பேய்க் கோலம் கொண்டு இவ்விடத்துப் போகும் தன்மை எதனாலோ அறியேம்'' என்று கூறுவார்கள்.

பெற்றோர் எங்ஙனம் வருந்துவரோ என
நகரத்தார் கூறல்

56. ''மங்கையை இவ்வாறு கண்டோம், வயிறு எரிய நின்றோம், இவளைப் பெற்றோர் இங்கு என்ன பாடுபடு வார்களோ?'' என்று சொல்வார்கள். ''மங்கல வடிவம் கண்டு மகிழ்ந்த கண் இக் கோலத்தையும் கண்டு பொங்குறு துயரம் அடையச் செய்தது என்ன பாவமோ'' என்று சொல்லுவார்கள்.

மாதேவி குருவைத் தேடிச் செல்லுதல்

57. இங்ஙனம் நகரம் எல்லாம் இரங்க, மாதேவி யம்மை கன்னலும் அமுதும் தேனும் கசக்குமாறு பேரின்பம் நல்கும் தனக்குத் தானே நிகரான குருகேசனாகிய அல்லம தேவனைத் தேடி, மிக்க வெயில் சுடும்படிச் செல்பவர்கள் குளிர்ந்த நிழலை விரும்பிச் செல்வது போலச் சென்றாள்.

O உவமை

காடு மலை நகரமெல்லாம் தேடிச் செல்லுதல்

58. காமனை வென்ற வல்லியாகிய மாதேவி காடுகள் தோறும் அடைந்தும், மலைகள் தோறும் ஏறியும், கடிநகர்கள் தோறும் புகுந்தும், சோம்பலில்லா மனத்தில் அன்பு பெருகி வரக் கருணையால் எம் குடி முழுவதும் ஆட்கொள்ளும் ஆசிரி யனாகிய அல்லம தேவனைத் தேடுகின்றாள்.

O

# 11. கொக்கி தேவர் கதி

கதைக் குறிப்பு; கவிஞர் கூற்று

1. அருள் செய்யும் அல்லம தேவன், அநிமிடன் என்னும். பெயரையுடைய சிவ யோகியைத் தனது உண்மை வடிவுடன் கலந்துகொண்டு, தான் வழிபடுகின்ற அடியவர்களுடைய பிறப்புக்களை நீக்கி உலாவுகின்ற நிலைமையைத் தெரிந்து சொல்லுவாம்.

அல்லமர் பலவிடத்தும் திரிதல்

2. சிறப்புப் பொருந்திய அல்லம தேவன், சூல் கொண்ட முகிலின் வருகையை நினைத்துக் கொண்டிக்கிற மயிலைப் போலத் தன்னையே கருதிப் பரந்த நிலவுலகில் இருக்கின்ற அடியார்களை ஆட்கொள்ளும் ஒரு நினைவுடன் நடந்து உலாவும் நாள்களுள்...

போகும் வழியில் ஒரு பொழிலைப் பார்த்தல்

3. பொருந்திய ஒரு நாள், ஒரு திசையில், மிகுந்த அருளில் குன்று போல்பவனாகிய அல்லமன் ஒரு வேடம் (ஒப்பற்ற கோலம்) கொண்டு சென்றனன். ஓரிடத்தில் அவனுக்கு எதிரில் மணங் கமழும் மெல்லிய புதிய மலர்கள் மலிந்த பொழில் ஒன்று அவ் வழியில் அலங்காரமாகக் காணப்பட்டது.

அந்த நந்தனத்தின் சிறப்பு

4, மாலை யாமம் வைகறை விடியல் நண்பகல் என்னும் ஐந்து சிறுபொழுதுகளிலும், கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முது வேனில் என்னும் ஆறு பெரும் பொழுதுகளிலும் இதழ் விரிந்து தேன் சொரிகின்ற நறுமலர்கள் நிறைந்திருக்கும் அந்தப் பூம் பொழிலை ஒருவர் அடைவாராயின் தேவர் கோனின் வளமிக்க செல்வத்தை அடைய விரும்பார்.

O சிறுபொழுது ஐந்து, பெரும் பொழுது ஆறு என்ற கணக்கு

அதில் வரும் தென்றல்

5 நிலவுலகில் அரிய பல தவம் செய்து நொந்தவர்கள் வடக்கே உள்ள கயிலா மலையினைப் பொருந்த விரும்புதல்

மணமுள்ள மலர்கள் மிக்க இந்தப் பொழிலின் மணம் கலந்த தென்றற் காற்று வந்து வீசுதல் ஒன்றை எண்ணியே யாகும்.

அந்த நந்தனம் ஒரு சந்தை போன்றது

6. தேன் நிறைந்த பலவகை மலர்களைக் கண்டு கண்டு சென்று, உண்ணற்கு இயைந்த நல்ல தேனைக் கொள்வதற்காக அங்கு மிங்குமாகச் சுற்றும் எண்ணற்ற வண்டுக் கூட்டம் ஒலிக்கின்ற தன்மையினால் குளிர்ந்த அந்த நந்தனம் வண்டுகளின் சந்தை போன்று இருந்தது.

அதற்கு உரியவர் கொக்கி தேவர்

7. நறுமலர் நிறையும் அந்த நந்தனத்தைக் குறைவறக் காத்து வருபவன் கொக்கி தேவன் என்ற பெயர் உடையவன். அத்தகையன் அப்பொழுது அதற்கு இயைந்த திறமையுள்ள செய்கைகளைச் செய்து கொண்டிருந்தான்.

அவருக்கு மெய்ப்பொருள் உணர்த்த
அல்லமர் நினைத்தல்

8. அங்ஙனம் இருந்த கொக்கி தேவனுக்கு அருள் புரியக் கருதிய நெஞ்சத்துடன் சென்ற அல்லம தேவன் பார்த்து, இவன் தனது சிறிய தொழில்களை விட்டு நீங்க, அரிய மெய்ப் பொருளை உணர்த்துவேன் என்று அவனிடத்திற்குச் சென்று, ''ஐய! சரணம்! (வணக்கம்)'' என்றான்.

அல்லமரின் தொழில் பெயர் என்பவற்றைக் கொக்கி
தேவர் கேட்டல்

9, தன்னை எதிர்ப்பட்ட அல்லம தேவனை, தேன் தங்கும் மலர்ச் சோலையை உடைய கொக்கி தேவன் ''சரண் (வணக்கம்)'' எனத் தொழுது ''உனது தொழில் யாது? உன் மேனியின் பெயர் யாது? விளம்புக'' என்று கேட்டான். ஞான நல்விளக்கனைய அல்லம தேவன் அதற்கு உரைக்கத் தொடங்கினான்:

எந்த வேலையும் இல்லாதவன் என்று அல்லமர் கூறல்

10. ''அன்பர்களுடைய வீடுகள் தோறும் அன்பாகிய பிச்சையை ஏற்று. எத்தகைய தொழிலும் இல்லாது இருப்

பவன், என் பெயர் அல்லமன்'' என்று கூறி, பின் ''உத்தமனே, உன் பெயர் யாது?'' என்று கேட்கக் கொக்கி தேவன் தன் பெயரைத் தெரிவித்தான்.

தொழில் செய்யாதவன் சோறுண்ணும் பிணம் என்று கொக்கி தேவர் கூறல்

11. "அருமையாகிய குரு லிங்க சங்கமத்திற்காக மெய் வருந்திச் செய்யும் தொழில் இல்லாமல் வறிதே இருப்பவன் உணவு உண்ணும் பிணம் என்று கூறப்படும் மொழியினை நீ தெரிந்திலையோ'' என்று சொல்லத் தொடங்கினான்.

O குரு; ஞான ஆசிரியன். லிங்கம்: ஆன்மா, சங்கமம்; ஆன்மாவை உணர்ந்த மெய்யடியார்.

O நல்வினை புரியாமல் வறிது இருத்தல் அவம் என்பது மறைக் கருத்து.

உடம்பால் உயர்பயன் பெற வேண்டும் என்று கொக்கி தேவர் கூறல்

12. ''அடைவதற்கு அரிய மானிட உடம்பு தனக்குக் கிடைத்தது என்றால் அது கொண்டு, செய்தற்கு அரிய அறங்கள் பல செய்து துன்ப மிகுந்த பிறவியினின்று உய்தற்கு (பிழைத்தற்கு) ஒன்றுபடப் பொருந்தும் நிலையை அடைய முடியாமல் அல்லற் படுவோனது உடம்பு, பொற் கலத்தில் பெய்தற்கு உரிய பாலை நிலத்தின் வெடிப்பில் விட்டது போலும் என்று அறிஞர் கூறுவர்.

O உவமை யணி. அங்கணத்துள் உக்க அமிழ்து அற்று என்ற திருக்குறள் உவமையை இது நினைவுபடுத்துகிறது.

கடமை செய்யாதவர் மருளர் எனல்

13. ''மின்னலைப் போல் அழிந்துவிடக் கூடிய உடம்பைக் கொண்டு நல்வினைகள் செய்து அழியா உடம்பு எய்திப் பேரின்பத்தில் அமர்ந்திருப்பதற்கு உடப்பு வருந்தும் என்று எண்ணி அன்போடு அறம் செய்து இளைக்காமல் காலம் தவறாது நன்கு உண்டு வாளா இருக்கின்றவனைப் போல்

அறிவு திரிந்தோர் (மயங்கினோர்) எவரும் இல்லை'' என்று, தண் பூம்பொழில் வைத்துக் காக்கின்ற கொக்கி தேவன் கூறினான்.

**வினையினால் வீடுபேறு கிட்டாது என்கிறார் அல்லம தேவர்**

14. கொக்கி தேவன் உரைத்த மொழியை அல்லம தேவன் கேட்டுக் கைகொட்டிச் சிரித்து, ''நல்ல வினைகள் செய்து அழியா இன்பம் பெறுவானேல், வருத்தம் தரும் மும் மலங் களில் ஒன்றாகிய ஆணவத்தாலும் பொருத்தமுறு பேரின்பத்-தை நாம் அடையலாமே'' என்று (வேடிக்கையாக) கூறித் தொடங்கினார்.

O அறச் செயல்களால் (மட்டும்) வீடு பேற்றை அடைய முடியாது என்பதாம்.

**கொக்கி தேவரின் வினைக் கொள்கையை மறுத்துரைத்தல்**

15. ''மணத்தை உண்டாக்கும் பூம்பொழில் வைத்து, பிறவி யைக் கெடுக்க எண்ணும் கொள்கை உடையவனே! தான் செய்யும் நல்வினைகளால் ஒரே பிறவியில் பேரின்பம் சாரும் என்று கூறினாய். ஊனால் ஆகிய அவ் உடம்பு நீங்கவே அவ் வின்பமும் அவ் வுடலுடன் நீங்கிவிடும். அந்த உடம்பு ஒழியாமல் மோட்சத்தில் இருக்கும் என்றால் அது (உடம்பும் பயனும்) மாயா காரியம் அன்று ஆகும்.

O ஊனால் ஆகிய உடலும் அதன் தொடர்பாக வரும் இன்ப துன்பப் பேறும் மாயா காரியம் ஆகும். வினை இல்லாவிடில் உடலும் அதுபற்றி வரும் பயனும் இல்லை யாம். முத்தியில் மாயை இருக்க முடியா தல்லவா?

**இன்ப துன்பங்கள் மாறி வரும் எனல்**

16. ''இன்பம் மிகுதியாகத் தருகின்ற நல்வினையின் முடிவில் மிகுதியாக உடம்பினிடத்தில் துன்பத்தைத் தருகின்ற தீவினை உண்டாகும். அத் தீவினை முடிவில், முன் செய்த

நல்வினை தோன்றும். இங்ஙனம் ஆகிய நெறியால் இவ்விரண்டும் உலகின்கண் ஒள்ளிய பகற் காலமும் இராக் காலமும் போல இடைவிடாது மாறி மாறி வரும் என்று அறிஞர் கூறுவர்.

### விண்ணின்பம், பேரின்பம்

17. புறவுலகில் நல்வினைகள் பல செய்து, மலையைத் தோண்டி எலி பிடித்தாற் போல மிகச் சிறிய விண்ணின்பம் (தேவபோகம்; சுவர்க்க இன்பம்) அடைகின்றவனோ, வருந்தாமல் எல்லாச் செயல்களையும் விட்டு விட்டுப் பேரின்பம் (வீடு; முக்தி) அடையத் தக்கவனோ, இவ் இருவருள் மருளன் யார் பேசுக'' என்று அல்லமப் பெருமான் கூறினான்.

O பழமொழி

### உண்முகத்தால் சிவம் தோன்றும் எனல்

18. மெய் வாய் கண் மூக்கு செவி என்ற பொறிகளின் வழியே வெளியில் மனம் செல்லுமானால், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற புலன்களால் ஆகிய உலகமே தோன்றும். அகத்தே மனம் செறியுமானால் உயர் இன்ப மயமாகிய சிவமே விளங்கும். அவ்வாறு சிவம் தோன்ற அறிவின்கண் பரவிய விடயமாகிய உலகம் காணப்படாமல், பிறவித் துயர்க் கடல் கடந்து பேரின்பமாகிய கரையை அடைகுவர்'' என்றான் அல்லமப் பிரபு.

O புறச்செயலால் மனம் ஐம்பொறி வழியாக உலகமே தோன்றும். அகச் செய்கையாகிய மனம் ஒருங்கு படலால் சிவம் தோன்றும்; சிவமே பேரின்ப நிலையம்.

### அல்லமர் உரைப்படி கொக்கி தேவர் மண்ணைத் தோண்டுதல்

19. கண்ணாற் காணும்படி காண்பித்து இவனது கொள்கையைத் திருத்துவேம் என்று எண்ணிக் கருணைக் கடல் போன்ற அல்லமன் ''இவ்விடத்தில் நீ அகழ்க'' எனக் கூற ''அடைவதற்கு அரிய பெருமை உடையோனே! அவ்வாறே செய்குவன்'' என்று சொல்லி, இசையாற் சிறந்த பொறி வண்டுகள் பாடும் அழகிய மலர்ப் பொழிலை உடையவனாகிய கொக்கி தேவன், அகழத் தொடங்கினான்.

நிலத்தின் உள்ளே சிவயோகி

20. தோண்டவே, செப்பொன்னால் ஆகிய சிகரம் ஒன்று காணப்பட்டது. செய்யுளுக்கு உரை கண்டாற் போல விரைவில் தோண்டிப் புகுந்து அதனுள், நிலத்தைத் தோண்டிய வறியவன் ஒருவன் கண்ட புதையல் போல அங்கே, புறத்தே புலன்கள் நாட்டம் இல்லாமல் தேகம் சிறிதும் அசையாமலும் தன் வசம் இல்லாமலும் இருக்கும் சிவயோகியைக் கண்டார்.

O நிலனை அகழ்ந்து, செய்யுட் பொருள் போலவும் மிடியன் கண்ட பொருள் போலவும் சிவயோகியைக் கண்டனர், உவமையணி.

செயலில்லாத செயலை உடைய சிவயோகி

21. உள்ளங் கையில் உள்ள சிவலிங்கத்தின் மேல் கண்களை வைத்துக் கொண்டு, எலும்பையன்றி உடம்பில் தசை சற்றுமின்றி யோகத் துயிலில் மேவும் புனிதனாகிய அநிமிட யோகியைப் பார்த்து, நற்செயலும் இல்லாத செய்கையுடைய சிவயோகியைக் கண்டனையோ என்று, ஐயம் கொண்ட அந்தக் கொக்கி தேவன் அறிய, உயர் அல்லம தேவன் அறிவித்து.

கொக்கி தேவரின் ஆனந்தக் கண்ணீர்

22. கடலில் தவறி விழுந்து துன்பத்தை அனுபவிப்பவர்களுக்குக் கலம் ஒன்று பக்கத்தில் வந்தாற் போல, சிதைவின்றிச் சிறந்த ஞான ஆசிரியன் கிடைத்தமை ஆ! ஆ! அற்புதம் என்று உடல் நடுங்கவும் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகவும் நெஞ்சம் உருகிக் கொக்கி தேவன் அல்லமனை, இடையில் நீங்காத மரபின் குரு சீட நெறியை விளக்க வேண்டி உளம் கொண்டு வணங்கினன்.

O உவமை.

சிவயோகியின் உள்ளங்கைச் சிவலிங்கம்
அல்லமரை அடைதல்

23. காந்தம் கண்ட இரும்பு போல, கண்ட பொழுதே அநிமிடன் என்ற யோகியினது உள்ளங்கை ஏந்தி இருந்த சிவலிங்கம் எம்பெருமானாகிய அல்லமனின் அங்கையாகிய தாமரை மலரை அடைந்தது. அப்பொழுதே அந்தப் புனிதன்

அறிமிடனின் சீவ கலை (உயிர்)யும் வந்து அங்கிருந்த சிவலிங்கத்தோடே அல்லம தேவன்பால் வந்து சேர்ந்தது.

### கொக்கி தேவரின் போற்றியுரை

24. இட்ட லிங்கமானது வந்து சேரப் பெற்ற அல்லம தேவனையும், அந்தத் தூய சிவலிங்கத்துடன் எழுந்தருளியிருந்த ஞானக் குரவனையும், மணமலர்ப் பூங்கா வைத்துக் காக்கும் கொக்கி தேவன் கண்டு மகிழ்வுற்று இவ் விருவரது பெருமையை அழகிய மறை உணர்ந்த நான்முகனும் சொல்லற்கு அரிது என்று சொல்லுவான்.

### அல்லமரைப் போற்றுதல்

25. "சிவ லிங்க நாட்டத்தில் இருந்த ஞானயோகியை உன்னாற் காணப் பெற்றேன். முன்னாளைய கருமம் யாவையும் முடித்தவன் ஆனேன். பெருந்தகையோனே! உன்னாற் செய்யப்படும் உதவிக்கு என்னால் கைம்மாறாகச் செய்வது ஒன்று உள்ளதோ? மேகத்துக்குக் கைம்மாறு யாரால் செய்ய முடியும்?

O கைம்மாறு வேண்டா கடப்பாடு...என்ற திருக்குறள் கருத்து.

### மெய்ப் பொருள் அறிந்தேன் எனல்

26. "ஐயனே! உன்னையும் உன் கையினை அடைந்த சிவ லிங்கத்தினையும் குற்றமற்ற ஞான ஆசிரியனையும் இன்று, ஒரு பொருள் என்று அறிந்தேன்" என்று செந்தாமரை போன்ற திருவடியில் சென்று தொழுது, அல்லமனாகிய மெய்யனுக்கு எதிர் நின்று, நந்தவனங் காப்போனாகிய கொக்கி தேவன் மிக்க அன்பினால் விளம்புவான் :

### அடியார்க்கெல்லாம் மெய்யறிவு உணர்த்தக் கொக்கி தேவர் வேண்டுதல்

27. தன்னைப் போன்றே உலகிலுள்ள மக்கள் எல்லாரும் உரிய பேரின்பம் அடைய நினைத்த கொக்கி தேவன், "என்னை எனக்கு விளக்கியது போல இந்த இட்ட லிங்கம் அகத்திலும் புறத்திலும் நிலையுற்றிருக்கும் நெறியை, நின் மலர்த்தாள் பரவும் அடியார்க்கு எடுத்து உரைத்து, இயங்

கியல் உயிர்களைப் போலப் பாரெங்கும் சுற்றி இயங்குவாய்'' என்று வணங்கினான்.

### கொக்கி தேவரை அல்லமர் புகழ்ந்து அருளல்

28. கொக்கி தேவன் தாழ்ந்து வேண்டிய மொழி கொண்டு, விளங்கும் அல்லம தேவன் தாம் பெற்ற பேறனைத்தும், மிக்க உலகம் பெறுக என வேண்டிக் கொள்ளுதல், தகுந்த பெரு மக்கட்கு இயல்பு என்று புகழ்ந்து சிவந்த அழகிய தன் தாமரைப் பூங்கைகளால் அவனைப் பிடித்துத் தழுவி அருள் செய்தான்.

O யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்ற திரு மந்திர வாக்கு இங்கு நினைத்தற்கு உரியது.

### கொக்கி தேவரின் யோக நிலை

29. உமையவளுக்கு இடம் தந்து அருளிய சிவனது மலர்த் தாளுக்கு இடுகின்ற பூக்களைக் கொண்ட வனம் செய்து நன்றாகக் காப்பாற்றி வந்த தவத்தின் காரணமாக மெய்ப் பொருளாகிய ஞான ஆசிரியனைக் கண்ணுற்ற கொக்கி தேவன், அங்கையிலுள்ள இட்ட லிங்கத்தில் பொருந்த வைத்த பார்வையும் நெஞ்சகமும் நிலைபெற்றிருக்கச் சிவயோகத்தினையே அடைந்து அங்கு ஓவியம் போல இருந்தான்.

O தான் செய்த கரும யோகத்தால் கொக்கி தேவர் அல்லமரைக் கண்டு அருள் பெறும் பேறு பெற்றார். கரும யோகம் ஒரு சாதனம்; ஆனால் ஞானமே முடிவு என்பது கருதத் தக்கது.

### தென்றல் போன்று அல்லமர் உலவுதல்

30. அடியார் வேண்டியதைச் செய்யும் அல்லமப் பெருமான் நீண்ட கண்களில் அருள் பெருக, தூய இட்ட லிங்கத்தைக் கையில் ஏந்திக் கொண்டு நிலவுலகில் அரிய (நிட் காமிய) தவம் செய்யும் அன்பர்கள் உள்ளத்தில் பேரின்பம் பெருக, பருத்த அடியை உடைய இளைய மாமரங்கள் தழைக்குமாறு வருகின்ற தென்றற் காற்றைப் போல் சுற்றுகின்றான்.

O உவமை O

# 12. முத்தாயி அம்மை கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. அசகண்ணன் என்பவனைக் (உடன் பிறந்தானை) கண்டிலேன் என்று அஞர் (மிக்க துன்பம்) கொண்டு வாடும் கொடியிடை மாது முத்தாயி அம்மையின் துயர் ஒழிந்து போதற்கு விரைவாக வந்து அல்லமன் உரைத்த தன்மையை விளம்புவாம்.

துயர் துடைக்கும் அல்லமன் உலா

2. திருநீறு அணிந்து எழில் பொங்கும் அல்லம தேவன் அடியார்களுடைய அகத் துயரினை, உடை இழந்த ஒருவனது கைபோல விரைவிற் சென்று, களைந்து அருள் செய்து வரும் நாளில்...

O 'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு' என்ற திருக்குறள் கருத்து அழகுற அமைந்துள்ளது.

அசகண்ணன் பரவெளியானான் என்பது

3. தனது பந்தங்களை அறுத்த அசகண்ணன் என்பவன், மறைத்துக் கொண்டிருந்த மிக்க சிவபக்தியைப் புறத்து அறிந்த பொழுது உடம்பினை வெறுத்து அறிவு வெளியாக (சிதாகாசமாக) வடிவம் கொண்டான் என்று அறிந்தோர் கூறுவர்.

உடன் பிறந்தான் பிரிவுக்கு முத்தாயி அம்மை வருந்துதல்

4. தூயோன் அசகண்ணன் உடம்பு உபாதி நீங்கிப் பரிபூரண வடிவாகி விட்ட தன்மையை உணராதவளாக அவன் உயிர் அழிந்தான் என்று உள்ளம் தளர்ந்து அசகண்ணனின் உடன்பிறந்தாளாகிய முத்தாயி அம்மை பெரிதும் வருந்தி,

O உபாதி; தடை, கட்டு.

முத்தாயி அம்மை அல்லமரைக் காணல்

5. புலம்பி நைந்திருக்கின்ற அப்போது கையிலே சிவலிங்கம் திகழ, நன்மையே வடிவமாகக் கொண்ட அண்ணல்

அல்லம தேவன் அவ்விடம் வந்தடைந்தான். கலக்கத்தோடு இருந்த காரிகை முத்தாயி அம்மை அவனைக் கண்டாள்.

### அல்லமர் முன் முத்தாயி அம்மை அழுதல்

6. அசகண்ணனைக் காணாதவளாகத் தான் கொண்ட துன்பம் குறைய வாய்விட்டழுது அல்லமனது பாத தாமரை மலர்களில் வீழ்ந்து மிக்க கண்ணீர் பொழிந்து அரற்றினாள்.

### 'துன்பம் போக்க வந்தாய்' எனல்

7. பாவியாகிய என் முகத்தைப் பார்க்கக் கூடாது என, உயிர் போன்ற அசகண்ணன் தனது உடலை விட்டு அகன்று, அதனால் என்னை வதை செய்கின்ற நோயெல்லாம் இவ்விடத்து ஒழித்தற் பொருட்டு அருளினால் மேவினாய் என்று சொல்லி அல்லமனை மீண்டும் வணங்கினாள்.

### உணராமல் வருந்துதல் பொருந்தாது எனல்

8. வணங்கும் முத்தாயி அம்மையின் மலர் முகத்தை நோக்கி ''அணங்கு போல்பவளே! நல்ல அசகணனின் தன்மையை உணர்ந்திடாமல் உளைதல் அறிவுடையார்க்குப் பொருந்தாது' என்று எந்தை அல்லமன் இயம்புவான்.

### அசகணன் அழிவற்றவன் எனல்

9. "வந்து போகாத ஆகாயம் (எக்காலத்தும் உள்ள ஆகாயம்) போய்விட்டது என்று ஓயாமல் வருந்துபவர்கள் போல், நீ, என்றும் அழிவில்லாத அசகணன் அழிந்தனன் என்று விழியினால் மிக்க வெள்ளம் பெருகச் செய்தாய்.

O அல்லமர் உரைக்கும் மெய்ப்பொருளுரைகள் ஆழ்ந்து நினைதற்கு உரியன.

### தன்னை அறிந்தவன் உடம்பை மதியான் எனல்

10. உண்மை அறிவு ஆனந்த வடிவாக (சச்சிதானந்த சொரூபமாக) இருக்கும், சங்கரனாகவே தன்னை அறிந்து அச்சம் துறந்தவன், துச்சமாம் இந்தத் தோல்மலி யாக்கையை (அதுவே நான் என்று) விரும்பான்.

எழுவகைத் தோற்ற பேதமும் ஆண்பெண் பேதமும் அவன் கருதான் என்பதாம்.

உண்டு ஒழிந்த இலை போன்றது

11. ''அழகிய இப்புவியில் ஒழிவில்லாத அருளே உருவாகக் கொண்டு ஆட்கொள்ள வந்த குருவின் அனுக்கிரகத்தால் தன்னைத் தான் உள்ளவாறு கண்ட மெய்யான தவத்தோன் தனது யாக்கையை, சாப்பிட்ட நீண்ட இலைக்கு ஒப்பாக விடுப்பான்.

O உவமை

தன்னை அறிந்தவன் உடலை நீத்தல்

12. ''நிலவுலகில் எழுந்தருளிய உயர் குரவனால் அறியாமை ஐயம் முதலிய தடைகள் நீங்கும்படி தன்னைத் தானாக உணர்ந்தவன் (பன்னாட் சாதனத்தின் பின்) உடலை விடும் பொழுது, ஒவ்வொரு மண்குடம் உடைந்த போதுள்ள ஆகாயத்தை நிகர்ப்பான்.

O தோற்றமும் அழிவும் குடத்துக்கு அன்றி ஆகாயத்துக்கு அன்று, அவ்வாறே அவை இரண்டும் (தோற்றமும் அழிவும்) உடம்புக்கு அன்றி ஆன்மாவுக்கு அல்ல என்பதாம்.

தன்னை உணர்ந்தோர் உடம்பின் வேறாக இருப்பர்

13. ''பந்தத்தை விளைக்கும் பிணிப்புகள் அனைத்தும் நீங்குமாறு, மேன்மேலும் வளர்கின்ற இயல்புடைய சிவ ஞானி, மானிட வினை அழிதற் பொருட்டுத் தான் எய்திய உடம்பு, தீப்பட்டு எரிந்த ஆடை போல் எவர்க்கும் கண்ணுக்குக் காணப்படும்.

அவர்கட்கு உறவும் பகையும் இல்லை

14. ''பாவையே! பொருளெல்லாம் சிவ வடிவாகக் காணலாகும் அறிவுக் கண் உடையவனுக்கு ஒழிதலில்லாத உறவு பகை என்கின்ற எண்ணம் சற்றும் இல்லை.

உடம்பே தாம் என்று நினைப்பவர் தன்மை

15. ''உடம்பே தாம் என்று இருந்து அதனால் கெடுகின்றவர்கள், ஞானிகளின் உண்மை நிலையை உணராதவராக, கெடாத அறிவடிவமாகி உடம்பொடு கூடி இருந்தும் அவ்

வுடம்பின் தாக்கு அற்று இருக்கும் அந்த ஞானிகளையும் அறி வற்ற தங்களைப் போல் காண்பார்கள்.

### புறப் பார்வையும் அகப் பார்வையும்

16. ஆன்மா (இறைவன்) நாடகக் கோலம் கொண்டு நடிக்கும் நடிப்பைப் பார்த்து உலகிலுள்ளார் அதனை உண்மை என்று எண்ணமாட்டார்கள். மாதவத்தார்களோ, யாவரும் துதிக்கும் ஞானியின் யாக்கை நடிப்பினை அனுபவத்தால் உணர்ந்து, உண்மை என்று எண்ண மாட்டார்கள்.

O உலகுள்ளார், எழுவகைத் தோற்ற உடல்களை ஆன்மா வினது நாடகக் கோலம் எனவும் அவற்றின் செயல்களை நடிப்பு எனவும் அறியார். அது போல மாதவர்கள் ஞானி யினது யாக்கையைக் கோலம் எனவும் செயல்முறையை நடிப்பு எனவும் உணர்வர், உண்மை என்று அவற்றைக் கருதார். ஆக, உலகுள்ளார்க்குப் புறவிழிப் பார்வையும் மாதவர்க்கு உண்முகப் பார்வையும் உண்டு என்பது பெறப் படும்.

O உனக்கு உள்முக நாட்டம் இன்மையால் வருந்துகின் றனை என்று முத்தாயி அம்மையைக் குறிப்பினால் உணர்த்து கிறார்.

O தத்துவ உண்மைகள்.

### அசகணனது தன்மையை அறியாது வருந்தினை எனல்

17. "தாயே! அசகணன் தன்மையை அறியாமல் அவன் இறந்தான் என்று நீ அழுகின்றாய். இந்த மூட அறிவை விட்டுவிடு'' என்று அண்ணல் அல்லமன் சொல்ல, பூரண ஞானத்தை உடைய முத்தாயி அம்மை சொல்லுவாள்:

### எனது அறியாமையைப் பொறுக்க என்றாள் முத்தாயி

18. ''பெரும! பாம்பின் காலைப் பாம்பன்றி வேறு அறி பவர் தரையில் இல்லை, அசகணன் தன்மையை நீ அறி வாய் அல்லாமல் சிறியவளாகிய யான் அறிவனோ? யான் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்வாய்'' என்று இரந்து கூறி,

O பழமொழி

அல்லமர் வருகை, தன் முன்னோர் செய்த தவப்பயன் எனல்

19. ''நொண்டி (பங்கன்) இருந்த இடத்துக்குக் கங்கையே வந்த கணக்காக (போல) என்னிடத்து இங்கு நீ வந்தது எம் குடியினர் செய்த தவத்தின் பயனே யாகும்.

O இல் பொருளுவமையணி.

முத்தாயி அம்மை வேண்டுதல்

20. ''எந்தையே! வழிபாடு செய்து போற்றி முன் நின்று, பந்தம் அறுத்த நிலையை யான் அடைய, எனக்கு உண்மை நிலை புகட்டிக் காப்பாயாக'' என்று முத்தாயி அம்மை வேண்டினள்.

அல்லமரின் பாராட்டு

21. குருவடிவான அல்லம தேவன் மகிழ்ந்து பிறவித் தளை அகன்று மேலாய பொருளைக் காண வேண்டும் என்னும் நேசம் அடைந்து விட்டாய் உனக்கு நிகரானவரை உலகத்தில் பார்க்கவில்லை.

புறச்செயல்களால் வீடுபேறு கிட்டாது எனல்

22. ''ஒரு கோடிப் பிறப்பு பிறந்து பிறந்து புற வகையில் சிவ பூசனை முதலாய புண்ணியச் செயல்களைச் செய்தாலும் பொய்யான மாயை காரணமாகத் தன் உண்மை நிலையை மறக்கத் தக்க ஆணவம் என்னும் வலிய இருள் இல்லாமல் சிறப்பாக அடையத் தக்க வீடுபேறு அடைவார்களோ?

O ஆணவ நசிப்பினால் உறுவது முத்தி. புறக் கருமங்கள் ஆணவ முனைப்பை உண்டாக்கும் இயல்பின. ஆகலின் புறக் கருமங்கள் செய்து முத்தி பெறல் இயலாது என்பதாம். அரியதோர் உண்மை இது.

நெய்யை ஊற்றி நெருப்பை அவிக்க முடியாது

23. ''இறப்போடு பிறப்பையும் ஒழிப்போம் என்று எண்ணற்ற வெளிப்புறச் செயல்களில் (சிவபூசனை முதலியவற்றில்) செலுத்தி விரியச் செய்தல் எரிகின்ற நெருப்பை நெய்யை ஊற்றி அவிக்க நினைப்பதை ஒக்கும்.

O உவமை. ஞானம் இன்றி முத்தி இல்லை என்பதாம்.

கட்டுதல் வீடு

24. ''மட்டுப்படாது ஓடும் மனத்தைச் சலனப் படாமல் (சலியாது) நிறுத்தித் தன்வயப் படுமாறு கட்டுதல் தான் வீடு பேறு ஆகும். அதன் போக்கில் (மனத்தை) விட்டு விடுதல் கட்டு ஆகாது'' என்று பொருந்திய பண்பின் உரைத்து, அல்லமன் என்னும் பெயரை உடையவன், அன்பர்க்கு அன்பன், அந்த முத்தாயி அம்மைக்கு அருள் செய்தான்.

O 'மனத்தை நிறுத்திக் கட்டுதல் வீடு' என்பது தெளிவான, அருமையான, முத்திக்கான வரைவிலக்கணம் ஆகும்.

முத்தாயி அம்மைக்கு வீடுபேறு அளித்தல்

25. வறிய குப்பையைச் சீய்த்துக் கோழியானது ஒளி பொங்கும் முத்தைக் கொடுத்தது போல முத்தாயி அம்மைக் குத் தத்துவத் தொகுதி அனைத்தையும் இது நீ இல்லை, அது நீ அல்லை என்று ஆராய்ச்சியால் தள்ளி அவற்றுக்கு வேறு விடையாக மெய்யான தன் உண்மை நிலையைப் பெறுதற்கு அல்லமன் அருள் புரிந்தான்.

O உவமை.

O அல்லை அல்லை என்பதனை 'நேதி நேதி' என்ப.

முத்தாயி அம்மை அல்லமரைப் புகழ்தல்

25. "வீடுபேற்றை விரும்பி உடம்பினை வெறுத்தேனல் லேன். திருவடி (தீட்சை) தரும் ஒள்ளிய அறிவாசிரியனை எங்கும் தேடி அலைந்தேனில்லை. இங்ஙனமாய நான் உய்யு மாறு என்னை ஒரு பொருளாகத் தேடி வந்து அருள் செய்தனை'' என்று,

முத்தாயி அம்மை பேரின்பம் அடைதல்

26. அல்லமதேவன் என்கின்ற அருட்குரவன் திருவடிக ளைத் தழுவி வணங்கிப் பொற்கொடி போன்ற முத்தாயி அம்மை பிறவித் துன்பம் அகன்று சிதம்பரம் எனப்படும் மேலான பரவெளியாகத் தான் அமைந்து அளவு கடந்த பேரின்ப நிலையினள் ஆனாள். O

# 13. சித்த ராமையர் கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. அழகிய சித்த ராமன் என்பவனிடத்தில் போகிய அண்ணல் அல்லமன் சொல்லிய மேலாய நிலையைச் சொல்லுவாம்.

அல்லமர் இயல்பு

2. (பிறவித்) துன்பம் களைந்து மெய்யறிவும் பேரின்பமும் உணர்த்துபவன் எனப்பட்டவன் அல்லம தேவன்.

சித்த ராமரின் ஊருக்கு அல்லமர் செல்லுதல்

3. கரும யோகமும் கிரியை நெறியும் கடைப்பிடித்துச் சித்த ராமன் வாழும் புரியை (சொன்னலா புரத்தை) அல்லம தேவன் மேவினான்.

O சித்த ராமர், வினைச் சித்தராக இருந்தார் அவர் ஞான யோகி அல்லர் என்பது குறிப்பு.

சித்த ராமரின் ஆட்கள் செய்யும் பணிகள்

4. குளம் கோவில் பூம்பொழில் எனச் சித்த ராமனாரின் ஏவலாளர் செய்யும் பணிகள் ஒழிவில்லாமையைப்

அவற்றைப் பார்த்த அல்லமரின் நினைப்பு

5. பார்த்த அண்ணல் அல்லமன், முதிர்ந்த சித்த ராமன் கற்றறிந்த வேடிக்கையன் என்று நினைத்து,

சித்த ராமருக்கு நல்லறிவு இல்லை எனல்

6. பேரறிவு என்பது இத்தகையோன் சார்ந்து இருந்த ஊரிலும் இல்லை என்று மிகவும் இகழ்ந்து,

சித்த ராமையரின் நிலை இத் தகையது எனல்

7. இவ்வாழ்வைத் துறந்து இந்தத் திருப்பணித் தொல்லைகளை அடைந்தான். அதனால் நல்ல பசும் பொன்னால் ஆகிய விலங்கை இதனால் விரும்பினான்.

O இல்லறமாகிய இரும்பு விலங்கை விடுத்தவன் துறவறமாகிய தூய நிலையில் ஞான நெறியாகிய விடுதலையை வேட்காமல் கருமமாகிய பொன் விலங்கை விரும்பி மாட்டிக் கொண்டது போன்ற நிலை சித்த ராமருடையது என்பதாம்.

குளம் தோண்டுவோரிடம் அல்லமர் பேசுதல்

8. இவ்வாறு நினைந்து, நன்றாகக் குளம் பொருந்த அகழ்கின்றவர்களின் இடத்தில் சென்று இதனைச் சொல்லு வான்:

சித்த ராமரின் நோக்கம் யாது என்று கேட்டல்

9 "ஒட்ட ராமன் உள்ளத்தில் உள்ள இட்டம் யாது? நெல் லைக் குத்தி வருகின்ற உமியைக் குத்துதல் போல் இந்தத் தொழிலைத் தடங்கல் இன்றி முயல்கின்றனன்."

O குளம் தோண்டுதல் சாலை அமைத்தல் முதலிய வேலை களைச் செய்வோர் ஒட்டர், (ஒட்டரர்) எனப்படுவோர் அவர்களில் ஒருவராக ஆக்கி ஒட்ட ராமன் என்று சித்த ராமரைச் சுட்டுவது இகழ்ச்சிக் குறிப்பு.

பயனற்ற தொழிலில் உங்களை விட்டது எதனால் எனல்

10. பிறவித் துயரைப் போக்க வந்த அல்லமன், "விழலுக்கு நீர் பாய்ச்ச அனுப்புவது போல வேலைகளுக்குள் இளைப் பை உண்டாக்கக் கூடிய வேலை செய்ய உங்களை ஏவியது என்ன காரணத்தால்?" என்றான்.

தொழிலாளர்கள் வருத்தம் அடைதல்

11 அமைதி வடிவான அல்லம தேவன் ஓதிய இழிவான சொற்கள், நெருப்பில் காய வைத்த வேல் இரு காதிலும் புகுந்தது போன்று புகுந்தன. பணி செய்த தொழிலாளர் வருத்தம் உற்றனர்.

O உவமை.

ஒட்டர்கள் அல்லமரை இகழ்தல்

12. "அறத்தை அழித்தாய். அதற்கு மேலும் முறைமை கெடக் குரு நிந்தனை உண்டாக மொழிந்தாய் பித்தனே!" என்று ஒட்டலர்கள் (ஒட்டர்கள்) மிகச் சீறினார்கள்.

சித்த ராமரை ஒட்டன் என்றது தகாது எனல்

13. "உம்பரும் (தேவரும்) சிறந்தவன் என்று மதிக்கும் சித் தனை ஒட்டன் என்றனை, துட்டனே!" என்று, வெட்டப் பெறும் குளத்தில் இருந்தோர் முகம் சுளித்தனர்.

அல்லமர் அருற்றக் காரணம் உரைத்தல்

14. "தடாகமானது உண்மையில் அதனைத் தோண்டுவோர்களின் தொழிலே தவிர சித்தர்களின் செயலாக ஒரு சிறிதும் இல்லை. ஆகவே அறிவில்லாதோரே! உங்கள் குரவனை உங்களைக் காட்டிலும் உலகில் உத்தமமான ஒட்டன் (உயர்தர ஒட்டன்) என்று அழைப்போம்" என்றான்.

புண்ணியரும் நரகரும்; ஒட்டர்கள் உரைத்தல்

15. "நல்லோனாக நடந்து உலகத்தில் நிலைநிற்கும் நல்லறம் விரும்பிச் செய்கிறவனைத் தேவன் என்று புகழ்ந்தவர்கள் புண்ணியர்கள்; பொறாமையால் இழித்து இகழ்ந்தவர்கள் நரகர்கள் என்று நல்லோர் உரைப்பர்.

அறவோரின் உறவு உனக்கு இல்லை என ஒட்டர்கள் கூறுதல்

16. "கொடுந்தொழில் புரிவோரை விட்டு விலகித் தூய நல்ல அறவினை புரிவோரை அறிந்து அவர்களோடு நீ உறவு கொண்டிருக்கவில்லை. அறத்தினையும் பழியையும் ஒன்றாகக் கருதி அறநெறியைத் துறக்கும் தன்மை உடையையாய் இருக்கின்றாய்" என்று ஒட்டர்கள் சொன்னார்கள்.

நீங்கள் என்னை உணரவில்லை என்று அல்லமர் கூறல்

17. "ஓங்கு இருவினைகளையும் ஒப்பக் கண்டவர்கள் என்னைத் தம் உறவினரைப் போலப் போற்றுவார்கள். ஆங்ஙனம் ஆகிய இருவினைகளையும் பொருந்திப் போய் மாறி மாறி உழல்கின்ற நீங்கள் என்னை உணரும் நெறியில்லாதவர்கள்" என்று அல்லமன் கூறினன்.

ஒட்டர்கள் மீண்டும் அல்லமரைச் சினத்தல்

18. நிலனை அகழும் சிறியர்களான ஒட்டர்கள் யாவரும், தனக்கு இணை தானே என்ற நிலையிலிருக்கும் தம்பிரானாகிய அல்லமனை, "அறச் செயலும் எனக்கு உடன்பாடு அன்று என்று சொன்னாய், ஆதலின் உனக்கு ஒரு கதியும் இல்லை" என்று, உண்மை என்று தமக்குப் பட்டதைக் கூறிச் சினந்தனர்.

சித்த ராமர் பால் சென்று செப்புக என்று
அல்லமர் கூறுதல்

19. ''முதிர்ந்து சிறந்த கல்வியறிவு இல்லாத மூடர்கள் நீங்கள். உங்கள் தலைவனாகிய கற்றறிந்தும் உணர்வில்லாத மூடனிடம் சென்று சொல்லுங்கள். அவன் இங்கு வருவானாகில் அவனது அறிவையும் அவனது வாய்மொழியால் இத்தன்மை உடையது என்று உணர்வம்'' என்று எந்தை அல்லமன் கூறினான்.

ஒட்டர்கள் சீற்றம் கொள்ளுதல்

20. ஆதிசேடனும் புகழத் தக்க சித்த ராமனை மூடன் என்று (அல்லமன்) உரைத்த சொல், குளம் தொட்டுத் தோளில் வைக்கும் மண்வெட்டி உடையவர்களான ஒட்டர்களின் சினவலி என்கின்ற நீடிய வெந்தழலில் சொரிகின்ற நெய்க்கு ஒப்பாகியது.

○ சித்த ராமரைக் கற்றறிமூடன் என்று அல்லமர் உரைத்த மொழியானது ஒட்டர்களின் கோபவலியாகிய நெருப்பு மிகுந்து எரிய நெய் ஆயிற்று என்பதாம்.

அல்லமரை அடிக்கக் கற்களைப் பொறுக்கினார்கள்
ஒட்டர்கள்

21. தம் அழுக்கு உடையை இறுக்கிக் கட்டினர். பற்களைக் கடித்தனர். சினங் கொண்டு பார்த்தனர். கூச்ச லிட்டனர். பெருமூச்சு விட்டு மீசையை முறுக்கினர். நகைத்தனர். தங்கள் முரட்டுக் கைகளால், கோபமிக்கவராய்க் கற்களைப் பொறுக்கினார்கள்.

அல்லமரைக் கல்லால் அடித்துக் கொல்லச் சூழ்தல்

22. ''நம் குரவனை இகழ்ந்த இந்த நயமில்லாதவனை இங்கு ஒரே கல்லால் எறிந்து கொல்லுதல் மேலாய அறமும் புகழும் ஆகும் என்று, எம் குரவனாகிய அல்லம தேவனை எதிர்த்தோர் சூழ்ந்து கொண்டனர்.

ஒட்டர்களின் கொதிப்பும் கடுமையும்

23. அவனைக் கட்டுங்கள், அடியுங்கள். உங்கள் கையிலுள்ள மண்வெட்டியினால் வெட்டுங்கள். பழிமொழி கூறும்

வாயின் வெள்ளைப் பல்லைத் தட்டுங்கள், எறியுங்கள். வலிய தலையில் குழி உண்டாகக் குட்டுங்கள்'' என்று உள்ளம் கொதித்து ஒன்றாகக் கூடினார்கள்.

அல்லமர் மேல் கல் மழை சொரிதல்

24. எனது மன இருள் நீங்குமாறு எழுந்தருளி வந்த அல்லம தேவன்மேல் இடி போன்ற சொற்களை மிகுதியாக வீசிய ஒட்டர்கள் அங்கே சூழ்ந்து கொண்டு பேரொளி மிக்க அவன் திருமேனி மீது தங்கள் கை சலிக்கும் அளவு கற்களைக் கணக்கின்றி மழை போல் சொரிந்தனர்.

கற்கள் தாக்க வில்லை: கவிஞர் கூற்று

25, முன்னர், சாக்கிய நாயனார் (உள்ளத்தே அன்பு கொண்டு) எறிந்த ஒப்பற்ற கல் தவிர, மிகுதியாக விளங்குகின்ற ஒளி வடிவாம் அல்லமன் மீது, உண்மையான அறிவுப் பார்வை இல்லாதவர்கள் நூறு கோடிக் கல்லை வீசினாலும் அவை அவன் மேல் சென்று விழுமோ? விழ மாட்டா.

கற்குவியலின் மேல் அல்லம தேவர்

26. ஒட்டரக் கொடியோர் எறிந்த கற்கள் மலை போல் குவிந்தன. உலகத்தில் உடலின் நிழலை ஒருவன் புதைப்பானாயின் அந்த நிழல் புதைபடாமல் மிக விரைவில் மேலெழுதல் போல், அந்தக் கற்குவியலின் முடிமேல் முத்தனாம் அல்லமன் நின்றனன்.

O உவமையணி.

பிறர் செய் தீமையை மறப்போன் உயர்ந்தோன் என அங்கிருந்தோர் கூறல்

27. பிறர் செய்த தீமையை நினைந்து அவர்களை ஒறுப்பவன் (தண்டிப்பவன்) தாழ்ந்தவன். தீமையைப் பொறுத்துக் கொள்பவன் நடுவான தகுதி உடையவன். பொறுக்கின்ற மனத்தையும் மறந்து விடுபவன் உயர்ந்தவன் என்று இம் முறைப்படி, உண்மை நெறியிற் சிறந்த பெரியோர் உரைப்பர்.

O 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்' 'நன்றல்லது, அன்றே மறப்பது நன்று' என்ற திருக்குறட் கருத்துக்கள்.

இவன் எங்கிருப்பவன் என்று அங்கிருந்தோர் வியந்தல்

28. ''தீங்கினை நேரே நின்று செய்த இடத்தும் அதனை மறந்து முனிவினை மனத்தில் வைத்துக் கொள்ளாதவனாக, தாமரையின் மணங்கமழும் புது மலரென முகம் மலர்ந்து இங்கே நின்றிடும் இவன் எவ் விடத்திலிருப்பவனோ?

பிழை செய்தவர்க்கும் நன்மை செய்யும் பெருமை

29. தாமரை மலர்மேல் உள்ள தேவனோ (பிரமனோ) மலர்க்கண் மாயனோ (திருமாலோ) இளைய காளையினை ஊர்தியாக உடைய சிவனோ எனில் அவர்களில் ஒருவனும் அல்லன் இவன். பிழை செய்கின்றவரிடத்தும் நன்மை செய்கின்றவனாக இருக்கின்றான்'' என்று அங்கே தெரிந்தோர் நவின்றனர்.

அல்லமரைப் பிடித்துக் கொல்ல ஒட்டர்கள் நெருங்குதல்

30. தாங்கள் எறிந்த கற்கள் அல்லம தேவன் மேல் படாமை கண்ட ஒட்டலர், சொல்லுமிடத்து இவன் ஒரு தந்திர மந்திரம் வல்லவனாகத் தெரிகிறது. ஆகலின் இவனை வலுக்கட்டாகப் பிடித்துக் கொல்லுவோம் என்று எதிரே வந்தார்கள்.

அல்லமரின் பல்வேறு கோலங்கள்

31. அவர்கள் எதிரே வந்ததும் நீர் நிறைந்த பல குடங்களில் நிலவொளி வீசும் திங்கள் பலவாகக் காணப்படுதல் போல் அந்த அல்லம தேவன் பல வடிவம் கொண்டான். நிலம் தோண்டும் ஒட்டர்கள் நிலை தெரியாது மறுகினர். அங்ஙனம் நின்ற அல்லமனை இவன் தான் அல்லமன் என்று கண்டு பிடிக்க அவர்களால் முடியவில்லை.

ஒட்டர்கள் சித்த ராமரிடம் செய்தி தெரிவித்தல்

32. மருட்சி கொண்ட ஒட்டர்கள், சித்த ராமப் பெருந்தகை எழுந்தருளி இருந்த இடத்திற்கு உடம்பு இளைக்க ஓடிச் சென்று அவரது சிறந்த அடிகளின் மேல் வீழ்ந்து எழுந்து துன்பத்தோடு சொல்லலானார்கள்.

ஒரு புதியன் இழிவாகப் பேசினான் என்று கூறல்

33. ''நாங்கள் எங்கள் வேலையைச் செய்து கொண்டிருக்

கும் போது யாதோர் காரணமும் இன்றி எம்மிடம் ஒரு புதிய மனிதன் வந்தான். உன் புகழை அறிந்திலன். சொல்ல முடியாத இழி மொழிகளை உரைத்தனன். உடலினிடத்தில் கொண்ட பற்றுக் காரணமாக நாங்கள் இறந்திலம் (இங்கு உயிரோடு வந்தோம் உன்பால் உரைக்க).''

சித்த ராமையர் சீற்றம் கொளல்

34. இவ்வாறாக அவர்கள் கூறலும், சித்த ராமன் சிந்தையில் புல்லிய கிரியைத் தொழில்கள் அகன்று உண்மை அறிவு அடைய அப்போது அருள் கொண்ட அல்லம தேவனின் அடிகளைக் காட்டுதற்குத் தக்க, பொருந்திய சீற்றம் சித்த ராமனிடத்தில் உதித்து மேலோங்கியது.

சித்த ராமனின் தவச் செருக்கால் வந்த வெகுளி

35. ''என்னை இன்று இகழ்ந்துள்ளவன் யாவன்? அவன் நாக்கை அரிந்திடுவேன்'' என்று எழுந்தனன். பொருந்திய தவச் செருக்கால் விளைந்த வெகுளியானது எவராலும் ஒழிக்கும் படியான தன்மை உடையது அன்று.

O 'வெகுளி கணமேயும் காத்தலரிது' என்பது திருக்குறள் அடி.

சித்த ராமரின் சினம் கண்டு அல்லமர் சிரித்தல்

36. ''என்னை வைதவன் யாரவன்'' என்று சினந்து தீயைப் போல அல்லம தேவனின் எதிரில் வந்தான் சித்த ராமன் என்ற பெயர் கொண்ட முதல்வன். அவனது சினத்தை அறிந்து அன்னை போன்ற நம் அல்லமன் தலையையும் கையையும் அசைத்து வெள்ளிய பற்கள் தோன்ற நகை புரிந்து சொல்லுவான்.

சித்த ராமரைப் புகழ்வது போல அல்லமர் இகழ்தல்

37. ''தன்னைத் தோண்டுபவர்களை, வெட்டுபவர்களை அகன்ற நிலமானது தாங்குகிறது. அது போலத் தன்னை இகழ்கின்றவரைப் பொறுக்கும் இந்தத் துறவு நிலை அடைந்ததனால் நீ தவத்தாருக்குள்ளே மாதவம் உடைய யோகியாக விளங்குகிறாய்'' என்று அல்லம தேவன் புகழ்வது போல இகழ்ந்தனன். மேலும் கூறுவான்;

O அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல என்பது திருக்குறள் உவமை.

பொறுத்தலின் சிறப்பை நீ உணர்ந்துளாய் என்று
அல்லமர் வேடிக்கை செய்தல்

38. ''மேம்பாடு அடைந்த நல்ல யோகியின் மனத்தில் எழுகின்ற சினமானது தனது தவத்தினை அழித்திடும். அதற்கு முன்பு பஞ்சியிற் பட்ட நெருப்புப் போல சினத்துக்கு உள்ளானவனது தீவினையை அழித்துவிடும். அதனால் பொறுமை சிறந்தது, அதற்கு ஒப்பில்லை என்பதை நீ நன்றாக அறிந்திருக்கிறாய் போல் தெரிகிறது.
O எள்ளி நகையாடுகிறார் அல்லமர்.

உன்னை விட எமன் பொறையுள்ளவன் எனல்

39 ''எமன் உனக்கு முன்னே பொறுமை உடையவன் ஆவான், கடலில் எழுந்த ஆலகால நஞ்சு உனக்கு முன்னே அமுதம் என்று ஆகும்,'' என்று பிறப்பைக் கெடுத்து உயிர்களைத் தூய்மை செய்யும் ஒப்பற்ற தொழில் செய்யும் அல்லமன், சித்த ராமனின் தவத்தைப் புகழ்வான் போல, ஆனால் கொடியவன் என்று பொருள் தோன்ற வைதனன்.

O வஞ்சப் புகழ்ச்சி

சித்த ராமனின் கொதிப்பு

40. பொறுமை உண்டாகும்படி அல்லம தேவன் தக்க தந்திர மொழிகளாற் சொல்ல, தணிந்து போதற்கு உரிய சினம் நெருப்புப் போல் கொதித்து மிகுதியாக, அடிக்கப்படும் பந்து விரைந்து எழல் போல சித்த ராமையன், நிறைந்த திருவருள் உடை அல்லமனோடு பேசத் தொடங்கினான்:
O உவமை

உன்னைத் தீயில் இட்டு வறுப்பேன் என்று
சித்த ராமர் அல்லமரிடம் சீறுதல்

41. ''வெளிப்படையாக இகழ்வதினும் கொடுமையாக என்னைக் குறிப்பால் வைதாய், வெறுக்கத் தக்கனவற்றை முன் செய்து இவ்விடத்தில் என்னை இகழ்ந்தாய். உன்னைப் பொறுக்க மாட்டேன் நெற்றிக் கண் நெருப்பிடத்தில் சாம்

பலாகும்படி வருந்து விடுவேன்'' என்றனன். தன்னை ஒருவன் இகழ்ந்தால் யார் தான் அதற்கு மனம் வருந்தா திருப்பார்கள்?

உனக்கு அறம் உணர்த்திய என்னைக் கொல்லுவன் என்று சொன்ன நீ அறவன் தான்! என்று அல்லமர் கூறல்

42. ''தன்னைக் கொன்றாலும் தான் பிறிது ஒன்றைக் கொல்லுதல் பாவம் என்று கற்றுணர்ந்த பெரியோர் உரைப்பர். உனக்கு யான் உரைத்த அறநெறிகளை நிந்தை என்று எண்ணி என்னைக் கொல்லுவன் என்ற நீ அறவழியில் நிற்பவன் தான்!'' என்று

நீ தெரிந்திலை, அரக்கனே? எனல்

43. ''வீடு பேற்றுக்குரிய வழிகளுள் நீறு முந்தியது என்பர். அதைப் போலவே சொல்லும் மாதவ நெறிகளுள் உயிர்க் கொலை புரியாமை முதன்மை வாய்ந்தது. தீய பாதகங்களுள் கொடியது கொலை. அறநூல்களைப் பார்த்தும் இதனை நீ அறிந்திலை, இரக்கம் அற்றவனே!'' என்று அல்லம தேவன் கூறினான்.

O நீறு படுத்த வேண்டியது கற்பனைகளை; கொல்ல வேண்டுவது ஆங்காரத்தை; அங்ஙனம் இருக்க அல்லம தேவரை நீறு படுத்துவதாகவும் கொல்லுவதாகவும் சித்த ராமர் கூறியது தவநெறியாகாது என்று அல்லம தேவர் கூறினார் என்பதாம்.

சித்த ராமர் நெற்றிக் கண்ணைத் திறக்கிறார்

44. அதற்குச் சித்த ராமன், ''செருக்கு நீங்கினாயில்லை. எனக்கு எதிரே செவிசுடு தீச்சொல் உரைத்து நிற்கிறாய். உன்னைச் சும்மா விட மாட்டேன்'' என்று சினந்து நெருப்பாகிய நுதல் விழியைத் திறந்தான். "இறந்தாலும் நினைத்து உயிர் தருவேன்'' என்றான்.

சித்த ராமரின் நுதல்விழித் தீ அல்லமரின் அடி பணிந்தது

45. நெற்றியில் உள்ள தீ விழி, காமனை நீறாக்குமே அல்லாமல் பொருள்களைப்பற்றி எழும் காமம் சிறிதும்

இல்லாத யோகியை அழிக்கக் கூடிய வல்லமை உள்ளதோ? சினங்கொண்ட சித்த ராமனின் நுதல் விழியிலிருந்து எழுந்த நெருப்பு அல்லம தேவனின் வெற்றி பொருந்திய அடித் தாமரை மலரின் கீழ் விரைந்து சென்று வணங்கியது.

O பெருமிதமான ஒரு காட்சி இது.

அந்த நெருப்பு சொன்னலா புரத்தை எரித்தல்

46. வணங்கித் திரும்பிய அந்தத் தீ, வீரன் மேல் பாயும்படி தீரமாகப் போய் அவனது ஆற்றல் கண்டு மனவலி குன்றித் தணிந்து, ஒரு பேடியைக் கொல்ல நினைத்து அங்கும் இங் கும் அலைகின்ற வேடன் போல் சேர்ந்து சித்த ராமன் வாழும் நகரினைச் சென்று பற்றியது.

O உவமையணி.

திரிபுரம் போலச் சொன்னலாபுரத்தில் நெருப்பு

47. கங்கை தங்கிய நெடுஞ்சடையையும் நஞ்சு தங்கிய கண்டத்தையும் உடைய இறைவனின் புன்சிரிப்பால் எழும் கனலானது சென்று உயர்வான பெரிய மதில் சூழ்ந்த முப் புரங்களைச் சுட்டது போல், எங்கள் நாயகனாம் அல்லம தேவன் மேல் ஏவிய சித்த ராமனது நல்ல நுதல்விழித் தீ புறப்பட்டுச் சென்று அந்த நகரத்தைச் சுட்டது.

நகரில் யாவும் எரிதல்

48. அணிகலன்கள் எரிந்தன. மெல்லிய துகில்கள் எரிந்தன. சந்தனக் கட்டைகள் எரிந்தன. நறுமணப் பொருள்கள் எரிந் தன. சுண்ணாம்பாற் செய்த சுவர் ஓவியம் வேலைப்பாடுகள் எரிந்தன. மனைக்குள் இருந்த பொருள்கள் எரிந்தன. உயர்ந்த மதிப்புள்ள மணிகள் எரிந்தன. இவற்றைக் கண்ணுற்றோரின் வயிறும் எரிந்தன.

தீயிடை மக்கள் செயல்கள்

49. குழந்தைகளைத் தூக்கிச் செல்வோரும் முதியவர்களை இழுத்துச் செல்வோரும் சேர்த்து வைத்த பொருளை எடுப்ப வர்களும் உள்ளே நுழைய முடியாமற் போய் மண்ணிற் புரண்டு வாயில் அடித்துக் கொள்பவர்களும் வீடு பற்றி

எரியும் தணலை அவிப்பவரும் சுழன்று பாய்கின்ற அலையை யுடைய கடலைப்போலப் பதைபதைத்து வருந்தினர்.

அந்தத் தீயினால் வான கங்கையும் கொதித்தல்

50. உதித்த ஞாயிறு போன்று சிவந்த மணியினம் ஒளிரு மாறு பதிக்கப் பெற்ற மாளிகை மீது பற்றிக் கொண்ட தீயின் கொழுந்தால் ஒளி வீசுதலைச் செய்கிற பொன்போல் விளங்கும் செந்தாமரையை உடைய வானுலகக் கங்கையா னது, அங்கே உண்டான கொதிப்பினைப் பொறாது அன் னங்கள் வருந்தக், கொதித்தது.

அல்லம தேவர் தீயினை ஒழித்தல்

51. அந்த வேளையில், அருட் கடலாம் அல்லம தேவன், சொன்னலாபுரத்தில் உள்ளோர் துன்பங்கள் அனைத்தை யும் தொலைக்க எண்ணி, நெற்றிக் கண்ணின் நெருப்பைக் கண்ணிமைப் பொழுதில், முன்பு பாற்கடல் கடைந்த காலத்து உண்டாகிய நஞ்சை உண்டு இறைவன் அமரரைக் காத்த முறைபோல், ஒழித்துக்காத்தான்.

O உவமை

சொன்னலாபுரம் முன்னையினும் சிறப்படைதல்

52, நுதல் விழி நெருப்பினால் வெந்த அந்த நகர் எந்தை அல்லமன் அருளினால், மிக்க வெய்ய நெருப்பிலே வெந்த (புடம் போடப்பட்ட) பொன் போல, அந் நகரத்து மக்கள் மகிழ மூன்று மடங்கு முன்னையினும் ஒளி பெற்றது. பலவகை வளங்களொடு சிறப்படைந்தது.

O உவமை

நகர மக்களின் இன்பப் பெருக்கு

53. ஒருவன் தன் மனம் போனவாறு இயற்றிய பொற்பணி ஒன்றை, செம்மை பெற ஆக்கும் திறமுடைய இன்னொருவன் அதனை (உருக்கி) அழித்துச் சிறப்புறச் செய்தல் போல அந்த நகரத்தை அல்லமன் சீர்பெற ஆக்கவும் நகரத்தாரின் மனத்தில் ஆர்வமா கடல் எழுந்து ஓங்கியது.

O உவமையணி.

சித்த ராமரின் முகம் கருகியது

54. ஒரு கண் (நெற்றிக் கண்)ணினது ஆற்றல் தொலைந்து போக வலியழிந்த சித்த ராமன் ஏனைய இரு கண்களாலும் கண்டு உள்ளத்தின் செருக்கு என்பது ஒன்று இன்றி, மிகுந்த நாணம் என்கின்ற நீர் பெருக, பெரிய நெருப்பு விழுந்து கருகிப் போகின்ற அன்றலர்ந்த செந்தாமரை என முகம் சுருங்கி, இதனை நினைப்பான்:

தன்னை ஆட்கொள்ள இறைவனே வந்தான் எனச் சித்த ராமர் கருதுதல்

55. ''என்னுடைய நெற்றிக் கண் நெருப்பு இவனை வணங்குதலால், என்னைத் தடுத்து ஆட்கொள்ள வேண்டி இந் நில வரைப்பில் மாதொரு பாகனே இக் கோலம் கொண்டு வந்தனன்'' என்று

அல்லமரைச் சித்த ராமர் பணிதல்

56. ''தீயவனாகிய யான் அறிவில்லாமற் செய்த பிழையைப் பொறுத்து ஆட்கொள்ளுவாயாக. இறைவனே, பேய்க் குணம் உள்ள ஒருவன் செய்த பிழையினை அவனை ஈன்ற தாயைத் தவிர யாவரே பொறுப்பார்'' என்று சித்த ராமன் எனக்கு நிறைந்த அமுதம் போன்ற அல்லம தேவனது திருவடி மலரைப் பிடித்துக் கொண்டு வணங்கினான்.

அல்லமர் சித்த ராமரின் பிழையைப் பொறுக்க எண்ணுதல்

57. தனக்கு அன்பன் ஆன சித்த ராமன் தன்னை அடைக் கலம் அடைந்தபின் அவன் செய்த தீமைகளைக் எங் கோமான் அல்லமன் கருதினானில்லை. மாறுபாடு கொண்டு இலங்கை காக்கும் மன்னவன் (இராவணன்) அழகிய வெள்ளி மலையை எடுத்து வருத்தப் படுத்தி வந்து பிறகு அவன் வணங்கி நிற்க அவனது குற்றத்தை மனத்தில் கொண்டது உண்டோ?

அஞ்சாதே, வெகுளியை விடு என்று அல்லமர் அறிவுறுத்தல்

58. சிவந்த திருவடித் தாமரையில் விழுந்து வணங்கிய சித்த ராமனை அருளொடு நோக்கி ''ஐய நீ எழுக, நெஞ்சில்

அச்சம் வேண்டாம்'' என்று கூறிக் கையினால் தூக்கி அணைத்து, ''கல்வியையும் தவத்தையும் மாய்த்து விட வல்ல கொடிய வெகுளியை (கோபத்தை) விட்டுவிடு'' என்று எந்தை அல்லம தேவன் சொல்லுவான்:

மெலியவர் இடத்தில் காக்கும் வெகுளியே அறம்

59. ''தன்னை விட வலியுள்ளவனிடத்திலும் தனக்கு ஒப்பானவ னிடத்திலும் வெகுளியைப் பொறுத்துக் கொள்வது அறம் என்று கூற அமையாது. அவ் விரு வகையாரிடத்தும் துன்புறுத்தும் வெகுளி செல்ல மாட்டாது. ஆதலால் துன்பத்தைப் பொறுக்க மாட்டா மெலியவன் இடத்திற் செலுத்தாது காக்கத் தக்க வெகுளியே அறம் என்று கூறுவார்கள்.

○ செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக், காக்கின் என் காவாக்கால் என் என்பது திருக்குறள்.

முத்தி கண்டவனும் பொய்த்தவனும்

60 ''நம்மை வைதவனை நன்றாக வாழ்த்தினான் என்றும் தீய செய்தவனை நல்ல செய்தவன் என்றும் எண்ணிக் கொள்வோன் தீமை தவிர்ந்து வீடுபேற்றை உணர்ந்தவன் ஆவன். அவ்வாறு எண்ணிக் கொள்ளாதவன் வீண் தவத்தை உடையவன் என்று மறை நூல் கூறுமென ஞானியர் புகன்றனர்.

எவரிடத்தும் சீற்றம் கூடாது எனல்

61. ''பெரியோரைக் காய்ந்தவன் மலையைக் கல்லிய (தோண்டிய) கோலுக்கு ஒப்பாவான்; தனக்குச் சமமானவர்களைக் காய்ந்தவன் செய்யத் தகுந்த தீங்குகளை எல்லாம் பிறரால் செய்யப் பெற்றுப் புலம்புவான்; எளியவர்களைக் காய்ந்தவன் எரிநரகில் வீழ்வான் என்பதனால் எவரிடத்தும் சீற்றம் உறாமையே நன்மையாகும்.

சினமின்மை முனிவர்க்குச் சிறந்தது எனல்

62 ''சினமின்மை யாவர்க்கும் ஒப்ப நன்றாகும். ஆயினும் முப்பெருங் கடவுளர்க்கும் முற்றத் துறந்த முனிவர்க்கும் சிறப்புடையதாகும்'' என்று, சித்த ராமன் என்னும் பெயரு

டைய அண்ணல் தேவர்க்கும் கிடைத்தற்கு அரிய பேரின்பத்தை அடைவதற்கு மானிட வடிவங் கொண்டு வந்த தூயோன். அல்லம தேவன் சொன்னான்,

என்னை வலிந்து ஆட்கொண்ட நன்மையே
நன்மை எனல்

63. அல்லமன் கூறிய மொழிகளைத் தெரிந்து கொண்டு நம் சித்த ராமன் சொல்லுவான்: ''முத்தி அடைதற்கு துணைக்கருவிகள் எல்லாம் என்னிடத்தில் இல்லை என்றாலும் என்னை நீ வலிந்து அடிமை கொள்ளுதற் பொருட்டுப் பக்குவம் உள்ளவன் ஆகச் செய்த நன்மையே நன்மை'' என்று,

வலிந்து பற்றித் திருத்திய யானை போல்வான்
யான் எனல்

64. ''யாவரது எண்ணங்களையும் கலக்குகிறதும் மதநீர் பொழியும் கன்னத்தை உடையதும் ஆன யானையை வலிந்து பற்றித் தன் எண்ணத்தின்படி திருத்தித் தன் காலால், இட்ட வேலையைச் செய்யும்படி செய்து கொள்வதன்றி யானையே தானாக வந்து உறவு கொள்வது உண்டா? தெரிவிக்குமிடத்து, அடியேன் நின் திருவடித் தொண்டுக்கு அத்தகையனாக இருக்கின்றேன்.

O காட்டு யானையை வலிந்து பற்றித் தன் விருப்பப் படி திருத்தித் தான கற்பித்த வேலைகளை அதனிடத்தில் செய்வித்துக் கொள்ள வேண்டுமே யல்லாமல் அதுவே தன்னிடத்தில் வலிய வந்து இவன் விருப்பப் படி நடக்குமா, அது போல யானும் உனக்கு அத்தகையனா யிருக்கிறேன் என்பதாம்.

O மிகவும் பொருத்தமான உவமை இங்கே கையாளப்பட்டுள்ளது.

உனது ஆற்றல் என் தீமையின் மிகுதியால்
புலப்படுகிறது எனல்

65. ''போர்வலி மிக்க வீரனது வீரத்தன்மையானது அவனை எதிர்த்து நின்றவனது சேனையின் வலிமையில் வைத்துக் காணப்படும், அது போல உனது கடல் போன்ற மிகுந்த

அருளின் ஆற்றல் எனது தீய செய்கைகளின் மிகுதியால் காணப்படுகின்றது என்று வாதைப்பட்டு மனம் நொந்து

O போர்மறவன் ஒருவனின் வலிமை அவனை எதிர்த்து நிற்கும் படை வலியின் மிகுதியால் காணப்படுதல் போல் நின் அருளின் மிகுதி என் கொடுமையின் மிகுதியால் காணப்படுகிறது என்கிறார்.

முத்திக்கு வழி காட்ட வேண்டும் என்று கேட்டல்

66. ''எந்தையே! எனது குற்றங்களை நினைக்காமல் இனிமேல் திருவுளம் இரங்கி நன்மை மிக்க முத்தி (விடுதலை, வீடு) சேரும் நன்னெறி காட்டுக'' என்று தன் குறையை இரந்து சொல்லி மனம் வருந்தி, தனக்குத் தான் ஒப்பாகிய சித்த ராமன், கரையில்லாத அன்பினால் முதல்வனாகிய அல்லமனை முன்னதாக வணங்கினான்.

சித்த ராமருக்கு அருள்புரிய அல்லமர் நினைத்தல்

67. வணங்கிய அந்தச் சித்த ராமனை ஞான வாரிதி (அறிவுக் கடல்) ஆகிய அல்லமன் அருளால் பார்த்து, தக்க பருவம் பொருந்தப் பெற்றுள்ள இவனுக்கு இன்ப முத்தி பொருந்துதற்கான நெறி இதுவென்று தெரிவிப்போம் என்று உளத்திற் கொண்டு, தொல்லை தரும் பிறவிப் பிணிக்கு மருந்தனைய அல்லமன் சொல்வான்.

பருவம் கருதி அருளுபவன் ஆசிரியச் சிங்கம் என்று அல்லமர் கருதுதல்

68. முத்தி உணர்விற்கான பருவம் அடையாதவர்களுக்கு, முக்கட் பரமன் செய்த ஆகமத்தின் (சிவாகமத்தின்) உண்மைப் பெருமையையும் உட்பொருளையும் நினைத்துப் பெருமையாக உரைப்பானாகில் அத்தகையோன் குரவரிற் பதடி (ஆசிரியருட்பதர்) என்று சொல்லுவர், மாணாக்கனின் தக்க பருவம் (பக்குவம்) பார்த்து (ஆகமப் பொருளுண்மையை) அருள் செய்தால் அத்தகையோன் குரவருட் சிங்கம் எனப்படுவான் என்பதனை நினைந்து ஐயன் அல்லமன் அறைகுவான்:

O குருவின் நிலைமை கூறப்படுகிறது.

**கருவியே பொருள் ஆகாது என்று அல்லமர் விளக்குதல்**

69. ''சொல்லு மிடத்து, உயரிய மெய்யறிவே (பரம ஞானமே) முத்தியாகிய விடுதலைக்கு ஏதுவாகும். சரியை கிரியை யோகம், எனப்படும் மூன்றும் அந்த ஞானத்தை அடைதற்கான ஏதுக்கள் என்று மறைநூல் வகுத்துச் சொல்கிறது. அங்ஙனம் இருக்க, இம் மூன்று கருவிகளே சிறப்பும் பொருள்கள் என்று எண்ணிக் களிப்பவர்கள் கீழோர் ஆவார்கள்.

O கருவிகள் முடிபொருளாக, இலட்சியமாக, மாட்டா.

**கருமமும் யோகமும் எதற்கு என அல்லமர் கூறல்**

70. ''கருமமும் யோகமும் மனமாகிய அந்தக் கரணத்தைத் தூய்மைப் படுத்தி, அலையும் காற்றாடி போல் வருத்தும் துன்ப வழிகளில் புகுந்து சுழலாது அதனை அவை உள் நிறுத்தும். அங்ஙனம் மனம் தெளியவே இறைவனே என்றும் உள்ளவன் என்ற நல்லுணர்வு பிறக்கும்.

O கருமம் மனத்தைத் தூய்மைப் படுத்தும், யோகம் ஒரு முகப் படுத்தும்.

**அந்த நல்லுணர்வு பிறக்க மெய்யுணர்வு கிடைக்கும்**

71. ''இறைவனே நித்தியன் நிமலன் என்ற நினைவு தோன்றினால் நித்தியமில்லாது பொய்ப்பட்டு அழிகின்ற உடம்பையும் உடம்பைச் சார்ந்த பொருளையும் வெறுத்து, உண்மையை விளக்கும் ஞான ஆசிரியனை நாடிச் சென்று அவனிடத்தில் சார்ந்து, தத்துவம் அனைத்தையும் தள்ளி நின்ற தனியறிவு ஆகிய ஒப்பற்ற மெய்யுணர்வையே கண்டு கொண்டிருப்பன்.

**பானை அடுக்கு வீழ்வது போல யாவும் விலகும் என்று எடுத்துரைத்தல்**

72. ''ஐம்புலன்கள் எனப்படும் ஐவகை அறிவுகளை ஒழித்த பொழுதிலே ஐம்பொறிகளும் ஐம்பூதங்களும் கலங்கும் இயல் பினவான கரணங்கள் நான்கும் கலை முதலிய நான்கும் சுத்தம் முதலிய ஐந்தும், அடியிலுள்ள வெறுங் குடத்தை

இழுத்துவிட்டால் அதன் மேன்மேல் உள்ள அடுக்கான மட்கலங்கள் கீழே விடுவது போல விழுந்துவிடும்.

O ஐம்புலன்: சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். ஐம்பொறி: மெய் வாய் கண் மூக்கு செவி. கரணம் நான்கு: மனம் சித்தம் புத்தி அகங்காரம். கலை முதலாம் ஐந்து: கலை வித்தை இராகம் புருடன் மாயை. சுத்தம் முதலாம் ஐந்து: சுத்தம் சுபாவம் சூனியம் ஒழிவு அதீதம்.

O உவமையணி அடுக்காக உள்ள பானைகளில் அடியில் உள்ள பானையை இழுக்க மற்றவை தாமே விழும். அது போலப் புலன்களை ஒழிக்க மற்ற தத்துவங்கள் தாமே ஒழியும்.

மனம் அழிந்தால் மற்றவை தாமே மாளும் என்பது

73. ''ஒவ்வொன்றாக ஐம்பொறிகளை விட்டு விடலாம் என்றால் ஒன்றை ஒழிக்க இன்னொன்று வந்து சார்ந்து கொள்ளும். முந்தியதான மனத்தை அழிக்க எல்லாப் பற்றுகளும் ஒருங்கே அழிந்து போகும். மாணிக்க மணியை உடைய பாம்பின் ஐந்து தலைகளுள் ஒரு தலையை அரிந்தால் வேறொரு தலை நஞ்சைக் கக்கும். அதன் கழுத்தை அறுத்துவிட்டாலோ எல்லாமும் ஒருமிக்கத் தீர்ந்து போகும்.

O ஐந்து தலைப் பாம்பு என்ற தொன்மப் பொருள் தக்க உவமையாக உள்ளது.

மெய்யறிவைக் குரு குகேசன் அருளுதல்

74. ''ஆதலால் மனம் அடங்குமாயின் உடலும் உயிரும் தமக்குள் பேதத்துக்கு இயைந்ததோ அபேதத்துக்கு இயைந்தோ என்று கொண்டு கெட்டுப் போகின்ற மயக்கம் நீங்கும், தீதிலாதோனே!'' என்று சொல்லி நாவால் உரைத்தற்கேலாத மெய்யறிவைக் குரு குகேசனாம் அல்லம தேவன் உணர்த்தினான்.

O நாவால் ஓதமுடியாதது அனுபூதி நிலை.

முழு அருள் பெற்றேன் என்று சித்த ராமர் மகிழ்தல்

75. ''மானிடர், நாகருலகர், சித்தர், வானவர் ஆகிய கணங்களுள் முனிவர்களுள் என்போல் நினது முழு அருள் பெற்றார் எவரும் இல்லை. இனி எனக்கு நிகராவர் எவரு-

ளர்!'' என்று சித்த ராமன் அருட் குரவனாராம் அல்லமனின் தண் மலரடியில் வீழ்ந்து பணிந்தனன்.

சொன்னலா புரத்திலே அல்லம தேவர் இருத்தல்

76. இவ் வண்ணமாக அருளினால் சித்த ராமனுக்கு அறிவுரை தந்து, சொல்லற்கரிய அந்தச் சித்த ராமன் தனக்குத் தொண்டு செய்யும் படியாக மனம் மகிழ்ந்து, கையிற் கிடைத்த அமிர்தத்துக்கு ஒப்பாகிய கருணை வாரிதி யன்ன அல்லம தேவன், தூய்மை பொருந்திச் சிறப்புற்ற சொன்னலா புரத்தில் தங்கியிருந்தான்.

O

# 14. வசவண்ணர் கதி

கதைக்குறிப்பு: கவிஞர் கூற்று

1. சித்த ராமன் என்பவனுடன் ஆசிரியன் அல்லம தேவன், அடியார்களாம் பயிர்களை விளைக்கும் கலியாணபுரி என்னும் கழனியில் பாய்ச்சிய நீர் என்கிற வசவண்ணரை, பயிரிடும் மாந்தரைப் போலப் பார்த்து, உண்மையாகிய அன்பை அவ்விடத்தில் பெற்றதை நாம் இனி விரித்துக் கூறுவாம்.

O உருவகம்

அல்லம தேவர் சொன்னலா புரத்தில் இருந்து வரல்

2. அன்னம் மீன் ஆகியவற்றின் நிகழ்வை மிகப் பெற்றதோடு அவற்றின் கொடிய பசியையும் நீக்கிச் சிறந்த செந்நெல் வயலாற் சூழப் பெற்ற சொன்னலாபுரம் மிக்க தவம் செய்தது என்று தேவர்கள் துதிக்கும் படியாக, என்னை ஆளுடைய அல்லம தேவன் அங்கே எழுந்தருளி யிருக்கும் நாளில்,

வசவண்ணர் புகழால் உலகம் மகிழ்ந்திருத்தல்

3. அழகு பொருந்திய கலியாண புரமாம் பூங்கா வனத்தில் வசவண்ணன் என்னும் அன்றலர்ந்த தாமரை மலரின், அவரது புகழ் என்கிற மணமானது, அவரது இன்சொல் என்னும்

காற்றினால் வந்து (அன்பர்களின்) காது என்னும் நாசியில் புகுதலால், மோதுகிற நீண்ட அலைகளை உடைய கருங் கடலை ஆடையாக உடுத்த உலகம் மிகவும் மகிழ்ந்தது.

O உருவக அணி.

வசவண்ணரின் வான் புகழ்

4. முக்கண் நாயகனாம் இறைவனின் புகழ் என்னும் சோற்றை உண்பதற்குத் தகுந்த தீஞ்சுவைக் கறியாக வசவனது மிகுந்த சிறந்த புகழானது அமைந்தது. அந்த இரண்டையும் (சோறு கறி; இறைப்புகழ் வசவர் புகழ்) கலந்து புசிக்கும் நாவினால் (அறிவினால்) மாதவர் பிறவிப் பிணி தொலையப் புசித்தார்கள்.

O உருவக அணி

வசவண்ணரைச் சித்த ராமருக்குக் காட்ட
அல்லமர் நினைத்தல்

5. மாறுபாட்டு உணர்ச்சி யில்லாத நம் அல்லம தேவன், பிறப்பை விலக்கும் சித்த ராமனுக்கு முன்பு உணர்த்திய மெய்யறிவு இலக்கணத்துக்கு அருள் நந்தியாம் வசவன் என்னும் இலக்கியத்தை ஐயமறத் தெரிந்து கொள்ளுதற்கு உறுதியாகத் திருவுளம் கொண்டான்.

O உருவகம்.

அல்லமரும் சித்த ராமரும் புறப்படல்

6. அடியவர்க்கு எளியவனாம் அல்லம தேவன், எம் உள்ளத்தில் குடியிருக்கும் சித்த ராமனை உடன் கொண்டு குறிலும் நெடிலும் சேர்ந்து நிரையசை என அந்நகர் நீங்கி, கொடி கட்டிய மதில் சூழ்ந்த கலியாணபுரத்துக்கான வழியாகச் சென்றான்.

O உவமைக்கு இலக்கண உண்மையைப் பயன்படுத்தல்.

அடியார் கூட்டம் போதல் கண்டு இருவரும் மகிழ்தல்

7. இனிய கனி நிறைந்த தனித்த இடத்தில் மொய்க்கும் படி சேர்கின்ற எறும்பின் வரிசை போல அரனின் அடியவர் திரள் எழுந்திருந்து, மறந்தும் வெஞ்சமணராம் குண்டரைப் பொருந்தாத வசவன் தங்கிய நகரத்துக்குப் போதலை இருவரும் கண்டு உள்ளம் உவந்தார்கள்.

செல்லும் வழியில் அடியவர்கள் வேண்டுவன பெற்றுச்
செல்லுதலைக் காணுதல்

8. இறையருள் பெற்ற வசவண்ணர் ஏற்படுத்திய அறச் சாலையில் குடத்திலுள்ள நறுமண நீர் முதலியன வேண்டுவன பெற்றுக் கொண்டு மணம் தங்கிய மலர்வனத்தில் இளைப் பாறி, இறையடியார்கள் கூட்டம் ஏகுதலைக் கண்டார்கள்.

இருவரும் கலியாண புரத்தை நெருங்குதல்

9, வண்டிகளில் ஏற்றிய சிறந்த செல்வத்தோடு பல்லக்கில் ஏறிச் செல்பவர்களும், விரும்பியவற்றை வேண்டுமளவு கொண்ட தவ வேடத்தவரும், துறவோரும், விரதம் காப்போ ரும் நெருக்கமாகச் செல்வதைக் கண்டு அழகின் எல்லை (அலங்கார காண்டம்) எனப்படும் கலியாண புரத்தினைக் கண்டார்கள்.

கலியாண புரத்தின் வளத்தினை அல்லமர்
சித்த ராமருக்குக் காட்டுதல்

10. பார்த்துக் கொண்டு செல்லும் அந்தத் தருணத்தில் நகர் வளத்தினை மனத்திற் கொண்ட அல்லம தேவன் மிகக் களி கூர்ந்து, பழங்கால முதலாக வருகின்ற நல்ல புகழைப் பெற்ற புலவர்கள் சொல்லும் சித்த ராமனைப் பார்த்து, நிரம்பிய பல வளத்தைத் தனித் தனியே வகுத்துக் காட்டுவான்.

கலியாண புரத்து வளங்கள் (10)
குளிர்ந்த பொழில்

11. ''தன்னை விரும்பி வந்து சேர்ந்தவர்கள் முன்னர் வெறுத்த சூரியனது கதிர்களை விரும்புமாறு செய்து, வண்டுக் கூட்டங்கள் மிகவும் விருந்துண்ணத் தக்க வாசனை பொருந் திய மலர்களைச் சுமந்து பொன்னகரத் தேவர்கள் விரும்பும் கனிகளுடன் தண்ணென்று இருக்கும் பொழில்கள் விளங்கு வன எதிரே காண்பாயாக.

O வெயிலின் வெம்மைக்கு வருந்தித் தண் பொழிலுக்குள் புகுந்தவர்கள் அந்தப் பொழிலின் மிக்க தண்மை காரணமாக வருந்தி மறுபடி வெயிலுக்குச் செல்ல விரும்பும் அளவு அங்கே குளிர்மை இருந்தது என்கிறார்.

நெசவுக் குழல் போன்று வண்டுகள் அலைதல்

12. ''பூவிடைச் செந்தேன் மழை ஒழிவறப் பொழியும் சோலைக்கும், வளமான இதழ்கள் அவிழ்ந்து ஒழுகும் தேன் பொருந்திய தாமரைப்பூந் தடாகத்துக்கும் ஆக, நல்ல இசை பாடும் அழகிய சிறகுகளை உடைய வண்டானது நெய்யும் பாவின் இடையே ஓடுகின்ற குழல் போல் அலைவதைப் பார்ப்பாயாக.

O உவமை யணி.

மருத வயலில் கொக்கின் சோம்பலும் சுறுசுறுப்பும்

13. ''மணம் பொருந்திய மலர்கள் பசிய தேன் துளிகளைச் சொரிகின்ற பசுமையான சோலையைத் தாம் குடியிருத்தற்கு இயைந்த எல்லை எனக் கொண்டு வெண்ணிறக் கொக்குகள் சோம்பல் உள்ளன போல் அசைவற இருந்து இளங் கயல்கள் வரவும் நொடியில் பாய்ந்து கவர்ந்து விழுங்கும் தண்பணை (வயல்) கண் உடைய மருத நிலம் காண்பாய்.

O வாடி இருக்கும் கொக்கு – திருக்குறளிலும் உண்டு.

நீர் பருகும் குதிரை போல் வளைந்த நெற் கதிர்கள்

14. ''அழகிய ஒளியுடைய மணிக்குடத்தில் குதிரை தண்ணீர் குடிப்பது போல், ஒலிக்கும் இளமையும் நிறைந்த கருவும் கொண்ட சங்குகள் தவழும் வயலில் உள்ள அழகிய நெற்கதிர்கள் வளைந்து செந்தாமரை மலரிடத்துப் பொருந்தக் கவிழ்ந்து நுனி பொருந்தி யிருக்கும் அழகைப் பார்ப்பாயாக.

O உவமையணி. குதிரைத் தலை வளைந்திருப்பது போல் விளைந்த நெற்கதிர் வளைந்திருக்க, நீர்க்குடம் போலச் செந்தாமரை மலர் இருக்கிறது. குதிரை நீர் பருகல் போல் நெற்கதிர் செந்தாமரை மலரில் நுனி பொருந்தி இருக்கிறது என்பதாம்.

சமணர்களின் பொன் மதில் வட்டம்

15. ''இருள் மனத்தையுடைய அமணர் இவ் வுலகத்தில் தனக்குள் வாழ்கின்ற பயிற்சியால், இறந்து உயிர்போன பின்பும் அவ் வுலகத்தில் பொன் எயில் வட்டத்துள் என்றும் தங்குவதற்கு நினைக்கின்ற, இங்கே சமைக்கப்பட்ட பொன் மதில் சூழ்ந்த வட்ட நிலத்தையும் காண்பாயாக!

### நெற்றிக் கண் போன்ற கோபுரம்

16. ''மலர்மிசை உள்ள பிரமன் அன்னமாகப் பறந்து வானெலாம் தேடிய முடியை உடைய இறைவனுக்கு அன்பனே! விழித்து மூடுகின்ற நெற்றியில் இமைக்கும் விழி யெனச் சேர்ந்து விளங்குகிற மாமணிக் கதவு இரு புடை யிலும் பெற்றுச் சிறந்து விளங்கும் கோபுரத்தின் வாய்தலை (வாசற்படியை)க் காண்பாயாக.

### பாசறை போன்ற வீர பக்தர் தெரு

17. ''இலங்கும் திருநீறு என்னும் கவசம் இட்டுக் கொண்டு அக்கம் (உருத்திராட்சம்) என்னும் வெற்றி மாலையைத் தரித்து அஞ்சு எழுத்து என்னும் கணைகளோடு கூடியிருக் கின்ற நன்னெறி கொள்ளும் வீர சைவர்களாகிய அடியார் களின் தெரு. சமணர் என்னும் பகைவர் அஞ்சத் தக்க படை வீடு போன்று எதிரே விளங்குவதைக் காண்பாயாக.

O உருவகம்

### மேல் மாடியில் கொடிகள்

18. ''கட்டிய நெடுஞ் சடையையும் நெற்றிக் கண்ணையும் உடைய சிவனுக்குப் பூசனையாகிய தொழில் செய்கின்ற மாதவத்தோரின் பசித் தீயைத் தனித்தற் பொருட்டு அறம் நினைத்துக் கட்டிய கொடிகள் என்னுமாறு, மேல் மாடியைப் பார்த்தவர்க்கு, யாவரது மாளிகையிலும் பல்வேறுபட்ட கொடி கள் அசைகின்றவை காண்பாயாக,

### கிளிகளின் மயக்க உணர்வு

19. ''ஓவியமாகச் சுவரில் எழுதப் பெற்ற வாழையின் கனி யினை முற்றும் நன்கு பாராமல் தனக்கு உணவு என்று கடித்து அலகில் வேதனை கொண்டு, வாயில்களில் நிறுத்தி யுள்ள வாழையின் கனியையும் அந்த ஓவியத்தில் கண்ட கனி யின் தன்மையுடையது என்று நினைந்து கடிக்காமல் சும்மா இருக்கின்ற சிவந்த முகத்தையுடைய பச்சைக் கிளிகளைக் காண்பாயாக,

O மயக்க அணி.

பூவையும் கிளியும் வசவண்ணர் புகழ் கூறல்

20. "வள்ளலாகிய நல்ல வசவண்ணரது புகழை வாயினால் கூறாமல் இகழுகின்ற வலிய சமண குண்டர்களின் பிறப்பை விடப் பழிப்பில்லாத பறவைகள் கூட நல்லன என்னுமாறு இளம் நாகணவாய்ப் பறவைகளோடு கூடியிருந்து கிளிகள் அந்த வசவண்ணரின் புகழைச் சொல்லிக் கொண்டிருப்பது கேட்பாயாக.''

வசவண்ணரின் பெரிய மனையின் முன்போய்ச் சேர்தல்

21. என்று கூறி அந்தச் சித்த ராமனை மகிழச் செய்து இன்பமயமான மங்கலம் பொருந்திய தெருவில் வசவ நாயகனின் திருமனை முன்பு குன்று போல் உயர்ந்திருக்கும் முன்புற வாசலை, எம்மை ஆட்கொண்ட அல்லம தேவன் சென்று நெருங்கினான்.

வசவண்ணரின் அடையாத வாசல் முன் மாதவர் குழாத்தைக் காணல்

22. நீண்ட புழையை யுடைய துதிக்கையையும் வெண் மருப்பையும் உரல் போன்ற கால்களையும் கறுத்த தோலையும் உடைய யானையின் மேல் தோலை ஆடையாக உடுத்த மெய்யான மேலோன் (சிவன்) கொலை செய்வதை முதன்மையாகக் கொண்டு தாங்காத மழுப்படை போல, சாத்தி மூடுதலைக் குறித்து இடப்படாத மணிக் கதவுகளை அடுத்த தலைவாயிலில் மாதவர் திருக்கூட்டம் | நெருங்குதலைப் பார்த்தார்கள்.

O சிவன் மழுப்படையை ஏந்தியது கொலை குறித்து அன்று; அவ்வாறே வசவண்ணர் மாளிகைக்கு வாயில் அமைத்தது மூடுதற்கு அன்று என்பதாம். உவமை.

அடியவர்கள் செயல்கள்

23. அறுசுவையோடு கூடிய அடிசிலை உண்பதற்கு அடைவார்களும், அங்ஙனம் ஆகிய அடிசிலை (உணவை) உண்டு தெருவில் வருவார்களும், சான்றோர் தங்கியுள்ள இடங்களுக்குக் கறியும் சோறும் காவடியில் வைத்துத் தூக்கிச் செல்வார்களும், நறுமலர் மாலைகளைச் சுமந்து வசவண்ணர்

நடந்தும் வழிபாட்டுக்குச் செல்கிறவர்களுமாக அடியார்கள் இருந்தனர்.

### விட்டுச் செல்வோரும் பெற்றுச் செல்வோரும்

24. தம் சேவடிகளை வணங்கிக் கொடுக்கும் நல்ல துகிலைக் கிழித்துக் கோவணம் மட்டும் கொண்டு மிகுந்தவற்றை அதிகம் என்று இட்டு விட்டு அவ் விடத்தினின்று அகன்று செல்வோரும், அழகிய சுடர்மணிப் பசும் பொன் அணி, துகில், மலர் மாலை, சந்தனம் என்பனவற்றை வஞ்சிக் கொடி போன்ற பெண்களுக்கு அளிப்பதற்குத் தாருங்கள் என்று வாங்கிச் செல்வோரும்,

### வசவண்ணரைத் தேடி அடியார்கள் வருதல்

25. பழித்து எங்களை எதிர்ந்த வரம்பு கடந்த புன்மைச் சமணர்களுடைய வலிமையை வசவண்ணருக்கு அறியச் சொல்லுவம் என்று சொல்பவர்களும், வசவண்ணரை வணங்க வெவ்வேறு நகர்களிலிருந்து வந்து யானையும் வெற்றி பொருந்திய குதிரையும் அம்பொற் சிவிகையும் விட்டு இறங்கிச் செல்வாரும்,

O சமண எதிர்ப்பிற்கு ஒரு காரணம்.

### அடியார் குழாங்கள் நெருங்கும் வசவர் மனை வாயில்

26. சிறப்புடைய வசவண்ணனைப் பாட வலிக்கட்டு அமைந்த யாழ் கொண்டு செல்வாரும் ஆகி, கரும்பு வில்லையுடைய மன்மதனை வென்ற சிவபெருமானின் அடியார் குழாங்கள் நெருங்குகின்ற அழகு பொருந்திய மணிப் பசும் பொன்னால் இயன்ற தலைவாயிலை அல்லம தேவனும் சித்த ராமனும் உவகையோடு பார்த்தார்கள்.

### அல்லமர் சித்த ராமர் ஆகியோரைக் கண்ட அப்பண தேவர் என்பவர், வச வண்ணரிடம் சென்று கூறல்

27. அவ்விடத்தில் நின்றிருந்த அல்லம தேவன் சித்த ராமன் ஆகியோரை, அப்பணன் என்னும் பெயரை உடைய மிக்க தூயவன் எதிர் கண்டு இந்த உவகையான செய்தியை ஐயனாம் வசவனுக்குச் சொல்லுவேன் என்று மடத்தினுள் இறை வழிபாடு அடியார் குழாத்தொடு செய்து கொண்டிருக்கும் சமயம் வசவனிடம் வாழ்த்தி இது உரைக்கலானான்:

மாதவர் இருவர் வந்துளர் எனல்

28. ''ஐயனே! மாதவர் இருவர், குளிர்ச்சியும் களிப்பும் பொருந்திய நெடுங்கண் உமா தேவியை ஒரு பாகமாகக் கொண்ட இறைவனே இரண்டு உருவம் கொண்டு வந்தான் என்று சொல்லும்படி, ஒளியுள்ள முத்துமாலைகள் தங்கிய தோரண வாயிலின் முன்னே தெருவில் நிற்கின்றார்'' என்று தவத்தின் மிக்க அப்பணன் விளம்பினான்.

விரைவாக அவர்களை அழைத்துவா என்று வசவண்ணர் கூறுதல்

29. இவ்வாறு அவன் சொல்ல, வசவண்ணர் என்னும் பெயரை யுடைய கருணைக் குன்றம் ''தன் கன்றை நினைந்து நெஞ்சம் கரைந்து வந்து சேரும் பசுவுக்கு இவ் விடத்தில் யாதொரு தடையும் உண்டோ? விரைவில் அவர்களை நீ அழைத்து வருக'' என்று சொல்ல, அப்பண தேவன் போய் அல்லம தேவன் சித்த ராமன் ஆகியோரை வணங்கி,

O உவமையணி

அப்பணரின் அழைப்பும் அல்லமரின் சிரிப்பும்

30. ''மேலாம் சிவ லிங்கத்தைப் பூசை செய்ததன் பயனே இன்று உங்களது வருகை என்று வசவண்ணன் மகிழ்ந்தான் ஆகலின் நீங்கள் வருக'' என்று அச்சத்தோடு மனம் நடுங்கி மெய்த் தவனாகிய அப்பணன் விளம்ப, எங்கள் குருபரனாகிய அல்லம தேவன் சினந்து கொள்பவன் போன்று காட்டிக் குறுநகை கொண்டு கூறுவான்:

அல்லமர் மறுப்பும் அப்பணர் சென்று உரைத்தலும்

31. ''ஐயம் ஏற்று உண்கின்றவர்கள் அரசாட்சித் தன்மை அடைந்திருப்பவர்களிடத்தில் வருதல் முறையன்று, ஆகவே நீ திரும்பிப் போவாயாக'' என்று அல்லம தேவர் உரைக்க, அப்பணன் மனம் நடுங்கி விரைந்து மீண்டு, மலைபோலும் வயிரத் தோள்களை உடைய வசவ நாயகனிடம் சொன்னான்:

வசவர் தவற்றை உணர்தல்

32. அல்லம தேவன் புகன்ற சொற்களை அப்பணன் சென்று நின்று சொல்லலும், உள்ளம் திடுக்குற்றுச் சொல் தளர்ந்து உடல் வியர்த்து, ''பொருந்த வந்து சேரும் தாய் முன் பொறாது தும்பினை (கயிறு) அறுத்துக் கொண்டு ஓடும் நல்ல இளங் கன்று போல் நான் (அல்லம தேவன் முன்) போகா திருந்தேன்'' என்று

O உவமை யணி

மாச்சி தேவரும் அவ்வாறு கருத்துரை செய்தல்

33. கரைந்து உருகுகின்ற மனம் வருந்திக் கவலை கொண்டு வசவண்ணர் நோவுற, பெருந்தன்மை பொருந்திய மாச்சி தேவன் என்பான், ''பெரிய பாற்கடலிற் பிறந்த சாவா மருந்து (அமுதம்) தன் எதிரில் தானாகக் கிடைத்தும் அதை வாரிக் கையால் அருந்த நினைத்துத் தண்ணீர் விட்டு அலசுவான் போன்று நீ செய்தனை'' என்று கூறினான்.

O உவமை யணி

வசவண்ணர் அல்லமர் இருந்த இடம் அடைதல்

34. பெருந்தகை மாச்சி தேவன் சொன்ன கூற்று, விளக்கைத் தூண்டும் துரும்பு போல் உதவி செய்ய, செம்பொன் தூண்போன்ற தோளை உடைய வசவண்ணன் மயங்கி இருந்த அந்தக் குற்றம் என்னுடையதே என்று சொல்லித் தாள் பணிந்து 'ஒய்' யென்று (விரைவாக) அருந்தவத்தினரோடு புறப்பட்டு அல்லம தேவனின் அருகே வந்தான்.

தம் பிழையைப் பொறுக்குமாறு வசவர் வேண்டுதல்

35. ''எனது குணம் தீவினையே வடிவாகி நான் அதிலிருந்து மாறுபடாமல் இருக்கிறேன். உனது குணம் அருளே வடிவாகி நீ அதில் மாறாது இருக்கிறாய். எம் தந்தையே! அற்ப குணத்தை உடைய குழந்தையின் தீச் செயலைப் பொறுத்து அருள் செய்தல் என்ற தனது இயல்பினை விட்டு விடுகின்ற தாய் இந்த விரிந்த உலகின் கண் உண்டோ?

O என் பிழையைச் சிறிதாகக் கருதி நின் பேரருளால் காக்க வேண்டும் என்பது கருத்து. பிறிது மொழிதல் அணி.

வசவண்ணர் அல்லமரின் அடி பணிதல்

36. ''கயிற்றால் இயக்கப்படும் பாவை நான். கயிற்றை ஆள்பவன் நீ. அருட் கண் பார்த்து என் பிழை அகற்றி, உனது தொண்டுக்கு என்னை ஆளாகக் கொள்ள வேண்டும்'' என்று போற்றி, தனக்கு எளிதில் வந்து கிடைத்த நல்லா சான் ஆகிய அல்லம தேவனின் செந்தாமரை அடிகளில், உண்மை அன்புக் கடல் எனப்படும் வசவ தேவன் விழுந்தான்.

சென்ன வசவரின் வேண்டுதல்

37. ''நிலமாகிய மடந்தை (பூமா தேவி) பொறுக்காமல் தள்ளி விட்டால் தாங்கிப் பிடிப்பவர்கள் யாவர்? ஒலி மிகுந்த கடல் கரை கடக்கு மாயின் அதனைத் தடுக்க வல்லவர் உளரோ? எங்கள் தலைவனே! நீமுனிவாய் ஆனால் அதனைத் தடுப்பவர்கள் உலகில் யாண்டும் இல்லை, இல்லை. எந் தையே, அருள் செய்வாய்'' என்று சென்ன வசவன் வணங்கினான்.

மாச்சி தேவர் வேண்டுதல்

38. ''சிறுவர் பேசும் நிரம்பா மென் சொல்லில், சொல்திறம் ஆராய்வது போல் இந்த மிகச் சிறிய இளையோன் அன்பு செய்யத் தொடங்கும் முன்னே பிழைகளை நோக்க வேண் டாம். சற்று உனது கடைக்கண் வைத்துத் தண்ணளி (குளிர்ந்த இரக்கம்) புரிவாயாக'' என்று நல்ல தவத்தை உடைய மாச்சி தேவன் என்பான் நம் குரவனாம் அல்லமனைப் பணிந்தான்.

கின்னரப் பிரமர் வேண்டுதல்

39. "உரை மனம் உடல் ஆகிய மூன்றும் ஒருங்கு இயைந்து உனது தொண்டினைச் செய்ய வல்லோன் நிலவுலகில் இவ னைத் தவிர வேறு ஒருவரையும் யாம் கண்டிலேம். ஆகலின் அருள் செய வேண்டும்" என்று, உமாதேவியாரின் கொழு நற்கு அன்பனாகிய கின்னரப் பிரமன் என்போன் அல்லம தேவனின் திருவடிகளை வணங்கினான்.

### அடியார் அனைவரும் வேண்டுதல்

40. ''எங்களை எல்லாம் அடிமை கொள்ள வேண்டின் இவனது பிழையைப் பொறுப்பாய்'' என்று, மூங்கில்போலும் திரட்சி அமைந்த பணைத்த மெல்லிய தோள்களும் செவ்வரி படர்ந்த மதர்த்த மழைக் கண்களும் சிவந்த வாயையும் உடைய உமையவளின் மணாளனை விரும்பிய ஒள்ளிய தவத்தினை உடையோர் யாவரும் வணங்கினார்கள். பொறுமையுள்ளவர்கள் உணர வல்ல எங்கள் தம்பிரானாகிய அல்லம தேவன் சொல்லத் தொடங்கினான்:

### நம்மைக் காட்டிலும் நடிகர்கள் மேலோர் என்று அல்லமர் குறைகூறல்

41. ''இப்போது பேசிய மொழிகளைக் கற்றுக் கொண்டிருக் கிறீர்கள். சொன்ன வண்ணம் அந்த நெறியில் நிற்கத் தக்க நல்லொழுக்கம் உங்களிடத்தில் இல்லை; பேசுகிற பேச்சு ஒன்றாகவும் செய்கிற செய்கை ஒன்றாகவும் பொருந்தியிருக் கும் நம்மை விடப் பலவகை இசைக் கருவிகளோடு நடிக் கின்ற கூத்தாடிகள் சிறந்தோர் ஆவர்.

### அன்போடு கலந்த அறமே பயனுடையது எனல்

42. ''தான் விரும்பும் அறத்தில் அன்பு இல்லையாயின் பொருளை மேருமலை அளவு கொடுத்தாலும் சிறிதும் பயனற்றதாகவே முடியும். அன்பு இருக்குமானால் அறத்தின் வழிச் செலுத்தும் பொருள் அணு அளவுதான் என்றாலும் அது மலை அளவு உயர்ந்து புண்ணியப் பயனைக் கொடுக்கும்.

O அன்பு குறித்து அழகான கருத்துக்கள்

### அன்பு இல்லையானால் மற்றவை இருந்தும் பயன் இல்லை எனல்

43. "துறவறம் இல்லறம் புகழ் தூய்மை நல்ல கல்வி நல்லோர் உறவு வேள்விகள் ஈகை ஒள்ளிய தவம் விரதம் பூசை அறிவு இவை அனைத்தும் அன்பு இல்லை யாயின் இல்லை. அதனால் வருவன மெய் (உடல்) வருத்தமும் பெரும் பொருள் அழிவுமே யாகும்.

### அன்பினால் உண்டாகும் பெருஞ்சிறப்பு

44, "அன்பு உடையான் செய்கிற தீயனவும் நல்லன ஆகும். அன்பு இல்லாதவன் செய்யும் நல்லனவும் தீயன ஆகும். அன்பினால் ஒருவர்க்குக் கிடைப்பது உயிருக்கு உறு துணையான பேரின்ப முத்தி. அதனை அன்பைத் தவிர வேறொன்று கொடுக்கக் கண்டது உண்டோ?

### அடியார்கள் அல்லமரைப் போற்றுதல்

45. ''ஆகையால் அன்பைக் காட்டிலும் வறும் சொற்கள் உள்ளக் களிப்பைச் செய்ய மாட்டா'' என்று அடியார்களது பிறவித் தீமையை ஒழித்தருளும் தொழிலில் நின்ற அல்லம தேவன் ஓதினான், அன்பினால் வணங்கி நின்றவர்கள், ''நின் கருணையால் அன்றி நாங்கள் எதனால் நல்லவர் ஆக முடியும்'' என்று கூறி அவனது அடிகளைத் தொழுது நின்றார்கள்.

### சித்த ராமர் அல்லமரை வேண்டுதல்

46. ''காஞ்சிரங் கனியைத் தின்றது போலக் கடைப்பட்ட அடியேனது பிழையைப் பொறுத்துக் கொண்டாய். தீஞ்சுவை அமிர்தம் போன்ற திவ்வியமாகிய கறியில் சுவைக் குற்றம் கூறுதல் போல் இந்த அன்பனை (வசவண்ணனை)ச் சினவாதே'' என்று அழகிய திருவடிகளின் மேல் வணங்கிச் சித்த ராமன் போற்றினன்.

O அழகான உவமைகள்.

### வசவண்ணர், சென்ன வசவர், மற்றுள அடியார்கள் யாவரும் மீண்டும் வேண்டுதல்

47 ''அடைக்கலம் புகுந்தேன் அண்ணலே என்னை ஆள்வாயாக!'' என்று வசவண்ணன், மணம் பொருந்திய தாமரை மலர்களை வெற்றி கொண்ட பாதங்களில் மீண்டும் தாழ்ந்தான். ''விட்டு விடாதே'' என்று சென்ன வசவனும் வீழ்ந்து வணங்கிக் காப்பு அணிந்த கையினைக் கூப்பினான். எனைய அடியார்கள் சூழ்ந்து நின்று வணங்கினார்கள்.

அல்லமர் அருள் புரிந்து வசவண்ணரின் திருமடத்துள் எழுந்தருளுதல்

48. அல்லமன் என்னும் எம் கோமான் அருள் நிறைந்த கடைக்கண் பார்வை வைத்து ''ஐயனே, சொல்லுகிறேன், எழுந்திருப்பாயாக"! என்று இரு கையால் எடுத்து அணைத்து நல்லருள் புரிந்து, தண்ட நாயகனாகிய வசவண்ணரின் திரு மடத்தில் நிரம்பிய சிவனடியார்கள் தன்னைச் சூழும்படி இன்பத்தோடு புகுந்திருந்தான்

O

# 15. மருள சங்கர தேவர் கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. மலை போல உயர்ந்த பிரசாத குண்டம் என்னும் இடத்தில், காண்டற்கு அரிய மருள சங்கரன் என்பவனைக் கண்டு அருளைப் பூணாக அணிந்த அல்லம தேவன் மெய்யறிவு நல்கிய பெருமை பொருந்திய முறையை வகுத்துக் கூறுவாம்.

O பிரசாத குண்டம்: அடியவர் உண்ட எச்சில் இலையைப் போடும் குழி.

அல்லமரை வசவண்ணர் தம் மனைக்குள் அழைத்துச் செல்லல்

2. அளவற்ற மாதவர் பக்கத்தில் சூழ்ந்து வர வறியவர்க்கு எதிரே கிடைத்த அரிய பொருளாக அல்லம தேவனை மெய் யறிவினையுடைய வசவண்ணன் அழைத்துக் கொண்டு தனது தீதில்லா மனையினுள் போகத் தொடங்கினான்.!

O உவமை.

வாயில் பல கடந்து போதல்

3. பற்பலவாக உள்ள அவத்தைகளையும் கடந்து மெய்யாகிய உயர் சிவத்தினை அடைகின்றவர்களின் செயல்போல, வாயில் பல கடந்து சென்று பிரசாத குண்டத்தை (இடத்தை) ஒப்பில்லாத அல்லம தேவன் உவப்புடன் அடைந்தான்.

O உவமையணி. அவத்தைகள்: நிலைமைகள். விழிப்பு முதல் மரணம் இறுதியாகக் கிடந்த ஏழு. ஒவ்வொரு வகையும் ஏழு வகையாக அமைந்துளது. தத்துவத்தை உவமையாகக் காட்டுகிறார் கவிஞர்.

அங்கே மருள சங்கர தேவர் இருத்தல்

4. உயர்வினையுடைய பிரசாத குண்டத்தினது சிறந்த கரையில் மருட்சி மிகுந்த பித்தரைப் போல மருள சங்கரன் என்போன் உலாவுதலைப் பார்த்து அவன் பரமயோகி என்ற தன்மையை எம்பிரான் அல்லம தேவன் உணர்ந்தனன்.

O சங்கரன் என்பது பெயர்; மருளன், பித்தன்.

அல்லமரைக் கண்ட மருள சங்கரரின் மகிழ்ச்சி

5. தன்னைக் கண்ட தூயோனாகிய அல்லம தேவனைக் கண்டு தனக்கு எதிரே பாற்கடற் பிறந்த அமுதினை வறியவன் எடுத்து உண்டாற் போல மருள சங்கரன் மகிழ்ந்து விரைந்தோடி வந்து வளமான அழகிய திருவடியில் வீழ்ந்தான்

O உவமை

மருள சங்கரரின் தன்மையைச் சித்த ராமருக்கு உரைத்தல்

6. தனது திருவடியில் விழுந்த அறவடிவனான மருள சங்கரனை வந்து கையினால் எடுத்து மெய்யுறத் தழுவி உவகையோடு, அருள் செய்து அல்லமன் அவனுடன் ஒன்று சேர்ந்திருக்க அருள் பெற்ற நிலையினை யுடைய சித்த ராமனைப் பார்த்து மருள சங்கரனின் குணங்களைப் பாராட்டிச் சொல்லத் தொடங்கினான்:

மருள சங்கரரின் உண்மைத் தன்மையை வசவரும் அறிந்திலர் என்று கூறல் (5)

7. ''குண்டத்தில் பொருந்திய பிரசாதம் (அடியார் உண்டு ஒதுக்கிய மிச்சில்) ஆனதைக் கொள்ளையாக (நிரம்ப)க் கொண்டு உண்டு வாழ்ந்த மாதவனாகிய மருள சங்கரனின் உண்மைத் தன்மையைத் தண்ட நாயகன் (வசவண்ணன்) முதலாக அடியார் யாவரும் தெரிந்திலர். மற்று, அதனை அறியும் திறமையுடையார் யாருளர்?

அரிய ஞானியை அறிதல் இயலாது எனல்

8. ''சரியை ஒள்ளிய கிரியை மூச்சினைத் தடுத்து நிறுத்தும் யோகம் என்பன புரிகின்றவர்களை அங்ஙனம் இயற்றும் செய்கையால் அறியக் கூடும். ஒரு செயலுமின்றி வாழ்கின்ற அரிய நல்ல மெய்யறிஞனை அறிதல் (எளிதில்) இயலுமோ?

O (செயலின்றி வாழும்) ஞானியர், உலகினர் போல் வாழி னும் சகச சமாதியில் நிலைத்தலின் செயலற்றார் போலக் காணப்படுவர். சரியை என்பது சீலம், கிரியை நோன்பு, யோகம் இறைவனோடு ஒன்றுதலாகிய செறிவு.

ஞானி, இலை மறை காயென இருப்பன் எனல்

9. ''நன்மை அமைந்த ஒப்பற்ற சிவ ஞானி என்பவன் இல்லில் வாழும் நிலையறத்தில் இருந்தாலும் பற்றுக்களை நீத்து நிற்பதான தலைமையறமான துறவறத்தில் இருந் தாலும் உலகின்கண் இலையால் மறைவுற்ற காயைப்போல் இருப்பான் என்று அறிஞர் கூறுவர்.

O நிறை ஞானியின் இயல்புகள் கூறப்படுகின்றன.

ஞானி எல்லா நிலையிலும் இருப்பன் எனல்

10. ''வலிமை மிகுந்தவன் என்றிருப்பன் ஞானி. அவன் வலிமையே இல்லாதவன் என்றும் இருக்கலாம். யாவரும் இகழப் புல்லன் போன்றும் இருக்கலாம். அறப் பெருஞ் செல்வன் என்றும் இருக்கலாம்.

ஞானியால் தான் பிறப்பு நீங்கும் எனல்

11. ''எல்லாவற்றையும் அறியும் அறிவை அறிகின்ற ஞானியால் அல்லாமல் அறிவு மடங்கிய செய்கையாளனால் கொடிய பிறவி ஒழியாது. சித்த ராமனே, ஒளிவிட்டு எழுகின்ற கதிரவன் தோன்றாமல் அடர்ந்துள இருள் அகலுமோ?

O ஞானயோகமே பெரிது. ஞானம் என்பது நெருப்புக்கு, ஞாயிற்றுக்கு நிகர். அதுவே தீவினைகளை, பிறவியைச், சுட்டறுக்கும் என்பதாம்,

O எடுத்துக் காட்டுவமை யணி

பித்தனைப் போல் இருப்பது எதனால் என்று சித்த ராமர் அல்லமரிடம் வினாதல்

12. ''மருள சங்கர முனியினது உண்மை நிலையைக் கண்டாயோ?'' என்று எம் குருபரனாகிய அல்லம தேவன் சொல்ல, அதற்கு இராமன் கைதொழுது, ''இங்குச் சிறந்துள இவன் மருளரை (பித்தரை)ப் போல் இருந்து வருகின்றதன் காரணம் என்ன, அழகிய அருட்கண்களை உடையவனே, தெரிவிக்க வேண்டும்'' என, அல்லம தேவன் சொல்லத் தொடங்கினான்.

மிச்சிலை நுகர்ந்திருக்கும் காரணம்

13. ''யாதாயினும் ஒரு வேலையால் முயன்று உண்போம் எனின் துயர் ஒன்றே உயிர்கட்கு உண்டாகும் என்றும் நல் வினை புரிதலினின்றும் நீங்காத தூய இயங்கும் அடியார்கள் உண்ட மிச்சிலை உண்போமாயின் பழி யாதும் இல்லை, பிறவியும் ஒழிந்து விடும் என்றும் பிரசாதக் குழியினனான இந்தக் குண மிக்கான் அதனை விட்டு அகலாமல் இங்கு இருந்தான்.

சிவனடியார் திருவடி கழுவிய நீரின் உயர்வு

14. ''பிறவிக் கட்டு நீங்கிய சிவனடியாரது திருவடிகளை விளக்கும் நீர் தங்கி நிற்கும் குழியில் வந்து பிறந்து அதில் மூழ்கி வைகும் புழுவின் பெரும் பேறு, மேலாய கங்கை முதலிய தீர்த்தங்கள் அனைத்திலும் மூழ்கித் தீவினைகளை ஒழிக்கின்ற அந்தணாளரும் அடையார் என்று மறை நூல் சாற்றுகின்றது.

பிரசாதப் பொருளின் ஆற்றல்

15. ''அரன் தன் பிரசாதம், தாய் குற்றம் இல்லா மகளிர் தந்தை குழந்தை மறையோர் ஆகியோர்க்குக் கழுவாயில்லாத கடும் துன்பம் இழைத்த பாதகத்தையும் நீக்கும்; நொடிப் பொழுதில் அந்தக் கரணத்தைப் புனிதம் ஆக்கிச் சிவமே யாக்கி விடும் என்றால் அதற்கு நிகர் உண்டோ?

இந்த உணவு மற்றவருக்குப் பொருந்தாது எனல்

16. ''அரன்தன் பிரசாதம் தரும் ஊதியமாவது, பசிக்கு மருந்தாகவும் வீடு பயப்பதாகவும் சிறப்பு அளிப்பதாகவும்

பிறப்பை ஒழிப்பதாகவும் இருப்பதை உணர்ந்து இங்கு வசிக்கும் தன்மை மருளசங்கரனுக்கே வருவதன்றி, பசிக்கு உணவு புசிக்கும் மனிதர் தமக்கு எப்போதுமே பொருந்தாது'' என்று எம்பிரான் அல்லமன் கூறினான்.

O எல்லாரும் மருள சங்கரரைப் பின்பற்ற முடியாது என்பது உரித்தான குறிப்பு.

அல்லமரைச் சித்த ராமர் பாராட்டிப் பணிதல்

17. ''உன்னை மருளசங்கரனே (இனம் கண்டு) அறிவன். அவனை நீ அவ்வாறு அறிகுவை. அவ்வாறன்றி உலகில் வேறு யாரால் அறிய முடியும்? உரைக்கு மிடத்துப் பாம்பின் காலைப் பாம்புதானே அறியும்?'' என்று, என்னை ஆளுடைய சித்த ராமன் என்ற இணையற்றவள், அல்லம தேவனின் திருவடி மலரின் கீழ்ப் பணிந்தான்.

O பழமொழி

மருள சங்கரரின் பெருமை தனக்குத் தெரியாமற்
போனதற்கு வசவர் வருந்துதல்

18. ''அழகிய பொன் புதையலின் மேல் இருந்தும் அதனை அறியாது வறுமையில் அல்லற் படுவான் போலத் தலைவனாகிய மருள சங்கரனை நான் அறியாது இருந்தழிந்தேன். இவ்விடத்து வந்து, களங்கமில்லாதோனே! நீ எனக்குக் காட்டித் தந்தாய்'' என்று மேலோர் வணங்கும் அல்லம தேவனை உவந்து பணிந்தான் வசவண்ணன்.

உன்னை முனிந்தது உனது இன்பத்துக்கே என்று
வசவண்ணரிடம் அல்லமர் கூறல்

19. ''பொருந்திய மிகுந்த காமம் கொண்டவனுக்கு, அவனுடைய அன்புக்கு இனியவளின் ஊடல் இன்பமாகும். மெய்யறிவு அருளும் ஆசிரியன் சினந்து கடிதல் வீடுபேற்றை விரும்புபவனுக்குப் பேரின்பம் என்பதனை, குணங்கள் மிக்கவனே! உனக்கு உணர்த்துதற்கு உன்னைச் சினந்தோம். ஆதிசேடன் தாங்கும் நிலவுலகில் பரமசிவ பக்திக் குவியல் நீ ஆகையால் உனக்குக் குறை ஒன்றும் உளதோ?

நினது மனை சிறந்தது என்று கூறல்

20. ''தண்ட நாதனே (வசவண்ணனே!). இங்கு மருள

சங்கரனைப் போல அளவிறந்தவர்கள் நின் விட்டின் வாசலில் இரவும் பகலும் நீங்காமல் காத்திருப்பர் என்றால் நின் வீட்டின் முற்றம், குற்றமுள்ள வினையின் வலிமையைக் கடந்த பலரும் தாம் செய்த தவப் பயனால் தக்கபடி தங்கிய கைலாயம் அல்லவா.'' என்றான் அல்லமன்.

பக்தி எல்லாம் உன்னால் வளர்ந்ததே என வசவரை அல்லமர் பாராட்டுதல்

21, ''சூடு எங்கே உண்டானாலும் அது கொடிய நெருப்பின் குணம் என்பது போல, மூவுலகத்திலும் யாண்டாவது பக்தி முளைத்தால் அது உன்னுடையது என்று இந்த உலகம் இயம்பும் என்றால், எங்கள் வசவ! நின் பெருமை மங்கை பாகனாகிய இறைவன் அன்றி யாரே அறிவார்?

வசவண்ணருக்கு நிகராக ஒருவரும் உலகில் இல்லை எனல்

22. ''பத்திக் கடலே! குணக் குன்றே! பாசப் பகையே! எம் உறவே! முத்திக்கு அரசே! சிவானந்தத்துக்கு ஆதாரமே! ஞான மணி விளக்கே! சித்திப் பொருளே! அருணந்திந் தேவனே! நின்னைத் தொழும் அடியாரின் அறிவுக்கு உணவே! நின்னைப் போல் யாருளர்? அவரை யாம் அறிந்த தில்லை.''

எல்லாப் பெருமையும் உன்னைத் தொழுததால் உண்டானதே என்று வசவண்ணர், அல்லமரைப் போற்றுதல்

23. என்று அல்லம தேவன் கூற, ''எம்மை ஆளாக உடையவன் [அல்லம தேவன்] எனக்குப் புகன்ற நன்மையெல்லாம் சென்ற காலத்தில் இல்லை. உனது செந்தாமரை மலர் போன்ற பாதங்களைத் தொழப் பெற்ற இன்று முதலாக உண்டாயினவே'' என்று எந்தை வசவண்ணன் வணங்கி எழுந்திருக்க, அங்கே நின்ற தூய சிவனடியார்கள் நெஞ்சில் உவகை பூத்தார்கள்.

O வசவரின் விடையில் பணிவின் பொலிவு மிக்குளது.

மருள சங்கரருக்கு அல்லமர் அனுபூதி விளக்கம் அருளுதல்

24. உலகரின் அறிவைப் பிணித்த மல இருளாக உள்ள 'தனை முழுதும் தன் அருள்மொழியால், மானத தீக்கையால்

அருட் கடைக்கண் பார்வையால், மாற்ற எழுந்த ஞான சூரியனான அல்லம தேவன் அருளொடு மருள சங்கரனுக்கு அமரர்களாலும் அறிதற்கு அரிய பொருளாகிய பேரின்ப அனுபூதி விளக்கத்தை அருளினான்.

O

# 16. இட்ட லிங்க கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. யாவர்க்கும் நேயனாகிய அல்லம தேவன் அருள் சுரந்து கொண்ட நட்பினொடு வசவண்ணர் மெய்யறிவு பெறுதற்கு இட்ட லிங்கத்தின் இயல்பை விளக்கியதை, பல பிறவிகளிற் கட்டப் பெற்ற மிக்க வலியுள்ள நம் வினையின் தொடர்பு ஒருங்கே அழிய, ஓதுவாம்.

அல்லமர் வசவண்ணரின் மாளிகைக்கு எழுந்தருளல்

2. மருள சங்கர தேவனுக்குத் தனக்குத் தானே நிகராகிய பேரின்ப வீடு பேற்றை அவ்விடம் அளித்தருளிய அல்லம தேவன், வசவண்ணரது மங்கலத் திருமாளிகையை, பாம்பைக் காப்பாக உடைய சிவபெருமானுக்கு இனிய அடியாரோடு கண்டனன்.

இருக்கை ஒன்றில் அல்லமர் அமர்தல்

3. நிறைந்த பேரொளியை உடைய மாடத்தின் நடுவில் அழகிய தண்ட நாதனாம் வசவண்ணன் தவிசு ஒன்று அமைத்திட, அண்ட நாயகனான அல்லமன் பார்த்தோர் கண்கள் களி கூர அதில் எழுந்தருளியிருந்தான்.

அல்லமர் அடிகளை அன்பொடு மலர் தூவி வணங்குதல்

4. இருக்கையில் அமர்ந்தருளும் அல்லம தேவனது திருவடி களில் அன்புடன் பலவாய மலர்களைத் தூவி, 'இங்ஙனம் வழிபடப் பெற்றது முன்னர் இயற்றிய மா தவத்தின் வலிமையே'' என்று வணங்கிக் காதல் மிக உள்ளம் உருகிய நந்தியாகிய வசவண்ணன்,

வசவண்ணர் தமக்குக் கடவுளன்பு உண்டாகுமாறு உணர்ந்த வேண்டுதல்

5· "அடியவனாகிய யான் இறையன்பின் நிலையை உணர்ந்த தன்மை உலகில் ஊமையன் கண்ட கனவு போன்றதாக உளது, அது முடியுமாறு மொழிந்தருள வேண்டும்'' என்று பொன்னால் ஆகிய காப்பு இயங்கும் கைகளால் தொழுது கேட்டுக் கொண்டான்.

O பழமொழி.

உனக்கு விளக்கம் வேண்டுவதில்லை எனல்

6. அதனைக் கேட்ட ஆசான் அல்லம தேவன், "சிவத் தொண்டு புரியும் அடியார் குழாத்துடன் அன்புறும் கொள்கை யுடையவனே, உனக்கு விளக்கம் செய்வாரும் உளரா? செங்கதிர் ஞாயிற்றுக்கு இருளை ஓட்டுதற்கு என்று வேறொரு பெருஞ்சுடரும் இருக்கிறதா?'' என்றான்.

O எடுத்துக் காட்டு உவமை யணி. பகலவனுக்கு ஒளி தர வேறோர் ஒளி வேண்டுவதிலைல். அவ்வாறே வசவண்ண ருக்கு விளக்கம் தர வேறோர் ஆசான் வேண்டுவதில்லை என்பதாம்.

தன்னைப் புகழ்வதற்கு வசவண்ணர் வருந்தல்

7. "வள்ளல் அல்லம தேவன் இப்போது வந்து என்னைப் புகழ்ந்தனன். அது. தெளிந்த குளிர் நீரில் தேக்கு மரம் முளைத்தலின் நுனியைக் கிள்ளி எறிந்து விடுவார் போல் இருக்கிறது'' என்று மனம் நெகிழ்ந்து வசவண்ணன் கூறினான்.

O அல்லமர் தன்னைப் புகழ்ந்தது நிந்தாஸ்துதி (இகழ்ச்சிப் புகழ்ச்சி) என்று வசவ தேவர் கொண்டு அதனால் தனது ஆணவம் வளர்தற்கு இடமின்று என்று முளையிலே கிள்ளி எறியப்பட்ட தேக்கினை உவமையாகக் கூறினார்.

புகழ்ச்சியால் செருக்கு நோய் வளரும் என்று அவர் கூறுதல்

8, "இகழ்ந்து எனது உள்ளத்தின் செருக்கினை ஒழிக்காமல் யுகழ்ந்தாய். விரும்புகிற புளியிட்ட கறியை வைத்து, நீங்

கிய நோயை அதிகப்பட வளர்த்தலுக்கு ஒப்பாக இருக்கிறது'' என்று சொல்லி, அல்லமரின் சிறந்த திருவடிகளில் வசவண்ணன் இறைஞ்சினன்.
O உவமை.

தெளிவிலா எனக்குச் சிறந்த பொருளை
உரைப்பாயாக என்று வசவண்ணர் வேண்டுதல்

9. "அருளினால் நின் திருவடிகளை வழிபடுமாறு தெளிவு இல்லாத எனக்கு உரை செய்வாயாக'' என்று வசவண்ணன் கேட்கவும், மருள சங்கர தேவன் என்னும் ஒரு மதிஞனுக்கு (அறிஞனுக்கு) க் கொடுத் தருளிய சிறந்த பொருளை உடைய அல்லமன் அத்தகையன வாகிய நிலைகளைப் புகலத் தொடங்கினான்:

அல்லமர் அறவுரை (31)
நல்வினையைக் கொண்ட உயிர்க்காக மக்கட்பிறவி
கிடைக்கிறது எனல்

10. ''புல் மரம் நெளிகின்ற புழு பறவை விலங்கு என்கின்ற பல வகைப்பட்டவான, துன்பந்தரும் பிறவிகளுக்குத் தப்பி வலிமையைக் கொண்ட நிலவுலகில் மனிதராகப் பிறத்தல் நல்வினையைக் கொண்ட உயிர்களுக்கே அல்லாமல், வசவண்ணனே, மற்ற உயிர்களுக்கு அரிது.

அறம் வழுவாது வளர்த்தல் அரிது எனல்

11. ''மானிடப் பிறப்பை எடுத்தாலும் நன்மை செய்யாத வழியில் உலகின்கண் வந்து பிறவாமல் இருத்தல் அருமையாம். நல்லறங்களைப் புரிகின்ற மரபின் வந்து பிறந்தாலும் அறநெறி வழுவாது வளர்க்கும் உடம்பு பெறுவது அருமையாகும்.

அறவழியிலும் ஆகம வழி நேர்தல் அரிது

12. ''அறம் இயற்றற்கு இயைந்த உடம்பு எடுத்தாலும் மெய்யன்பினால் அறம் வழுவுறாது சிறப்புறச் செய்தல் அரிது. அங்ஙனம் செய்யினும் (உலகாயதம் பௌத்தம் முதலிய) புறச் சமயங்களை நீக்கி ஆகம (சிவாகமம்) நெறிக்கு இயைந்த சமயங்களைக் கைக்கொள்ளுதல் அரிதாகும்.

ஆகம வழியிலும் சைவ நெறிநிற்றல் அரிது எனல்

13. 'ஆகமம் கூறுகின்ற நெறியில் சேர்ந்திருப்பன் ஆயினும் குற்றமற்ற சைவநல்துறையை மிக்க நன்று எனச் சேர்தல் அரிதாம். அந்தத் துறையில் சேர்ந்திருப்பினும் ஏக லிங்க அய்க்கியனாதல் (தான் ஆன்மாவாக விளங்குதல்) எளிமையன்று.

இட்ட லிங்க வழிபாடு செய்பவன் பக்தன்

14. ''அறங்களைச் செய்து வந்த முதிர்ச்சியால் பொருந்திக் கண் கூடாக விளங்கும் இட்ட லிங்கத்தை மறவாத நெஞ்சுடன் வழிபாடு செய்ய, விடாது முயல்பவன் பக்தன் எனப் படுவான்.

இட்ட லிங்க வழிபாடு இறைவனை உயிரினுள் ஒன்ற உதவும்

15. ''ஆ (பசு) கொண்டுள்ள நோயானது நீங்க ஆவின் பாலைக் கறந்து ஆவுக்கு ஊட்டுதல் போல ஆணவம் கெட உயிரிற் பிரிவற நின்ற இறைவனை உள்ளங்கையில் வரவழைத்துப் பின்னர் உயிரினுள் அமைவுறும்படி ஞான ஆசிரியன் ஆக்குவன்.

O உவமை யணி. வாகட மருத்துவக் குறிப்பு.

இட்ட லிங்கம் அகத்தும் புறத்தும் விளங்கும்

16. ''கரிய காகத்திற்கு இருவிழிக்கும் ஒரு மணியே இயைந்து இயங்கும் செயல் போல, மாறுபாடின்றி உள்ளும் புறமும் ஒன்றாக நீக்கமின்றி இட்டலிங்கம் அருள் பொருந்தி விளங்கும்.

O உவமை யணி.

இட்ட லிங்கத்தின் நிறைவுடைமை

17. ''உள்ளங் கையில் விளங்கும் இட்ட லிங்கம், பல பெயர்களை ஐவகைப் பொறி தொறும் அந்தந்த நிலைக்கு அளவாகத் தாங்கி ஒள்ளிய (ஐந்து) புலன்களை (அறிவை) நுகர்ந்து பேருமின்றி அழிந்து அறிதற்கு அரிய அனுபவ நிலைகளுக்கு ஆதாரத் தன்மை அடைந்தும் தனது இயல்புத் தன்மைக்கு மாறின்றிப் பூரணமாக நிறைந்திருக்கும்.

O வீர சைவத் தத்துவ நுண்மைகள் நுவலப் படுகின்றன.

இன்பம் அருள்வது இட்ட லிங்கம்

18. ''அடைந்துள வடிவம், உணர்வு, இருப்பு நிலை என்பன தூல(பரு) சூக்கும(நுண்) காரணம் என்னும் உடல் மூன்றினும் அடைந்திடும் சங்கிலி போல் தொடர்ந்து உள்ள இருவினை வலிமையை மாய்த்து யான் என்னும் இடும்பை குன்றிய இடத்து பேரின்பப் பேற்றைத் தரும்.

இட்டலிங்கத்தைக் கூர்ந்து நோக்குபவன் அறியாமையை வெல்லுகிறான்

19. ''இங்ஙனம் ஆக, முழுதும் நன்கு உணர்ந்து இட்ட லிங்கம் என்ற ஒப்பற்ற ஒரு பொருளில் கூர்ந்து பார்வையை வைத்தவன் அழியத் தக்க உலகம் என்று ஒன்றுபட்டு நின்ற அறியாமையை (மாயையை) வென்றவன் என்று வேதம் விளம்பும்.

பரமனை இருத்துவோன் பக்தன்

20. ''ஒப்பற்ற மெய்யன்பு என்னும் மாலை அணிந்து மேலான உறுதி (வைராக்கியம்) என்ற ஆடை புனைந்து நீங்காத உண்மையறிவு என்ற இடுப்புக் கச்சை செறிய இறைவனைத் தன் நெஞ்சகத்தே தவறாது நிலை பெறச் செய்வோன் பத்தன் ஆகுவன்.

O உருவக அணி

இட்ட லிங்கத்தால் சிவமயம் ஆகுவன்

21. ''ஒன்றின் ஒன்றாக உள்ளுறப் பொருந்த மூன்று உடம்புகளையும் (பரு, நுண், காரண உடம்புகள்) துணியின் மடிப்பைப் போல் மடித்து எப்போதும் அந்த நிலையில் அமைதி உண்டாக இட்ட லிங்கத்தை வைப்பானேல் அவன் சிவ வடிவானவன் என்று அறிஞர் கூறுவர்.

தத்துவ நெறியில் பூசனை

22 ''அருள் என்னும் நீரால் அபிசேகம் செய்து சாந்தம் என்னும் மலையிற் பிறந்த சந்தனத்தோடு பொருந்த ஐம் பொறிகளாகிய மணம் தங்கிய மலரை அருச்சித்துத் தன

தறிவை இறைவன் உண்ணுமாறு (படையல்) செய்தால் அவன் சிவ பக்தன் எனப்படுவான்.

O உருவக அணி

அன்பையே இறைவன் விரும்புவன் எனல்

23. ''குற்றமில்லாத மனத்தெழும் அன்பை யல்லாது இறைவன் (வெறும்) பூசனையை விரும்பிலன். ஊசல் போல் அலைகின்ற மனத்தை உடைய ஒருவன் முழுக்காட்டுகின்ற நன்னீர், தன் (இறைவனின்) தலைமேல் அலைமோதும் கங்கையை விட உயர்ந்ததோ, சொல்வாய்?

O அன்பும் மன ஒருமையுமே இறைவனுக்கு உவப்பான வழிபாடு.

உண்மையான வழிபாடு இயற்றுவோர் இறைவனே எனல்

24. ''பூவினாற் புனையும் கைகளும் எம் புனிதனாம் இறையவனைப் பாவாற் புனைந்து பாடிப் பரவும் நாவும் உடையவனை, விடை வடிவம் எழுதப்பட்ட கொடியுடைய தேவனே (சிவனே) என்று தேவர்கள் நாவாற் புனைந்து புகழ்ந்து வணங்குவர்.

வழிபாடு செய்யாதவரினும் குரங்கு நல்லது

25. ''பூசனை புரியாத கையையும் இறைவனின் புகழைப் பேசுதல் இல்லாத வாயையும் உடையராய் உழலும் ஈனர்களை விடப் பெருங் காட்டில் நாணமில்லாது அலையும் புன் குரங்கு நற்பண்பு உடையதாம்.

அனைத்தையும் இறைவனுக்கே படைப்பவனுக்கு வினைகள் அணுகா எனல்

26. ''குடிப்பன, விழுங்குவன, கூரிய பல்லாற் கடிப்பன, நக்குவன ஆகிய அனைத்தையும் கையாகிய தாமரை மலரில் உள்ள சிவனுக்கு (இட்ட லிங்க சிவனுக்கு)ப் படைத்து உண்பவன், இனிமேல் வரும் வினைகள் யாவும் ஒழித்தவன் ஆவான்.

அனைத்தையும் ஈந்து அகந்தையும் துறந்தோன் இறைவன் எனல்

27. ''ஒருவன் தான் அடைந்த உடம்பும் மனமும் பொருளும் என்பவற்றைத் தீதிலாக் குரு லிங்க அடியார்கட்கு ஈந்து யான் என்னும் இருவகைப் பற்றும் இன்றித் தானே தானாக இருப்போன் எவற்றிற்கும் மேலாக விளங்கும் சிவத்திற்கு வேறுபட்டவன் அல்லன்.

மெய் மனம் செல்வம் இவற்றை நம்முடையவை என்று நினைப்போன் கொடியவன் எனல்

28. ''குரு சிவன் அடியார் ஆகியோர் கொள்ளுதற்கெனக் கொடுத்த மெய் மனம் தனம் என்றவை நம்முடையவை என்று நினைப்பவனைக் காட்டிலும் வழிச் செல்வோரைத் தடுத்துப் பறித்துக் கொள்கிற வேடன் உண்மை தவறாமையால் மிகவும் நல்லவனாம்.

அடியார்க்கு ஆவன, ஆகாதன

29. ''இவ் வுலகில் அழிக்கத் தக்கன இவை என்று ஐம் புலன்களையும் வென்ற வலியுள்ள வசவண்ணனே! தொன்று தொட்டு வரும் பிறப்பினை நஞ்சு எனக் கருதி அஞ்சும் எண்ணம் உடையார் விடத்தகுவன, காமமும் (விருப்பும்) கொடிய வெகுளியும் மயக்கமும் ஆம். கொள்ளத் தகுவன குரு சிவம் அடியார்கள் உறவாம்.

இட்ட லிங்கத்தை விழையாதார் சிறப்பிலர் எனல்

30. ''உள்ளங் கையில் அமர்ந்தருளும் சிவனை விட்டு மற்ற வெய்ய கடவுள்களை விழைந்து போற்றுவோர், கங்கையை விட்டு, உப்பங் கழியில் மூழ்குபவர்களைக் காட்டிலும் வேறாக மாட்டார், அறத்தின் வடிவான வசவண்ணனே!

புனிதன் ஆனவன் இறைவனுக்கு அன்பன் எனல்

31. ''மயக்கம் இல்லாத குரு சிவம் அடியார்களுக்கு முன் தொன்று தொட்டு உள்ள குற்றம் அனைத்தும் நீங்கப் பெற்று, வளப்பம் பொருந்திய நீர்த் துறையில் துவைக்கப் பெற்று அழுக்கு அற்றதான ஆடையைப் போல் தூயவனாக

ஒருவன் ஆவான் எனில் பாகு போல் இனிய மொழியுடைய உமையவளைப் பாகமாகக் கொண்ட இறைவனுக்கு அன்பனாம் அவன்.

**அடியார்களை இகழாதவன் இறைவனுக்கு அன்பன் எனல்**

32. ''பிறர்பொருளைக் கொள்ளை கொண்டாலும் பிறர் குறைகளைக் கூறினாலும் பிள்ளையை அறுத்தாலும் பற்பல பிழைகள் செய்தாலும், சொல்லுதற்கு அரிய நல்ல சிவனடியாரை இகழாதிருப்பின் ஈசனுக்கு அன்பனாம் அவன்.

O பத்திமை உறப்பு வலியுறுத்தப் படுகிறது.

**அடியார்களிடைச் சாதி கருதுபவன் நரகில் உழலுவான்**

33. ''அடியார்கட்குச் சாதி வேற்றுமை கருதினோன் உள்ளங் கையில் எழுந்தருளிய இறைவனுக்கும் அவ்வாறு கருதினோன் ஆவன். இறைவனோடு அடியார்களை வேறு எனப் பேதம் காணும் அத்தகையோன் அறிதற்கரிய சேற்றினில் (நரகினில்) கிடந்து வருந்துவான்.

O கடவுட் பற்றுக்குச் சாதியுணர்வு தடை.

**அடியார்க்கு ஆக்கும் உணவே அமுதம் எனல்**

34. ''சிறப்பினை உடைய குரு சிவ அடியார்களின் பொருட்டு உலையில் இடும் அரிசி (சோறு) அல்லவா, மலையாகிய மத்தை எறிந்து கடைந்த பாற்கடலில் உண்டான அமிர்தம்? தாம் தமக்காக அதனை ஆக்கிக் கொண்டால் அது (உணவு) கொல்லுகிற நஞ்சினும் கொடியதாகும்.

O ஒன்றே அமுதம்; அதுவே நஞ்சும் ஆகலாம்.

**பிறரது பிறவி நோயை அகற்றுவோன்**

35. ''உடம்பு உள்ளவரையும் தகுந்த நற் செய்கைக்கும், மனம் உள்ளவரைக்கும் அது நசிக்கத் தக்க பாவனைக்கும், ஞான முண்டு எனக் கொள்ளும் அளவும் வேற்றுமை அற்ற இன்பத்திற்கும் உள்ளவாறு செய்ய இசைந்தவன், பின்னை

தான் உள்ள அளவும் பிறவி நோயைப் பிறர்க்கு அகற்ற வல்லன் ஆவன்.

ஈசனையே இதயத்தில் இருத்த வேண்டும் எனல்

36. ''இறைவனை வைக்கத் தக்க இருதயத்தில் பொருள்களின் மேல் வைக்கும் ஆசையை இருத்துதல், அந்தணாளர் (அருள் மிக்க பெரியார்) தங்கியிருக்கும் மனையில் இழிசெயல் புரியும் அறிவற்ற கீழோரை இருக்க வைப்பதற்கு நிகராகும் என்று அறிஞர் கூறுவர்.

O உவமை.

துப்புரவு செய்யும் முறை

37. ''சினம் முதலிய அழுக்குகளை ஒருங்கே தொலைத்து வினை கடந்த உண்மை யறிவு என்ற மெழுக்கை (சாணத்தை) அன்பு என்னும் நீரோடு கலந்து மெழுகினாலன்றி மனம் என்னும் வீட்டில் இட்ட லிங்கம் வராது.

O உருவக அணி. மெழுகுதற்கு உதவுவது மெழுக்கு.

மடந்தையர் அழகையும் பொருளையும் விரும்புதலால் வரும் தீமைகள்

38. ''காலத்தையும் கருமத்தையும் கடந்து நின்ற காரணனான இறைவனிடத்தில் வைத்த அன்பு நீங்குமாறு உலகத்தில் பெண்களின் அழகையும் அவர்களைச் சேர்தற்காக ஈட்டும் பொருளையும் குறித்து விரும்புவோர்களது சீலமும் விரதமும் தீயன என்று நல்லோர் கூறுவர்.

தீய செய்கையுடையோர் கையில் இறைவன் இருப்பினும் கிட்டான் எனல்

39. ''கொடிய கொலைத் தொழிலும் திருடுதலும் பொய்யுரைத்தலும் சினம் கொள்ளுதலும் ஆசைப் படுதலும் என்று இங்கு இந்தத் தீயவற்றோடு பொருந்தி இருப்பவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல், விளங்கு சடையை உடைய இறைவன் செங்கையில் இட்ட லிங்கமாக இருப்பினும் அவன் சேயன் சேயனே! (வெகு தொலைவில் இருப்பவனே!)

O அடுக்கு, அழகாகப் பொருளுக்கு அழுத்தம் தருகிறது.

அடியார்களின் அன்பர்கள் வேறு எதனையும் விரும்பார் எனல்

40. ''பக்தர்களைப் புகழ்பொருந்தப் பணியப் பெற்றவர்கள், வைத்திருக்கும் பொருள்களை அவர்களோடு அனுபவிக்கப் பெற்றவர்கள் எண்வகைச் சித்திகளையும் கடவுளர்க்குச் சிறப்புச் செய்தலையும் வேறொரு முத்தியையும் பொருட்டாக மதிக்க மாட்டார்கள்."

அங்கிருக்கும் அடியார் அறிதற் பொருட்டே வசவண்ணர் பால் அல்லமர் கூறினார் எனல்

41. இவ்வாறு நன்னெறி யாவும் அவ்விடத்தில் பொருந்திய சிவனடியார் கூட்டம் நன்கு தெரிந்து கொள்ளவே மன்னவன் எனத் தக்க அருளாளன் வசவ நாயகனிடம் தலைவன் அல்லமன் புகன்றனன்.

O வசவனை முன்னிலைப் படுத்திக் கூறுவதாக அடியார் அனைவர்க்கும் உரைத்த நன்னெறிகள் இவை.

வசவண்ணார் அல்லமரைப் போற்றிப் பணிந்து பேருவகை கொள்ளுதல்

42. தண்ட நாயகனாகிய வசவண்ணன் புகழ்ந்து பாடினன், பரவினன் (வணங்கினன்), பணிவான சொற்களை உரைத்தனன். பன்முறை அல்லம தேவனின் திருத்தாள்களைத் தலையில் கொண்டனன். மிகப் பெரிய உவகையில் மூழ்கினன்.

இங்ஙனம் அறிவுறுத்தி அல்லம தேவர் கலியாண புரத்தில் தங்கியிருத்தல்

43. திருந்த இங்ஙனம் அறிவுரை தந்து எண்ணிலா அடியவர் குழாத்தொடும் அருணந்திப் பெயரினன் ஆன வசவண்ணப் பெருந்தகையோடும் மகிழ்வுற, நீங்காத ஆசிரியனான அல்லம தேவன் வளமிக்க கலியாண புரத்தில் தங்கியிருந்தனன்.

O

# 17 கதலி வன கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. மலைகளிலும் புண்ணிய வனங்களிலும் செழிப்பு மிகுந்த ஆறுகளின் கரைகளிலும் பன்னெடு நாளாக அருள் மிக்க ஞான குருவினைக் காணும் பொருட்டுத் திரியத் துணிந்து எங்கும் உலாவிக் கொண்டு மாதேவி யம்மை கலியாண புரத்தில் கண்டு அருளுரை பெற்று மகிழ்ந்து சென்ற முறையை இனிப் புகல்வாம்.

பல இடங்களில் தேடி அக்க மாதேவி
கலியாணபுரம் அடைதல்

2. காடுகளிலும் பெரிய மலைகளிலும் தேடியும் காணாத வளாக, வாட்டும் பிறவி என்னும் பிணி மாய்வுற வீடுபேற்றிற் சேர்க்கின்ற நன்மருந்து இருப்பதை (அல்லம தேவரை) அறிஞர்கள் கூறக் கேட்டு வந்து மாதேவி அந்த நகரினை அடைந்தாள்.

O உருவகம்

அக்க மாதேவி கலியாண புரத் தெருவில் புகுதல்

3. கட்புலன் விருந்தாக உண்ணுதலைச் செய்யும் காவலுள்ள நகரத்தின் வீதியில் உலகெலாம் வணங்கச் சுற்றுகிற சிவ பெருமானுக்கு இனியவள் தலையில் ஒரு வெள்ளாடை பொருந்தி யிருக்க, ஆடை யணியாத இடையோடு வீடுகள் தோறும் ஐயம் ஏற்பதற்காகப் புகுந்தாள்.

பித்து உடையாள் எனப் பலரும் கருதுமாறு
சென்றாள் எனல்

4. மாதர்க்கு நாற்குணங்களுள் (நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு) முதற்குணம் ஆகிய நாணம் என்பதை நீக்கிய இந்தப் பேதைமை உடையவள் யாரோ தெரிகிலம், பார்க்கு மிடத்து இவள் அறிவு மயங்கியவள் என்று பலரும் கருதும் வண்ணம் உலகியற் பழக்க வழக்கங்களை நோக்காளாய் மாதேவி வந்து சேர்ந்தாள்.

வசவண்ணரின் திருமடத்தை அடைதல்

5. உலகத்தாரை மூடர்கள் என்று எண்ணினளோ, உலகத்தார் தன்னைப் பேதை என்று எண்ணிக் கொள்ளற் பொருட்டோ, உலகத்தார்க்குச் சற்றும் நாணம் இல்லாதவளாக நீங்கிய உடையளாக, அக்க மாதேவி, உலகத்தார் தொழும் வசவண்ணரது திருமடத்திற்கு வந்து சேர்ந்தாள்.

அல்லமரைக் கண்டு இறைஞ்சுதல்

6. தண்ட நாயகனாம் வசவண்ணனோடு அடியார் பலர் நெருங்க ஒரு தவிசில் (இருக்கையில்) அண்ட நாயகனான அல்லம தேவன் வீற்றிருந்து அருள, போய்க் கண்டு அருகினில் இறைஞ்சினள். அங்கிருந்த சிவனடியார் கூட்டத்தினர் பார்த்து இதற்கு முன் தாம் அறியா வியப்பு அடைந்தனர்.

பிறவிப் பிணிக்கு அஞ்சினேன் அருள்செய்
என்று அழுதாள்

7. நெஞ்சம் மிகுந்த தீயிற்பட்ட அரக்குப் போல் நைந்து நைந்து உருகவும், நடுங்கிக் கூறும் இனிய சொற்கள் தடுமாறவும், ஒளி பொருந்திய விழிகளில் நீர் பெருகவும் அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற கைகள் தொழுது, மன்மதனால் வருகின்ற காம மயக்கம் அறியாத மாதேவியம்மை ''பிறவிப் பிணிக்கு அஞ்சினேன் ஆதலின் இனி அருள் செய்ய வேண்டும்'' என்று அழுதாள்.

ஞானம் பெறற்கு உரியாள் என்று அல்லமர் கருதுதல்

8. வீடு பேற்றை விழைபவர் ஆண் பெண் என்ற வேறுபாடு உளரோ? இதழ் அலர்ந்த மலர்க் கூந்தலை உடைய உமையவளின் (சாத்துவிக) கலையே இவள். இவள் போலத் தேடிக் காணும் நிலையில் தக்க நிலை பெறக் கூடியவர்கள் இல்லை, மெய்யறிவு அடைதற்கு உரியாள் என்று அல்லம தேவன் கருதினான்.

O ஆன்ம அறிவு, அதனால் வரும் வீடுபேறு, அதற்குத் துணையான துறவு என்பன ஆடவர் பெண்டிர் இருவர்க்கும் தக்கனவே.

மாதேவியின் மெய்யறிவு நிலையை யாவரும் மதித்தல்

9. தன்னைத் தவிர உலகம் என்று ஒரு பொருள் இல்லை என்று உணர்தற்கு இயைந்த மெய்யறிவை அடைந்ததால் காமவிருப்பை அடைந்திலள். தான் நல் அன்பினால் தன்னைத் தானே சார்ந்து ஒருமை யுற்று இன்புறுவோர் இவளன்றி மாந்தருள் வேறு யாரும் இருக்கின்றனரோ என்று ஆங்கிருந்தோர் நினைந்தனர்.

O தானலாது உலகம் இல்லை என்பது மெய்யறிவு; மெய் யுணர்வு உடையார்க்குக் காமமும், காமமுடையார்க்கு மெய் யுணர்வும் உண்டாதல் இல்லை.

இன்று காமனை வென்றவள் இவள் எனல்

10. ''இப்போது காமனை வெற்றி கொண்டவள் இத் தகையளாகிய இவள் ஒருத்தி. ஆய்ந்து செய்த அணிகளை அணிந்த இறைவியோடு கூடிய திருவுருவினன் ஆகிய நெற்றிக் கண்ணினை உடைய ஒப்பற்ற இறைவன் காமனை வென்றுளான் என்று உலகினில் துணிந்தெடுத்த சொல் அந்த நாளில் மெய்ம்மை'' என்று அங்கிருந்த சிலர் இயம் பினர்.

O இன்று காமனை வென்றவள் இவள், அன்று காமனை வென்றவன் சிவன் என்பதாம்.

இவள் போன்றவர்க்கே இருவினை அழியும் எனல்

11. ''உடல் அபிமானம் அற்றிருக்கின்ற இவளைப் போல இருவகைப் பற்றையும் ஒருமிக்க விட வலியுளார்க்கு அன்றி இளமையையும் செல்வத்தையும் விரும்பித் துன்பமயமான வாழ்க்கையில் வெறுப்புக் கொள்ளாத இழிந்த மாக்கட்கு, தோன்று தொட்டு விடாது தொடரும் பெரியனவாகிய இரு வினைகளின் தொடர்பு ஒழியுமோ'' என்றனர் சிலர்.

ஞான தேசிகனை நாடி வந்த அக்க மாதேவிக்கு
மெய்யறிவு புகட்ட அல்லமர் நினைத்தல்

12. யாம் தேடிச் சென்று மெய்யறிவை உணர்த்தத் தக்க மாணாக்கர் அல்லாமல், ஞான ஆசிரியன் இருக்கின்றானோ

என்று பலவிடத்தும் தேடி அலைந்து இப்போது இங்கே வந்த மாதேவி என்பவளைப் போல் தக்க சீடர் இல்லை என்று எம்மான் அல்லம தேவன், எவற்றிற்கு மேலாக நின்ற மெய்யறிவுக்கு மூலப்பொருளாக இருப்பதை உணர்த்த நினைந்தான்.

ஒளிமயமான மெய்ப்பொருளே நீ எனல்

13. ''ஐம்பெருங் கூறுகளும் (பஞ்ச பூதங்களும்) நீ அல்லை. ஐம் பொறிகளும் நீ அல்லை, இவற்றை மெய்யெனக் கொண்டு மயங்கி நான் என்று கொள்ளும் அறிவும் நீ யல்லை என்று இவை அனைத்தையும் ஒருங்கே ஒழித்து, சுடர்வடி வான மெய்ப் பொருளே நீ'' என்று விளக்கி,

O தத்துவங்களின் முடியான 'சோதி ஆகிய பிரம்மமே நீ' என்பதனை அல்லமாப் பிரபு விளக்குகிறார். இதுவே வேத அந்தம்.

சுட்டும் இயல்பு கடந்தது எனல்

14. ''அறிபொருள் (ஞேயம்) அறிவு (ஞானம்) அறிபவன் (ஞாதுரு) என்னும் இவை பலவாக நிற்குமாயின் அது ஒன்றுபட்ட (ஐக்கிய) முத்தி அன்று, அது சகம் ஆகும்'' என்று பொருந்தும் வண்ணம் இது அது என்னும் சுட்டு இறந்தபடி என்றும் இருப்பதான இயல்பை, மாயையின் தொடர்பு நீங்கிய அக்க மாதேவியி னிடத்தில் அல்லம வள்ளல் அருளினன்.

அக்க மாதேவியின் நன்றிக் கண்ணீர்

15. ''தேற்றாங் கொட்டையால் தெளிவித்த நீரைப் போல எனது உள்ளத்தைத் தெளிவித்த ஆசிரியப் பெருமானே! இதற்குக் கைம்மாறு காண்கிலேன். உடல் பொருள் ஆவி என்பன வேறு என்னும் தன்மை நீங்கி யாவும் நின்னுடை யவை ஆயின'' என்று கூறி அந்த மாதேவி என்பவள் விழி களில் ஊற்றெடுத்து வரும் கண்ணீரொடு அல்லம தேவனின் தாள்களை வருந்தித் தொழுதாள்.

O கதக விதை எனப்படும் தேற்றாங் கொட்டை வேதாந்தப் பாடத்தில் வரும் உரித்தான சான்று.

நீ கேட்டதன் பொருளெலாம் நின் அநுபவத்தில் காண்பாய் எனல்

16. ''அன்னையே! நீ இனி பெரிய வாழைத் தோட்டம் என்ற இடத்தை அடைந்து, இங்கு என்னிடம் கேட்ட இந்தப் பொருளை எல்லாம் உன்னுள் நீயே தெளிந்து உறுதி கொள்வதாகிய நிதித்தியாசனத்தில் (ஐயம் திரிபற்று முழுதும் தெளிந்த நிலையில்) என்றும் நிலைபெற்றிருப்பாய்'' என்று தற்கொடை வள்ளல் அல்லம தேவன் (அடைந்தார்க்குத் தன்னையே வழங்க வல்ல அருளாளன்) அனுப்பினான்.

O தற்கொடை வள்ளல் என்பது பொருள் மிக்க நல்ல தமிழ்த்தொடர்.

O அனுபூதிப் பெற்றியை அல்லமர், மாதேவிக்கு அருளுகிறார்.

அக்க மாதேவி ஸ்ரீ சைலம் அடைதல்

17. வள்ளல் அல்லமரின், நாள் மலர்த் திருவடியை வணங்கி, அருகில் மிகுதியான மாதவரின் தாள் தொழுது அருள்விடை கொண்டு வெள்ளம் போல் பெருகிய அன்பு நின்று செலுத்த, தெளிந்த ஆரமுது போன்ற அக்க மாதேவி பருப்பதத்தைச் சென்று சேர்ந்தாள்.

O ஸ்ரீ சைலம், திருச் சைலம், பருப்பதம் (பருவதம், மலை) என்பன ஒரு பொருளன.

திருச் சைலத்தில் இருக்கிறது கதலிவனம் எனல்

18. வசவண்ணரிடத்தில் அருள் அல்லமன் வந்தது போல, காமதேனு (வானுலகப் பசு) வின் பால் நிறைந்த சுனை-யிடைத் தானே நழுவி விழுகின்ற பழத்தைத் தின்னுகிற அழகிய கிளிகளின் சொல்லோசை கடல் போல் கலந்தொலிக்க, பொருந்திய பசிய இலைகளை நிறைய உடைய கதலி அம் காடு அந்த மலையில் விளங்கி அமையும்.

வாழைக் காட்டின் இனிய தோற்றம்

19. விரிந்த வாழை மரங்களின் நீண்ட இலைகளின் மேல் நிறை மதியின் நிலவு பொருந்தியிருக்கும் தன்மை,

வானத்தைக் காத்துப் புரக்கும் புத்தேளாகிய இந்திரன் உண்ணப் பொருந்திய சமையல் தொழில் திறம் நிரம்பிய அடிசில் கொட்டி வைத்தது போல் இருக்கிறது என்று மனம் களிகூருமாறு தோன்றியது.

O வாழைமரத்தின் இலைகளில் முழுத்திங்களின் ஒளி நிரம்பிக் காணப்படுதல், இந்திரன் அமுதுண்ணும்படி நிறையப் படைக்கப் பெற்றிருத்தல் போல் உளது என்பதாம். தற்குறிப்பு அணி.

அக்க மாதேவி வாழைக்காட்டில் தவமேற் கொள்ளுதல்

20. இத் தன்மை பொருந்திய வாழையங் காடு கண்டு எங்கள் அக்க மாதேவி, முனிவர்கள் வானவர்கள் என்ற யாவரும் முறை முறை போற்றத் தன்னந் தனியளாக, ஒரு புறம் பசுமையான உமாதேவி அமையப் பெற்ற - அடியார் விரும்பும் சிவந்த கனிபோன்ற இறைவனை விரும்பிய உள்ளத்தோடும் மகிழ்ந்து (தவத்து) இருந்தனள்.

O அடியார் விரும்பும் 'சுவைதரு செங்கனி' என்று இறைவனை உருவகித்தது நினைதற்கு இனிய உருக் காட்சியாக அமைகிறது.

O

# 18. சாதகாங்க கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. வினை காரணமாக வந்த (பிறவித்) துன்பத்தை நீக்கி, எமக்கு அன்னை போல் வந்த அருளுடைய அல்லமன், மன அடக்கத்தை வசவண்ணற்கு அறிவித்ததை இனி நாம் எடுத்துச் சொல்லுதும்.

O சாதகாங்கம்-சாதகம்+அங்கம். காற்றை, மனத்தை அடக்கும் யோக சாதனக் கூறுகள் இதிற் சொல்லப் படுகின்றன.

அக்க மாதேவி சென்றபிறகு,

2 சோலையில் சிறந்த கதலி வனத்தில் மாதேவிக்கு உண்மையுணர்வு புகட்டித் திருவருள் செய்து, அங்கு ஞான விளக்காம் அல்லமன் தங்கி இருக்க, எமக்கு உயிர் போலும் வசவண்ணன் அவரிடம் சொல்லுவான்:-

வீடுபேற்று வழி கூறுமாறு வசவர் கேட்டல்

3. "நிலை தெரியாமல் மயங்கி வாதிப்போரின் சொற்போர் மயக்கம் இல்லாமல், முத்திக்கு ஆகும் சாதனத்தை, தலைவனே!, எங்களுக்கு நீ மொழிந்தருள வேண்டும்'' என்று அவருடைய திருவடிகள் தொழுது எழ, பக்தியை விரும்பும் பரமனாகிய அல்லமன் பகருவான்:

அல்லமர் அறிவுரைகள்

O இப் பகுதியில் மிக உயர்ந்த உண்மைகள், யோக நெறி கூறப்படுகின்றன.

மனம் சொல் செயல்களில் தூய்மையே வழி

4. ''உயர்ந்த வீடுபேற்று நிலையைப் பெறும் ஏதுக்களுள் முக்கியமானது மனம் மொழி செயல் என்ற மூன்று கரண சுத்தியே. திரிபுரம் எரித்த தூயோன் குறித்த நன்னெறியாகிய இந்த நிலையை மறை நூல் உரைக்கின்றது.

மனம் இலிங்கமாக வேண்டும்

5. ''சிந்தையைச் சிவன் கழலில் ஊன்றி நிறுத்திய வசவனே! மனம் இலிங்கவடிவாகப் பொருந்த வேண்டும் அங்ஙனம் பொருந்தாவிடில் உடலில் இலிங்கம் தரித்தும் பயன் சிறிதும் கிடையாது.

O மனம் இலிங்காகாரம் ஆகாத நிலையில் உடலில் தரித்த இலிங்கத்தால் பயனில்லை என்பதாம்.

மனத்தோடு பொருந்தாத பூசனையால் பயனில்லை

6. ''புனலும் அழகிய பூவும் கொண்டு உலகில் நாளும் முறைப்படி செய்கின்ற பூசனை மனத்தோடு பொருந்தியிருக்க

வேண்டும். அங்ஙனம், ஒன்றிலும் பற்றாத மனத்தோடு பொருந்தாமல் நீங்குமாகில் அந்தப் பூசனை, 'உயிர் நீங்கிய வெறும் தேகத்தைப் போன்றதே ஆகும்.

இறைவனை அகத்தே காண்பவன் அறிஞன்

7. ''யானை இனிய கரும்பையே தின்னும். ஆடு அதன் இலையைத் தின்னும். அது போல, தன்னை அறிந்த ஞானி இறைவனை உண்முகமாக ஐக்கியமுறக் காண்பன். அறிவீனன் வெளியே காண்பான்.

O கருத்தை மிகத் தெளிவுபடுத்துகிறது உவமை.

ஒன்றுபடாத மனமே பகை

8. "கைகள் சிவ பூசை முதலிய அறவினைகளைப் புறத்தே செய்து கொண்டிருக்க, மனமானது அப்பொழுது அதற்கு மாறாக, போகத் தகாத இடங்களில் போய் அலைந்து திரிந்து கொண்டிருக்கும். ஒருங்குறாத மனத்தைக் காட்டிலும் மிகுந்த அல்லல் விளைக்கும் பகை வேறெதுவும் இல்லை.

O மனம் ஒருங்குபடாத இடத்து அறவினை எவ்வளவு சிறப்புறச் செய்யினும் பயனில்லை என்பதாம். மன ஒருமையே எவ்வெவற்றுக்கும் முதற் சாதனம்.

அலையும் நெஞ்சால் சுகம் கிடையாது

9. ''உறங்குவதை இன்பம் என்று எல்லோரும் கூறுவர். அதற்குக் காரணம் பொறியின் வழித் திரியும் மனம் அப்போது இல்லாமையே ஆகும். பலவற்றிலும் ஈடுபடும் மனம் பலவாறாக அலைந்து திரியும் செயலில் சுகம் என்பது சிறிதும் இல்லை.

O எங்கே மனம் இல்லையோ அங்கே சுகம் என்பதாகும்.

மனம் வசப்பட்டால் பிறப்பு இல்லை

10. "மனம் ஒருவன் வசப்பட்டால், அந்த மனத்தை அடக்கியவன், வருத்தும் பிறவியைப் பின்பு அடைந்திடான். மனமானது ஒருவன் வசத்தில் அடங்காது கண்டபடி ஓடுமாயின் எண்ணற்ற பிறவிகளில் அவன் சுழன்று கொண்டிருப்பான்.

மனமே துணை

11. ''அறவினைக்கும், கிடைத்தற் கரிய பொருள் இன்பங் களைப் பெறுவதற்கும், பெருங் கல்வி கற்று உயர் வல்லமை பெறுதற்கும் நல்ல வீரத்திற்கும் விளங்குகின்ற துறவறு நிலைக்கும் துணையாக நிற்பது மனமே யாகும்.

மனமே காரணம்

12. ''ஐயனே! நல்லன செய்து மனிதரை உயர்த்தவும் தீயன செய்து மறுமையில் நரகத்தில் அமிழ்த்துதற்கும் வல்லமை யுள்ளது இந்த மனனே அன்றி வேறில்லை என மறைகள் இயம்புகின்றன.

O ஒருவற்கு மிக உயர்வு தருவதும், படு தாழ்வு தருவதும் வல்லது அவனது மனம்.

தீவினை அழியு வழி

13. ''நெஞ்சம், உமையவள் நேசனாகிய இறைவனை அடையுமாயின் விஞ்சு பாதகம் கோடிக் கணக்கில் செய்திருப் பினும் ஒருவன் அஞ்ச வேண்டுவதில்லை. அவ் வினைகள் யாவும் பஞ்சானது தீயில் அகப்பட்டாற் போல மாய்ந் தொழியும்.

மக்களுக்கும் மாக்களுக்கும் மனமே வேறுபாடு

14. ''மக்கட் பிறப்பில் மனிதத் தன்மை உடையவர் என்று மனத்தினால் மிக்க மேன்மை பெற்று விளங்க வேண்டும், அங்ஙனம் விளங்காது நிற்பாராயின், பொய்ம்மை பொருந்திய ஐவகை உடற் பொறிகளினால் ஒத்திருக்கும் மிருகங்களை, அருந்தல் பொருந்தல் போன்றவற்றால் ஒத்து இருக்கின்றார் என்பதன்றி உயர்வுடையர் என்று கூற முடியாது.

O ஐம்புல அறிவு மக்கட்கும் மாக்கட்கும் பொது என்பதால் மக்கட் பிறப்பில் மானிடர் என்போர் மனத்தால் மிக்கோரே. மனத்தால் உயர்வுறல் தன்னைத் தான் அறியும் ஞானத்தால் ஆகும்.

கெடுப்பதும் எடுப்பதும் மனமே

15. ''ஐயனே! கெடுக்க வல்லதும், கேடுற்றவர்களைத் தலை எடுக்கச் செய்ய வல்லதும் இந்த மனம் தான். அந்த மனத்தை தன் வயப் படுத்த வல்லவன் பிறவிப் பெருங்கடலை விரைவில் கடக்க வல்லவன் ஆவன்.

O மனத்தின் வழி நடப்பவன் கேடுறுவான், மனத்தைத் தன் வழி நடத்துபவன் தலையெடுப்பான். மனத்தை அடக்க வல்லவன் பவக்கடல் கடக்க வல்லவன் ஆகின்றான்.

O கொடுக்க வல்லதும் எடுக்க வல்லதும் என்ற தொடர்கள் திருக்குறளை நினைவு படுத்துகின்றன.

காற்றை அடக்கின் மனம் அடங்கும்

16. ''ஆகவே அறிவின் மிக்க செயற்கரிய செயலெல்லாம் நேயம் மிக்க மனத்தை அசைவற்று நிறுத்துதல் தான். ஆதலால் வாயு நிற்க மனமும் ஒருங்கே நின்று விடும். ஓடுகிற தண்ணீர் நின்று விட்டால் அதன்மேல் உள்ள துரும்பும் நின்றுவிடும் அல்லவா?

O மனம் நிற்க, வாயு நிற்க வேண்டும். அதற்கு யோகமே சாதனம்.

O எடுத்துக் காட்டு உவமை யணி.

கடிவாளமும் வாயுவும்

17. ''விரைந்து ஓடும் குதிரையை நிறுத்தக் கருதினால் உள்ளே கொண்டிருக்கும் வாயிலுள்ள கடிவாளத்தை இழுப்பார்கள். அது போலப் புலங்களில் ஓடுகின்ற பெரிய மனம் நிற்க, அதனை நிறுத்தக் கருதினால் ஓடித் திரியும் பிராணன் முதலிய வாயுக்களைத் தம் உடலின் உள்ளே நிற்கும்படி இழுத்துக் கட்டுவர்.

O அழகான எடுத்துக் காட்டு உவமை

வாயுவை வசமாக்கில் மனமும் வசமாகும்

18. ''பிறவிக்கு இயலாகப் பொருந்திய நாடிகள் மூன்று. அந்த மூன்றையும் விட்டு வாங்கியும் பொருந்த அசைவற

நிறுத்தியும் அதன் இட்டத்தின் வழிப் போகாமல் தடுத்தும் பிராண வாயுவை தன் வயப் படுத்தினால் உட்கொள்ளாது மனமும் தன் வயப்படும்.

O நாடிகள் : இடைகலை பிங்கலை சுழிமுனை என மூன்று. வாயுவை விடுத்தல் வாங்கல் நிறுத்தல் தடுத்தல் என்பன சாதக அங்கங்கள். விட்டு வாங்கி நிறுத்தித் தடுத்த மனமும் [காற்றுடன்] வசப்படும்.

வேற்றுமையற்றது நன்மனம்

19. ''ஓட்டையும் பொன்னையும், உறவையும் பகையையும், வறுமையையும் செல்வத்தையும் புகழையும், வீட்டையும் காட்டையும் வேற்றுமையின்றி நோக்கக் கூடிய தன்மையைப் பெற்ற மனமே நன் மனம் ஆகும்.

O நன் மனத்தின் இயல்புகள் இங்குக் கூறப்பட்டன. நன் மனம் என்பது பயிற்சியால் வருவது.

தீ மனம் ஆடும்

20. ''நிலையுற்ற காமம் வெகுளி மயக்கம் என்ற நிலைகளோடு கூடி, வீசுகின்ற காற்றின் முன்னின்ற விளக்கைப் போல அலைந்து கொண்டிருக்கின்ற மனம் தீய மனம் எனப் படும். அத்தகைய தீ மனத்தை யாரும் தடுக்க முடியாது.

O மயக்கம் காமம் வெகுளி கூடி ஆடும் மனம் தீ மனம்.

இலிங்க வடிவமாதல்

21. ''மடங்காமல் மனமும் பிராணன் முதலிய வாயுக்களும் அடங்கி விடுமாயின் சிவ மயமாதல் இவ்வாறு என்பதை அறிந்து, பிராணன் முதலிய காற்றுக்களைக் கட்டுப் படுத்தியோன் என்றும் அழியாத இலிங்க வடிவே ஆகின்றான்.''

அல்லமர், வசவண்ணாவரிடம் இவ்வாறு கூறினார்

22. இவ்வாறு உட்பொருளான பலவற்றை, அன்னை போன்ற அல்லம தேசிகன், தனக்குத் தானே நிகரானவனும் வீர சைவம் வளர்க்கும் மன்னனும் ஆன வசவ தேவனிடம் உரைத்தான்.

அகமகிழ்ந்து அல்லமரை வசவர் புகழ்தல்

23. ''நின்னைக் காணவும், வணங்கவும், வாழ்த்தவும் நின் மொழி கேட்கவும் என்ன மாதவம் செய்யக் கிடந்தனவோ!'' என்று சொல்லி வசவ தேவன் அல்லமனைப் பணிந்தான்.

சித்தராமர் முதலியோர் அல்லமரை போற்றுதல்

24. சித்த ராமனும், சென்ன வசவனும், பிறவிப்பிணிப் பின்று விடுபட்ட மருண் மாச்சன் முதலாய அன்பர்கள் பலரும், என் (கவிஞரது) புல்லிய தலைமேல் வைத்த அல்லமனது தாமரை மலர் போன்ற திருவடிகளை வாழ்த்தினார்கள்.

அடியார் பலர்க்கும் அருள்புரிய அல்லமர் நினைத்தல்

25. அங்ஙனமாகிய காலையில், அல்லமனாகிய அறிவுக் கடல், உலக முழுதும் போய் மற்றைய அடியார்களுக்குப் பேரின்பம் தருவேன் என்று நினைத்தனன் என்பர் அறிஞர்.

O நிறை ஞானம் பெற்ற மகா யோகியர், மற்றைய அடியார்க்கும் இன்ப நெறி காட்டுதலை அருட்பணியாக மேற்கொள்கின்றனர். O

# 19. கோரக்கர் கதி

கதைக் குறிப்பு : கவிஞர் கூற்று

1. வசவண்ணர் முதலிய மாதவரை விட்டு நீங்கி, இளம் பிறை தவழும் முடியை உடைய பருப்பத மலையை அடைந்து, தருப்பைப் புல்லைச் சுட்டு எரிக்கும் (யாகம் செய்யும்) அந்தணர் போற்றும் கோரக்கர் என்னும் பெயரை உடைய சித்தர் பொருந்தி ஏற்குமாறு உண்மை நிலையை எந்தை அல்லமன் இயம்பிய வகையை எடுத்துச் சொல்லுதும்.

கலியாண புரத்தை விட்டு அல்லமர் நீங்குதல்

2. ''பொறிகளின் வழியே செல்லாது நெஞ்சம் தூய்மையாகும் வண்ணம், உரைக்கப் பெறும் நெறிமுறை வழுவாமல்

நீங்கள் நில்லுங்கள். மேலாய அறத்தின் வழி நிற்போரை உலகில் பார்த்துப் பின் இங்கே வருவோம்'' என்று அவ்விடத் திருந்த அன்பவர்களுக்கு அல்லமன் இனிது இயம்பி எழுந்து மின்னலைப் போல மறைந்து விட்டான்.

அல்லமரைப் பிரிந்து வசவண்ணர் முதலியோர் வருந்தல் (2)

3. கன்றின் வாயிலுள்ள தனது முலையைத் தளர்த்திக் கறவை (பசு) யானது தான் நின்ற இடத்தை விட்டு அகன்றது போல, ஐயன் அல்லமன் சென்றனன் என்று திசை தோறும் மயங்கி, கொடிய நெருப்பில் பட்ட வெண்ணெய் போல் மனம் நெக்குருகக் கண்ணீர் மல்கி வசவண்ணர் முதலாகிய நிகரற்ற மெய்யன்பர்கள் யாவரும் அழுது நின்றனர்.

O உவமை யணி.

இதுவும் அது

4. (அந்த மெய்யன்பர்கள்), ''நல்லோரைக்காணுதலை விட்டு விடுக. காண விருப்புறின் அங்கே அவர்களிடத்தில் நட்புப் பேணுதலை விட்டு விடுக, நட்பு வைத்தால் பிரிவுறல் நீங்குக. பிரிவுறாது நின்றால் மாட்சிமைப்பட்ட உயிர் உடம்போடு கூடி வாழும் வாழ்க்கையினின்று பற்றாமல் ஒழிக'' என்று சொல்லி, உணவு கொடுக்கும் ஒரு தாயை நீத்த குஞ்சுகள் போல் மன வருத்தம் கொண்டனர்.

O உவமை அணி

சித்த ராமர் சொன்னலாபுரம் சேர்தல்

5. வசவண்ணன் தன் அங்கையில் இட்ட லிங்கத்தைக் கண்டு முன்பு போன்றே உவகை பூத்துப் பூசித்து அவ்விடத்து இருந்தான்.

அல்லமனுக்குத் தொண்டனாக இருந்த சித்த ராமன் சொன்னலாபுரம் என்ற ஊரில், உள்ளத்தில் போற்றிய அல்லமனுடன் போய் தான் முன்பு கொண்டிருந்த கொடிய கொள்கைகளை விட்டுவிட்டுத் தன்னிலையில் நின்றான்.

அவரவரும் தத்தம் இடம் சென்றனர்

6. அல்லமன் உரைத்தருளிய உயர் மொழிகளை உள்ளத்தில் விடாது கொண்டு மற்றவர்களும் நற்செயல்கள் புரிந்து தங்கள் தங்கள் இடங்களிற் சென்று வாழ்ந்திருந்தனர்.

எண்ணற்ற பிறவிகளில் இயற்றிய நல் வினையால் தன்னைத் தொழுதற்கு இயைந்த அடியார்களிடத்தில் செல்லுவேன் என்று கூறிச் சென்ற அல்லமனது செயலை இனித் தெரிவிக்கத் தொடங்குவாம்.

அல்லமர் திருப் பருப்பதம் அடைதல்

7. தீப் போலும் தளிர் தளிர்க்குமாறு இளம் மரங்களை உடைய தோப்பில் தென்றற் காற்று வருதல் போல், அன்பர்களின் கண்ணும் மனமும் களிக்கும்படி அழகிய வேறோர் திருவடிவம் கொண்டு சென்ற கருணை வள்ளலாகிய அந்த அல்லம தேவன், கருமுகில்கள் தவழ்கின்ற பருத்த அடியையுடைய பருப்பதத்தைக் கண்டு சென்றான்.

O பருப்பதம்: (பர்வதம்) ஸ்ரீ சைலம், திருச்சயிலம் [திருமலை] உவமை.

பருப்பத வருணைகள் (18)

பருப்பதத்தின் பெருமை உரைத்தற்கு அரிது

8. அல்லமன் கண்டு செல்லும் அந்தப் பருப்பதத்தின் சிறப்பைச் சொல்லத் தெரியாதவர்களாகி, தேவர்களுக்குள்ளும் முனிவர்களுக்குள்ளும் வல்லவர் எனப் பெயர்பெற்ற அறிஞரும் மயங்கி நிற்பார்கள். அங்ஙனம் இருக்க, புல்லறிவாண்மை (அற்ப அறிவினை ஆளுதல்) கொண்டு அஞ்சாமல் யான் சிறிது புகலுவேன்.

திருப் பருப்பதம் அறிவுக் கதிரவனைத் தலைமேல் தாங்கி நிற்கிறது

9. நாள் தோறும் உதித்து ஒடுங்கும் ஞாயிறானது, தன்னைச் சுமக்கும் சிகரம் பொருந்திய மலை இன்னது என்று அறியாமல் கிழக்கு மேற்காகத் திகைத்து நிற்கவும், அத்தகைய (பூத) சூரியனுக்கு இடம் கொடுக்காமல், கூடுத

லும் பிரிதலும் இன்று அந்தத் திருக்குன்றம் பிறைத் திங்களைத் தலையில் வைத்துள்ளதும் பேரின்பத்தைத் தன் திருவடியால் தருவதும் ஆகிய அறிவு ஞாயிறாம் இறைவனைத் தன் தலையில் தாங்கிக் கொண்டிருக்கிறது.

O ஸ்ரீ சைலத்தில் சிவன் வீற்றிருக்கும் கோயில் உளது என்பதாம்.

கைலைமலை வெண்மையாக இருத்தற்கு ஒரு காரணம்

10. பொற்குன்றம் ஆகிய மேருமலை முதலாக மலைகள் அளவில்லாமல் இருக்க, சிலாதர முனிவர் மகனான (நந்தி தேவர் ஆகிய)தும் உச்சியில் வெண்திங்கள் தவழப் பெற்றதும் ஆகிய திருச்சயிலம் என்ற மலையைக் கண்டு வணங்கியவரை மட்டும் என்னுடைய தலைமேல் (சிவபெருமான்) ஏற்றுகின்றார். இஃது என்ன நியாயம்? என்று துன்பத்தில் ஏங்கி அழுதல்லவா அந்தக் கயிலைமலை வெளுத்துப் போனது? (வெண்ணிறம் ஆனது?)

O தற்குறிப்பு அணி.

O சிலாதர முனிவரின் மகனான நந்தி தேவரே மலைவடிவாக நிற்கிறார் என்பது புராணக் கதைக் குறிப்பு.

மேருவை வில்லாக வளைக்கமுடிந்த காரணம்

11. பரசிவ லிங்கத்தோடு பொருந்திய திருப்பருப்பதம் போல அந்த லிங்கத்தை யானும் தரித்துக் கொள்ளுதற்கு மாசு நீங்கிப் பேறு பெற்றேனில்லை என்று வருந்திச் சோகத் தீயால் மேருமலை குழைந்திருந்த சமயத்தில் விரைந்து சென்று (சிவன்) அதனை வில்லாக வளைத்தானே அன்றி, வளை யணிந்த தளிர் அனைய மெல்லியல்பு உடைய உமையவளுக்கு மனம் குழைந்த சிவன் அதனை வளைத்து விடுவானா?

மைந் நாக மலை கடலிற் சென்று வீழக் காரணம்

12. மலைகளுக்குத் தலைமையான மேருமலையின் மைந்தன் நான்; எனக்குப் பருப்பதம் (மலை) என்று (சிறப்புப்) பெயர் வாய்க்காமல், ஈசன் என்ற பெயர் கடவுளர் பலர்க்கும் பொதுவாக இருப்பினும் அது சிறப்பாக

நெருப்புப் போன்ற சிவனை மட்டும் குறித்து வருவது போல், வழங்கும் தொடர் மொழி இன்றிப் பருப்பதம் என்றே இந்த ஸ்ரீ ஸைசலம் கூறப்பட்டு வருகிறது என்ற வெட்கத்தால் அல்லவா மைந்நாகம் என்ற மலை அலைகடலிற் போய் விழுந்து விட்டது?

O தற்குறிப்பு அணி.

O மைந் நாகம் என்ற மலை, மேருவின் மகனாகிய தனக்கு அடைமொழியின்றிப் பருப்பதம் என்று பெயர் வராமல் கைலை மலை, விந்த மலை, பொதிய மலை என்றாற் போல மைந் நாக மலை என்று தொடர் மொழியினால் வந்த பெயருக்கு நாணிக் கடலில் விழுந்ததாகக் கற்பிக்கிறார் ஆசிரியர்.

விந்த மலையும் மந்தர மலையும் பருப்பதத்திற்கு ஒப்பாகா எனல்

13. தன்னை ஒரு கையினால் பாதலத்தில் விழுமாறு தள்ளிக் கொண்டு வந்த அகத்தியன் தன் தலையால் வணங்கித் தொழும் இந்தப் பருப்பத மலையை அந்த விந்த மலை தோற்றத்தால் ஒக்கும் என்று கூறலாம் ஆயினும் பெருமையால் ஒக்கும் என்று கூறலாமோ? பின்னி எழும் அலைகளையுடைய கடலில் போட்டுக் கடைதற்குப் புன் மத்தாக இருந்த மந்தர மலை, இணையில்லாப் பருப்பதத்திற்கு ஒப்பு என்று கூற ஒண்ணுமோ?

O விந்த மலையின் செருக்குக் காரணமாக அதனைப் பிலத்திடைத் தள்ளினார் அகத்தியர் என்பது, உரைக்கப் பட்டு வரும் கதைக் குறிப்பு.

மலைச் சுனையின் வியத்தகு ஆற்றல்

14. ஒளியுள்ள பிறை மதி போன்ற வெள்ளை நரை கொண்ட கூனற் கிழவன் ஒருவன் சென்று, அரும்புகள் மலர்ந்துள ஒரு சுனையிடத்தில் முழுகினால், தேன் கொப் புளிக்கும் இதழ்களை உடைய நீர்ப் பூவுக்குப் பகையாகிய மலர்களை அணிந்த கூந்தலை உடைய மடந்தை (திரு நீல கண்டரின் பத்தினியார்) சொல்லிய ஓர் ஆணையை வழுவாது

காத்துக் களிக்கின்ற மனத்தை உடைய திரு நீல கண்ட நாயனாரைப் போல (இளமையாக) வந்து மேல் எழுந் திருப்பன்.

O இந்தத் திருச்சைலம் மலைச் சுனையில் முழுகி எழுவோன் திருநீலகண்டனைப் போலக் குமரப் பருவம் எய்துவன் என் பது மலையின் பெருமையைக் கூறுவதாம்.

**மலர் மயமான அம் மலை மங்கையரை நிகர்க்கும்**

15. ஆழ்சுனையில் உள்ள மலர்கள் மாதர் கண்கள் போலத் தோன்றும் அந்தப் பருத்த அரையை உடைய திருச்சயிலம் மலையில் கோட்டுப் பூக்கள் மெல்லிய புதல் பூக்கள் செழுமை யான தேன் நனையும் நீர்ப் பூக்கள் ஆகியவற்றோடு குளிர்ந்த கொடிகளிலுள்ள பூக்களும் சேர்ந்து, புனைமலர் பலவும் சுருண்ட கூந்தலையுடைய மகளிரைப் போலத் தோற்றும்.

O அந்த மலை பலவகை மலர்களையும் உடைமையினால் மலர்களை அணிந்த மகளிர் போலத் தோற்றும் என்பதாம்.

**அருவி நீர் கதிரவனையும் திங்கள் போல் குளிரச் செய்யும் எனல்**

16. தூங்கிசையோடு அருவி வீழ, தொளைக் கையினையும் வெண் கொம்புகளையும் உரல் கால்களையும் ஈரமான கன்னத்தையும் உடைய நெடுநல் யானை அந்த அருவியின் நீரைக் கையினால் ஏந்த, நெருப்புத் தான் மேனோக்கிச் செல்லும் - தேங்கும் தண்ணீர் மேனோக்கிச் செல்லாது- என்ற தருக்க நூல் கொள்கை ஒழியுமாறு, (அருவி நீர்) மேலே சென்று அழகிய கதிரையுடைய கதிரவனைக் குளிர்ந்த வெண்திங்கள் போன்று இருக்கின்றது என்று யாவரும் கூறும் படி நீர்த் திவலைகளைப் பொழியும்.

O மேலிருந்து வீழும் அருவி நீரை யானை கையினால் ஏந்த அந்த நீர் தருக்க நூற் கொள்கைக்கு மாறாக மேற்சென்று திவலைகளாகச் சிதறுவதால் சூரியன் முழு வெண் திங்கள் போன்றிருந்தது என்பதாம்.

O அதீதமான கற்பனை.

அம் மலையில் அரிய யாழ் ஓசை

17. விஞ்சையர்கள் விரலால் தெறிக்கின்ற நரம்பினை உடைய வீணையிலும் யாழிலும் எழுகின்ற இனிய ஓசையினை யானை போன்ற வென்றிக் குன்றவர் (மலை வாணர்) புறம்பினின்று எப்போதும் தம் செவிகளால் மடுத்துக் கேட்பார்கள். தனி நிலையான யோகத்தில் இருப்போர் யோகத்தில் எழும் அரிய யாழொலி போன்ற உள்ளொலியைத் தம் அஞ்செவி நிறையக் கேட்பார்கள்.

○ மலை வாணர், விஞ்சையரின் வீணை, யாழ் ஓசைகளை-யும் யோகியர் தத்தம்முள் எழும் யோக ஒலியையும் கேட்பர்.

சிகரம் ஒன்று பொன்முடி போன்று விளங்குதல்

18. பெருமை பொருந்திய கருப்பக் கிரகத்தின் மேலே உருகி யோடத் தக்க பசும் பொன்னாற் செய்யப்பட்டு மேலோங்கி நின்ற ஒரு முடியானது, மேலோங்கிய சிலாதரன் என்பவனு-டைய நெடுந் தவத்தாற் பிறந்த பிள்ளைக் குன்று என்னும் திருச் சயில மலையின் மேலாக ஓங்கிய சிகரத்தின் மீது கவிழ்த்த பொன் முடியை ஒக்கும்.

○ கருவினோடு பெயரிய இல்: கருப்பக் கிரகம். குறிப்பு: 'கருவொடு பெயரிய இல்' என நெடுநல் வாடையிலும் வரு கிறது. கருப்பக் கிரகம் என்பதை மறுத்து மயிலை சீனி வேங்கடசாமி கரு என்றால் பெரிய என்று பொருள் கூறி அதற்குக் கன்னடத்திலிருந்து பொருளை மேற்கோள் காட்டு கிறார்.

சோதி மரத்தில் முட்டை வைத்த பறவைகள்

19. கதிரவன் வந்த பகற்பொழுதில் கூடுகட்டிச் சோதி மரத்தில் முட்டை வைத்த பறவை இனங்கள் இரவுப் பொழுதில் அடை காக்கக் கருதி வந்த பொழுது அந்த மரம் வெங் கனல் பற்றிக் கொண்டது என்று மேலே வட்டமிட்டுக் கவலை கொள்ளும்.

○ ஒளிமரம், என்ற ஒருவகை மரம் இரவில் ஒளி செய்யும் தன்மை கொண்டது. அதன் இயல்பை உணராது, பகலில் அதில் குடம்பை தெற்றி (கூடு செய்து) பொறை உயிர்த்த

பறவைகள் இரவில் வந்த போது அது தீப்பற்றிக் கொண்டதாகச் சுழன்றன. ஒளி மரம் போன்றே வெளிச்சப் புல் என்று புல்வகை இரவில் நெருப்புப் பற்றினாற் போல விளங்கும் எனக் கூறுவர்.

அங்குள்ள மூங்கில்கள்

20. நறுமலர்க் கூந்தலும் வெண் முத்தனைய பற்களும் உடைய மலை மடந்தை (உமையவள்) மிக்க அறம் வளர்ப்பதற்கு, கறைமிடற்று இறையாகிய சிவன் நெல்லை அளப்பதற்கு இரண்டு நாழி அளவு சிறியது (போதாது) என்று ஒரு பெரிய நாழி வேண்டும் என, மணமலர்ச் சிகரமுள்ள இந்தத் திருசைலம் மலையிலுள்ள மூங்கில்களுள் ஒன்றில் அதனை அடைந்தாள்.

O திருச் சைலத்து மலையிலுள்ள மூங்கில்களின் பருத்த இயல்பினை இவ்வாறு தெரிவிக்கிறார்.

ஒரு மரத்தை வெட்டக் கிடைத்தது பசும்பொன்

21. திருமால் வந்து தொலைவில் நின்று வணங்கத் தக்க அந்தத் திருச்சைல மலையில் வறியவன் ஒருவன் விறகு விற்கும் நோக்கோடு போய்க் கூரிய கோடரியால் ஒரு மரத்தைத் துணித்ததும், மேன்மை பொருந்திய பசும் பொன் ஆகும் வகை கொண்டு மகிழ்ச்சியோடு தனது இருப்பிடத்துக்குச் செல்வான்.

O விறகு வெட்டப் போன இடத்தில் புதையல் கிடைத்தது போல என்பது பழமொழி. அதனைக் கவிஞர் திறமையாகப் பயன்படுத்துகிறார்.

வான் அளாவிய மரங்கள்

22. கொண்டல்கள் (மழை மேகங்கள்) முழவு போல் முழங்குகின்ற, மாலை போல் இழியும் வெள்ளிய அருவிகளையுடைய அந்த மலையில் வண்டுகள் இசை பாடி மொய்த்து மலர்களைக் கிண்டி அதில் ஒழுகுகின்ற செந்தேனை உண்டு உறங்குகின்ற பூங்கொம்புகளை உடைய உயர்மரத்தில் மந்தி ஏறி மேலே சென்று அங்கு வானின் கண் இலக்கினமாக விளங்கும் நண்டினைக் கண்டு அஞ்சித் திடீர் என்று இறங்கிவிடும்.

O அதீதமான கற்பனை. இராசி நெண்டு : கர்க்கடக இராசி. O கொண்டல்கள் முழவின் ஏங்க என்ற கம்பர் கூற்று இங்கு ஒலிக்கிறது.

வெண்யானையின் அறியாமை

23. ஆண் யானை தளிராகிய உணவைத் தேனில் தோய்த்துத் தன் வாயில் கொடுக்கும் செயலைப் பெண்யானை, பளிங்கு மண்டபத்தின் நிழலில் பார்த்து வருந்தி வேறோர் பெண்யானைக்கு அது கொடுப்பதாக மனம் மருண்டு கூர்மையான கொம்பையுடைய தன் ஆண்யானையை முனிந்து போகும்படியான ஆரவாரத்தை உடையது அந்தத் திருச் சைலம்.

O தனக்குக் களிறு கொடுக்கும் உணவுச் செயலைப் பளிக் கறையில் காண முடிந்து அதனைப் பேதைமையால் பிறிதொரு பிடி என்று நினைந்து பரிந்து மயங்கி அது முனிந்து செல்லும் கம்பலை உடையது அக் குன்றம் என்பதாம்.

சந்திரனில் இருக்கும் மானைப் பிடித்துத் தருமாறு குறமகள், குறமகனை வேண்டல்

24. சந்திரனிடத்துள்ள (களங்கம் ஆகிய) மானைப் பிடித்து நீ கொடு என்று அழகிய நெற்றியை உடைய ஒரு குற மடந்தை வேண்ட அதனைக் கேட்ட குறமகன், முற்காலத்தில் பெண்ணின் சொல்லைக் கேட்டு இராமனானவன் பிடிக்க எண்ணம் கொண்டது போல் என்னால் எண்ண முடியவில்லையே இதற்கு என்செய்வேன் என்று மனம் வருந்தி நிற்பான்.

O மலையின் உயர்ச்சியை வருணிக்கும் போக்கில் இந்தப் பாடல் இராமனது செய்கையை நினைவுபடுத்துகிறது.

திருச் சைலத்தில் மலையருவிகள்

25. முக்கண் தம்பிரானாகிய இறைவன் என்னிடத்தே தங்கியிருப்பதால், (அத்தகைய பேறு பெறாத) மேரு, மந்தரம் முதலான வெற்புகள் எல்லாம் (என் பெருமை கண்டு பகை

கொண்டு) எதிரிகள் ஆகின்றனர் என்று அஞ்சி அந்தச் சைலம் என்ற சிலம்பு (மலை) அழுவது போல, நிரம்ப வெள்ளருவிகள் பெருகி வரும் அழகினை உடையது.

0 தற்குறிப்பு அணி.

### அல்லமர் திருச்சைலம் அடைந்து கோரக்கர் இருப்பிடம் நண்ணுதல்

26. இத்தன்மையவான வளம் பெருகிய அழகிய எமது சைலமலையை, அன்னையினும் இனிய எங்கள் பிரானாகிய அல்லமன் போய்ச் சேர்ந்தான். அங்கே அவன், தனியாக உடல் சித்தி (காய சித்தி) பெற்றுத் தருக்கி இருந்த கோரக்கன் நனிமகிழ்ச்சி கொண்டு தங்கியிருக்கும் நல்ல இடத்தை அடைந்தான்.

### அல்லமரை வரவேற்ற கோரக்கர் அவருக்கு இருக்கை அளித்தல்

27. (கோரக்கன் என்ற) அந்தப் பெரிய சித்தன் அல்லம தேவன் நேரே வருதலைப் பார்த்து, தனக்கு ஒப்பான ஒரு சித்தன் என்று நினைத்து, தன்னைத் தானே பெருமையாகக் கொண்டு, நித்தன் ஆகிய அல்லமனது அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற அடிகளை வணங்கி நின்று கைகுவித்து, ''ஞான சித்த! நீ வருக!'' என்று வரவேற்று ஓர் இருக்கையில் அமர வைத்துச் சொல்வான்.

### கோரக்கர் அல்லம தேவரைப் போற்றி உரைத்தல்

28. "கதிரவன் எழுந்ததும் எனக்கு இன்று தான்; அது மட்டுமின்று, கண்கள் தெரிய முடிந்ததும் இன்று தான். சிறந்த நின் வருகையினால் யான் இன்று இவை பெற்றேன் என்றால் ஒப்பிலாத் தவம் செய்யாதார்க்கு உனது வருகை கிடைத்தற்கு எளியதோ, ஆராயும் இடத்து?

### அடியாரைப் போற்றாதார்க்கு ஊதியம் இல்லை எனல்

29. ''ஒருவன் தன்னைத் தாங்கிக் காப்பதான நற்குணங்களைச் சார்ந்து, மெய்ம்மை கெடாத அடியார் இனத்தைச்

சேராவிடில் கண்ணுதற் கடவுளையும் சேரான் என்பது நன்னூல்களின் கூற்று. சொல்லுமிடத்து, முதல் இலார்க்கு ஊதியம் கிடைக்காதல்லவா?''

O முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம் சார்பி லார்க்கு இல்லை நிலை என்ற திருக்குறளின் சொல்லும் பொருளும் இங்கே வைக்கப்பட்டுள்ளன.

O வேற்றுப் பொருள் வைப்பணி,

O கோரக்கர் கூறிய வரவேற்புரை இனிதாக உள்ளது.

முகமனுக்குப் பின் அல்லமரை யார் என்று உசாதல்

30. வந்த ஒரு விருந்தினர்க்கு உரைக்கக் கூடிய முகமனுக்கு ஒப்பாக, குருபரனாகிய அல்லமனுக்கு இத்தகைய இன்மொழி கூறி ''இங்கு வந்த பெருந்தகையே! நீ யார்?'' என்று அருட் கடலாகிய அல்லமனை வாழ்த்தி வினவி நின்றான் (கோரக்கன்).

தன்னை அறிந்தவன் என்னை அறிவான் என்று அல்லமர் உரைத்தல்

31. "செறிந்த மூல ஆங்காரமாகிய பிறவிக்காரணத் தினின் றும் வேறு ஆனது என்று அதனை விட்டு நீங்கித் தன் நிலை கெடாமல் தன்னைக் கண்டவன் என்னையும் வேறு இலாது காண்பான். அழிந்து போகும் உடலைப் பெரிதாகப் பேணும் (தேகாபிமானி) ஒருவனிடம் மதிப்பதற்கு என்ன உளது;'' என்று, அறிந்த ஞானிகளைத் தானாக அறியும் அல்லமன் உரைத்தான்.

O தற்காண்டல் : சிவமே தானெனக் காண்டல்

காய சித்தி பெற்றோன் அழியான் என்கிறார் கோரக்கர்

32. ஐம்பெரும் பூதத்தால் ஆன (பௌதிக) மேனியே தான் என்று கருதிய அறிவை உடைய கோரக்கன், ''இறைவனது அருளினாலும் குளிகை முதலியவற்றாலும் ஊனினால் ஆகிய

யாக்கையை உறுதி (காயசித்தி) பெற்றவன் என்றும் அழி யான் அது பெறாதவன் அழிவான்'' என்று கூறினான்.

**உலகாயதன் போல் பேசுகிறாய் என்று அல்லமர் உரைத்தல்**

33. ''உடம்பு அழிவின்றி வாழ்தல்தான் வாழ்தல் எனவும், ஊனை நிரப்பிச் செய்யப் பெறும் உடம்பு அழிதல் தான் உயிர் அழிதல் எனவும் உரைத்தாய். தனக்கு உடம்பு வேறு என்று அறியாத உலகாயதனுக்கு ஒப்ப, உடம்பு தான் உயிர் என்று நீ நினைத்தாய் போலும்!

**எனது உடம்பு என்று சொல்லுவது ஏன் என்கிறார் அல்லமர்**

34. ''ஐயனே! உடம்பே தான் எனப் படுமாயின் இவ்வுல கில் எனது உடம்பு என்று வழங்குவது என்ன காரணம் பற்றி? தன்னை விட்டுப் போக்கும் ஆடை பொன் முதலாய பொருள்களுள் ஒரு பொருளை என்னுடையதென்று போற்றிக் கொள்பவர்களில் அப்பொருளை யான் என்று கூறத் தக்கவர், பார்க்குமிடத்து, யாராவது இருக்கின்றனரா? சொல்லுக!'' என்று அல்லமன் கூற,

O எனது ஆடை எனது பொன் என்பது போல எனது உடம்பு என்று தான் கூறுகின்றோமே அன்றி உடம்பை யான் என்று வழங்காதது ஏன் என்று கேட்கிறார் அல்லம தேவர். உடம்பும் உடம்பினுள் இருக்கும் உறுபொருளும் வெவ்வேறு.

**கோரக்கரின் கேள்வி**

35. ''யான் நினைத்தேன் யான் ஓடினேன் என்று எவரும் சொல்லுகின்றமையால் அப்பொழுது 'தான்' என வழங்கப் படுவது யாது? எனக்கு அந்த உறுப்பினைத் தெளிவு படுத் துக'' என்று கோரக்கன் இயம்ப, ஞான நற் குருபரனாகிய அல்லமன் நயந்து இதனைச் சொல்லுவான்.

**தான் என்பது பலவாகி வழங்கி வரும்**

36. ''நான் நினைத்தேன் என்று கூறுதல் அந்தக் கரண (மனம் புத்தி சித்தம் அகங்காரம்)த்தின் புடைபெயர்ச்சியில்

பொருந்துவதாக வழங்கும் தன்மை உடையது. ஆகவே உடலும் ஐம்பொறிகளும் அந்தக்கரணங்களும் ஆகிய இவை யாவும் நான் என்று கூறும்படி வழங்கி வரும். அங்ஙனம் வழங்கி வர, தான் என்பது பலவாகிக் காணப்படும். அந்தக் காரணத்தால் நீ நவின்றது கற்பனை என்று அறியக் கடவாய்'' என்று அல்லமன் கூற,

○ யான் நினைத்தேன் என்பது கரணத்தினைப் பொருந்தும் யான் ஓடினேன் என்பது உடலினைப் பொருந்தும். யான் பார்த்தனன் என்பது பொறியினைப் பொருந்தும். அனைத்தும் தானென வரும், அனைத்தும் தானன்று. ஆகத் தான் பலவகையாக வழங்கி வருகிறது. இவ்வாறு ஒன்றின் புடை பெயர்ச்சி ஒன்றுக்கு ஆதலால் அத்தியாசம் (கற்பனை)எனக் கூறினார்.

**கோரக்கர் உயிர் பற்றி வினாதல்**

37. ''என் உயிர் நீங்கும் என்று கூறுமிடத்து அவ் வுயிரை யன்றி, அங்ஙனம் கூறுதற்கு, வேறோர் உயிரும் உண்டோ இதனை, பழிப்பில்லாத நல்ல அருட் குன்றம் போன்றவனே! ஓர்ந்து கூறுக!'' என்று கோரக்கன் கேட்க, அதற்கு, செழிப்பான மென்மலர் போன்ற தம் திருவடிகளால் எம்மை ஆளும் அல்லமன் சொல்லுவான்:

**உயிர் என்பது ஆகு பெயராக ஆன்மாவைக் குறிக்கும் எனல்**

38. ''உயிர் என்ற பெயர், உடம்பினுள் போக்குவரவு செய்யும் காற்றுக்கு இயற்பெயராகும், அது தனக்கு (உயிர்க்கு) வேறாக நிற்கும் ஆன்மாவிற்கு ஆகு பெயராகும் என்று இயல் (தமிழ்) உணர்ந்தவர்கள் இயம்புவார்கள்'' என்று எமக்கு ஆசானாகிய அல்லமன், ஒன்றை ஒன்றாகக் கொள்ளும் மயல் தீரும்படி உணர்ந்து இந் நிலையை உணர்த்தினன்.

○ இலக்கணத் தெளிவு, உயிர் (மூச்சுக் காற்று) ஆகு பெயராக உயிரை, ஆன்மாவை உணர்த்துகிறது.

உடம்பை நான் என்று நம்பிக் கெட்டாய் எனல்

39. "ஆன்மாவாகிய தன்னை மெய்யறிவின்ப வடிவம் என்று அருமறைகள் சாற்றுகின்றன. ஆனால் நீ, மின்னலைப் போல் அழிந்து விடும் தசை நிணம் என்பு தோல் இயைந்த உடம்பினை யான் என்று கருதிக் கெட்டனை! இஃது என் கொல்!'' என்று மேலும் உரைப்பன்:

வீட்டை விரும்பியவன் உடலைப் பெரிதாக மதிக்கக் கூடாது எனல்

40, ''எல்லாராலும் அஞ்சப்படும் பிறவிக்குக் காரணமாகிய மயலை ஒழித்து, உண்மையாகிய வீட்டை அடைதற்கு உள்ளம் வைத்தவன், மல வடிவமான இந்தத் தேகத்தை, தெருவில் தூய்மையற்ற ஒன்றனைத் தீண்டி அதனை அருவருப்பவன் போல் அருவருத்து அகற்றுவன்.

மருந்து கொண்டு நோயுடன் இருக்க விரும்பாதே எனல்

41. ''மருந்து கொண்டு நோயைத் தீர்த்துக்கொள்பவர்கள் போல, சிவம் தங்கி இருந்த இந்த உடம்பினை விடும்படி பெரியோர்கள் எண்ணம் கொள்வர். ஆங்ஙனம் இருக்க, மருந்து பெற்றுக் கொண்டு நோயுடன் கூடியிருக்க எண்ணம் கொள்பவன் போல, உனக்கு வாய்த்த இந்த உடம்போடு கூடியிருக்க எண்ணினை; இஃது என்ன அறிவோ!

O உவமை யணி. மருந்து சிவம். நோய், உடம்பு.

காரியம் அழியும், காரணம் அழியாது

42. ''பிறந்த உடல்களில் ஒன்று சாகாத பெருமை உடையதாகுமோ? வானை நோக்கி எறியப் பெற்ற கல் விழாமல் இருப்பது இங்குக் கிடையாது. எல்லாவற்றானும் மிகச் செறிந்த காரியம் எனப்படுவது என்றாயினும் அழிந்தொழியும், காரணம் எனப்படுவது என்றும் அழியாது நிற்கும்.

O உவமை. கல் கீழே விழும்; ஐம்பூதங்களின் காரியம் ஆன உடல் ஐம்பூதமாகாது இருப்பது இங்கு இல்லை. உடல் காரியம், ஐம்பூதம் காரணம்.

உடல் அழியும்: வீடுபேற்றை விரும்புக எனல்

43. ''காய சித்தி மருந்துகளால் உடல் நித்திய மானது என்று நீ ஏற்பாடு செய்து கொண்டது, உடலோடு இருந்து வாழும் காலம் பல என்று எண்ணம் கொண்டு அல்லாமல் வேறு காரணத்தால் இல்லை. அரிய தவம் உடைய கோரக்கனே! நீ உடலோடு பொருந்தி, அஃது அழியாது என்றிருப்பது பொருந்தாது, இனி, வீடு அடைய விரும்புக'' என்று சொல்லினன் ஐயன் அல்லமன்.

O மருந்தினால் உடல் நித்தம், அதனோடு கூடி வாழும் நாள் பன்மை என்று கூறியதனால், மருந்து இல்லாத பொழுது அநித்தம் எனவும் வாணாள் சின்மை எனவும் பெறப்படும்.

என் உடல் அழியாது என்கிறார் கோரக்கர்

44. ''என்ன சொன்னாலும் சரி, என் உடல் அழிவுறாது. வீண் வாது செய்வதால் என்ன பயன்? ஆதிநாதன் அருளினால் இப்போது எனது வலியைக் கண் கூடாகக் காட்டுவேன்'' என்று, கோரக்கன், தீதிலா அருள் வாரி (கடல்) ஆகிய அல்லமனோடு உரைத்து இதனைச் செய்வான்.

வாள் ஒன்றைக் கொடுக்கிறார் கோரக்கர்

45. இனிய இசைக் கருவிகள் போல் முழங்கும் வெள்ளருவிகளை உடைய மலைகளின் இறகுகளை வெட்டி வீழ்த்திய தேவர்கோனின் வயிரப்படை போன்ற ஒளிர் கூர் முனையினையுடைய ஒப்பற்ற ஒரு வாளைக் கோரக்கன், அல்லம தேவனின் கையிற் கொடுத்து உனது பெரும் புய வலிமையினால் என்னை வீசுக என்று சொல்லி,

மிகச் சிறு அளவு தோல் அறுந்தாலும் நான்
சித்தன் இல்லை என்று கூறல்

46. ''தலைவனே! ஈயின் சிறகு அளவு தோல் அறுமாகிலும் நான் சித்தன் அல்லேன்'' என்று செருக்குடன் எதிரில் நின்றனன். இதைக் கண்டு அல்லமன் 'நான் இவன் கருதிய

தையே செய்து இவனது நெஞ்சில் வைத்திருக்கும் பெரிய செருக்கினை ஒழிப்பேன்' என்று தனது அருள் உள்ளத்தில் உறுதி கொண்டான்.

### கோரக்கர் மேல் அல்லமர் வாளை வீசுதல்

47. அருள்மாரி யாகிய அல்லம தேவன். அவன் கையிலி ருந்து வாங்கிய வாளினை மின்னல் போல் வீசி, ஓங்கிய மேகத்தில் எழும் இடியேறு போல ஒலியுண்டாகச் செய்து அவன் உடம்பில் பட, பெரிய மலை மீது எறிந்தான் எனத் தாக்க, அவ்விடத்துக் 'கிண்' என்று ஓர் ஓசை எழுந்தது.

### அவ்வொலியால் உண்டான நிலைகள்

48. அழகிய சைல மலை நடுங்கியது, வலிமையும் சீற்றமும் உடைய அந்த அரக்கன் (இராவணன்) வந்து இம் மலையை யும் இன்று எடுத்தல் செய்கிறான் என்று, உரைப்பதற்கு அரிய அச்சமுற்று மலைமடந்தையான இறைவி சிவனது தோளைப் புல்லினள்.

### எங்கணும் அச்சம் மேவுதல்

49. தமது யாழொலி கேட்டுக் கொண்டிருந்த அசுணம் (ஒரு வகைப் பறவை) வேடரின் அழகிய கூந்தலையுடைய மகளிரின் பறையொலி கேட்டு அயர்ந்தது போல் வித்தியா தர மகளிர் மயங்கினர். பறவைகள் கால் உதறி எழுந்தன. உறங்கிய விலங்குகள் எழுந்து ஓடின. முகில்கள் மழை பொழிந்தன.

○ கடிய ஓசை கேட்பின் நடுங்கும் இயல்பினது அசுணம், அது மா எனவும் கூறுவர்.

### கோரக்கரின் செருக்கு மும்மடங்கு ஆதல்

50. இவ்வாறு (கிண் என்று) ஒலி உண்டாகவும், உடல் சிறிதும் பழுது படாமலும் இருக்க, முன்னர்த் தான் கொண் டிருந்த செருக்கை விட மும் மடங்கு அதிகமாக, எனக்கு நிகரானவர் இல்லை என்று எண்ணித் தானே தன்னை மிக வியந்ததைத் தலைவனாம் அல்லம தேவன் அறிந்தான்.

O வியவற்க எஞ்ஞான்றும் தன்னை என்பது திருக்குறள் அடி.

அல்லமர் வாளினைக் கோரக்கரிடம் கொடுத்தல்

51. ''ஓசை உண்டாகும் இங்ஙனம் பேருடம்பில் வலிமை பெற்று, உனக்கு நிகராவோர் காற்று இயங்கும் இப் பேருல கில் எவரும் எங்கும் இல்லை'' என்று கைகொட்டிப் புன்னகை கொண்டு அல்லம தேவன், தன் ஒரு கை மலரில் இருந்த வாளினைக் கோரக்கன் கையில் கொடுத்து இதனைச் சொல்லுவான்:

எல்லா வலிமையும் கொண்டு என்னை வெட்டுக என்கிறார் அல்லமர்

52. ''வாங்கும் வாளினால் உனது வலிமையோடு உன் உற்றார் உறவினர் வலிமைகளையும் திரட்டிக் கொண்டு என்னை வெட்டிப்பார்'' என்று நம் தலைவன் அல்லமன் உரைத்து ஆங்கு நின்றனன். அஞ்சாதவனாகிக் கோரக்கச் சித்தனும் மேலோங்கி வாளினால், ஒப்பற்ற அல்லமனை வெட்டினான்.

O அல்லமர் கூற்றில் நகைச்சுவை அடங்கி உள்ளது.

அல்லமரை வாள் அணுக முடியாமை

53. மிகச் சிறிய அணுவும் பின்னிடத் தக்க மின்னலைக் காட்டிலும் நுண்மையான ஞாயிற்று ஒளியை வெட்டிய வாள் போல், உவமையும் தோற்கும் அல்லம தேவனின் திருமேனி-யில் படாது வாள் வறிது போயிற்று. மூங்கில் தோற்கும் தோள்களை உடைய மாயையின் படா (துகில் அணிந்த) முலை படாத, யாதொரு நறுமணமும் பின்னிடத் தக்க தண்மை பொருந்திய சோதியாகிய அல்லமன் மேல் வாள் படுவதற்கு அதற்கு வல்லமை இருக்கிறதா?

அல்லமரின் அடிகளில் வீழ்கிறார் கோரக்கர்

54. வானத்தை வெட்டி வெட்டிக் கை சோர்ந்த கோரக்க நாதன் மிகவும் மனம் வியந்து, 'நான் வணங்கத் தக்க பரஞ் சுடர் இவன்' என்று மெய் குலுங்க நடுநடுங்கித் தான் கொண்ட செருக்கு ஒழிந்து சிறந்த அன்பின் வழி நடக்கத் துணிந்து,

எங்கோன் அல்லமனின், தேனடைந்த செழுங்கமலத் திருவடியில் வீழ்ந் தெழுந்து செப்புகின்றான் :

### பிழை பொறுத்து ஆட்கொள்ள வேண்டுதல்

55. ''உன்னை (உன் பெருமையை) அறியாமல் மது உண்டவன் போல் மனம் செருக்கி, (உன்னை எளியனாக) நினைத்த பாவமும் பின்னர் உனக்குச் சமானமாக எதிர் நின்று உனது உரையை மறுத்துப் பித்தன் போல் பிதற்றிய தீமையும், இன்னுயிர் நீங்கச் செய்து உடல் (பொருளைக்) கவரும் வேடன் போல் செய்த பிழையும் ஆகிய எல்லாமும், எந்தையே! மன்னிய (நிலை பெற்ற) நினது பேரருளால் போக்கி, என்னை ஆட்கொள்ள வேண்டும்'' என்று கூறி மறுபடியும் அடிபணிந்தான்.

### உன்னை, உண்மையை, அறிக என்று அல்லமர் கூறல்

56. ''செய்த பிழை நீங்கலாக, இனிப் பிழை செய்யாமல் உடம்பு ஆசை அகன்று உனது உண்மை வடிவை நீ தெரிந்து கொண்டால் எனக்கு (நீ) இனியன்'' எனப் பெருங்கருணைக் கடலான அல்லமன் சொல்ல, ''பிழைத்தற்கு இடமில்லாத எனது பிழையைப் பொறுத்து ஒறுத்து அரிய வானமுதம் ஊட்டுகின்றாய்! கையிற் கிடைத்த செம்மணி போன்றவனே! உனக்கு யான் செய்வதற்கு என்ன கைம்மாறு உள்ளது?'' என்று சொல்லி,

### அல்லமரின் கருணையும் மகிழ்வும்

57. ''முற்றும் அருள் செய்து யான் அறிய வேண்டுவதான பொருளை நீ மொழிக!'' என்று தான் யான் எனப் பற்றி யிருந்த தேகப் பற்று நீங்கிக் கோரக்கன் நிற்கவும், கற்று அறியும் அறிவினால் அறிதற்கு அரிய பரஞ்சோதியாகிய அல்லமன் கோரக்கனது பக்குவம் கண்டு கருணை கொள்ளு தற்கு இசைவான மன மகிழ்ச்சி கொண்டு அன்பொடு, ''கேட்பாயாக!'' என்று கூறத் தொடங்கினான்:

### குகேசனை அறிக!

58. ''இருந்தவாறு, குகேசனை நீ அறிவாயாயின் உனது பிறவி என்னும் நோய் நீங்கிப் பேரின்பம் அடைவாய்'' என்று

அமலன் அல்லமன் கூற, கோரக்கன் அவனைப் போற்றி, ''எந்தையே! பரிந்து அருள் செய்கிற குகேசன் என்னும் மொழிக்குப் பொருள் யாது, அதனை உணர்த்துபவன் யாவன்? யான் தெரிந்து உணர அருள் செய்வாய்'' என்று தொழ, அதற்கு எம் பெருமான் அல்லமன் செப்புகின்றான்:

### குகேசன் என்பதற்கு அல்லமரின் பொருளுரை

59. ''குகை எனப்படுவது இதயம்; அதில் உள்ள இறையே ஈசன், இதனைக் குறித்துக் கொள். விளங்கும் அத் தகைய குகேசன் என்னும் மொழியை உடையோன் யானே'' என்று அல்லமர் கூற, அகம் மகிழ முக மலர்ந்து சித்தன் கோரக் கன் கேட்பன் : ''குகேசன் என்ற பொருள் நீயே எனில் முகை அவிழ் மென் மலர் போன்ற உன் கையகத்தில் சிவ லிங்கம் கொண்டது என்ன காரணம் பற்றி, சொல்லுக!' என்று கேட்டனன்.

○ கோரக்கரின் வினா, பகுத்தறிவு வாதியின் வினாப் போல் அமைந்துளது.

### அல்லமர் கையிற் சிவலிங்கம் - அதற்கு அவர் கூறும் காரணம்

60. "உலகினர் பிறவிப் பயன் எய்த என்னைக் கண்டு கொண்டு, மாறுபடாமல் சிறந்த சிவலிங்கத்தை மலர்க் கையிற் கொண்டு நாம் பூசனை புரிய வேண்டி, பூரணமான எனது வடிவமாகும் இந்த அடையாளத்தைக் கையில் கொண் டேன் நான். இதனைத் தெரிந்து எப்போதும் விடாது தெளி வாயாக'' என்று எம் குரு தேவன் அல்லமன் அருள் புரிந்து சொல்லத் தொடங்கினான்:

### தான் கற்பிப்பதனைக் கடைப்பிடித்து ஆசிரியனும் நற் செயல் புரிய வேண்டும்

61. "போதித்தலைச் செய்யும் ஞான ஆசிரியன், எப்பொழு தும் மெய்ப்பணி புரிதல் வேண்டும் என்று வேதம் முதற் கலைகள் யாவும் உறுதியாக உரைக்கின்றன. ஆகவே, சாத கனாகிய பருவ மாணாக்கனின் பிறவிக் கட்டின் வலியைத்

தொலைக்க வல்ல அந்த ஆசிரியன், உடலோடு தான் நற்பணியும் நீங்க வேண்டும் என்று கொள்ள வேண்டுமே அன்றி இடையில் அதனை (பணியை) விட்டு விடக் கூடாது,"

O ஞான குரவனாயினும், மாணாக்கனாயினும் இறுதி வரை உடம்பு உள்ள வரை, பலன் விழையா மெய்ப்பணி செய்து வர வேண்டும். இடையில் விட்டு விடல் ஆகாது என்பதாம்.

அறியாமை நீங்க மந்திரம் : சோகம் பாவனை

62. என்று தனது இயல்பை உணர்த்தி, (முன்பு) உடம்பே நான் என்று இருந்தாற் போன்று (இனி) நிற்கின்ற என்னைத் தெரிந்து "அவனே நான்" (சோகம்) என்னும் பாவனை (ஒன்றிய உணர்வு) கொண்டு நிற்பாயாகில், சாக வைக்கும் நஞ்சானது கருட(மந்திரத்தை)னை நினைக்க, நீங்கிவிடல் போல் அறியாமையும் நீங்கிவிடும்" என்று எங்கோன் அல்லம தேவன் கோரக்க நாதனுக்கு அறிவித்தான்.

O சோகம் பாவனை : சோ : அவனே, அகம் : நான் என்னும் பாவனை : ஐக்கியம். எனது வடிவமாகிய சோதியைக் குற்றமின்றிக் கண்டு, உடல் நானாயிருப்பது போல அது நானாக இருக்க வேண்டுதலால் சோகம் பாவனை கொண்டு நிற்பை என்றனர்.

கோரக்கர் சிறப்பு அடைதல்

63. அறிவு வடிவான குருபரன் அருள் கொண்டு தனக்கு உணர்த்திய மொழியின் பொருளை ஐயம் திரிபற உணர்ந்து கொண்டு, ஊன் உடலே தனது உண்மை வடிவம் என்பதை விட்டு, உண்மை அல்லாத அனைத்தையும் விட்டு நீத்து, உண்மை கண்டு தான் அதுவாகப் பழகி, தான் அது என்னும் மயக்கம் நீங்கித் தானே தானாகி, வானவரும் அறிதற்கு அரிய பெரும்புகழ்க் கோரக்கன் என்ற சித்தன் அங்கு (நிருவிகற்ப சமாதியில்) நிலைத்தனன்.

O

# 20. முனிவரர் கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. இமய அரசனின் மகளாகிய உமையவளொடு பவளம் போன்ற சிவந்த நெடுஞ் சடையை உடைய ஒப்பற்ற மலை போன்ற இறைவன் எழுந்தருளியிருக்கும் திருச் சைலத்தை விட்டு நீங்கி, பிறவித் துன்பம் கடிந்த அல்லம தேவன் மறையின் மெய்ப் பொருளை முனிவர்க்கு உணர்த்திய முறைமையைக் கூறுவாம்.

வடக்கே இருப்பவர்க்கு அருள அல்லமர் புறப்படல்

2. அருந்தவம் முயன்ற கோரக்கருக்கு, அறிவே வடிவமாக நிறைந்துள்ள உண்மையின் இயல்பை விரும்பி அருள் புரிந்த அல்லீமன் அதற்கு அப்பாலும் வடக்கிலுள்ளவர்களுக்கு அருள் புரியப் போயினன்.

எல்லார்க்கும் அல்லமர் அறிவு வழங்குதல்

3. அருள் மழையாகிய அல்லம தேவன். நல்லன தீயன என்று எண்ணாது எரிக்கின்ற வலிய நெருப்புப் போல எதிர்ப் பட்டவர்கள் அறமுள்ளவர்கள், அறமில்லாதவர்கள் என்று பாராமல் மெய்யறிவு வழங்கி அருளினான்.

○ உவமை அல்லமரின் பெருந்தன்மையை விளக்குகிறது.

வனத்தில் அவர் செல்லுதல்

4. யாவரும் தனது அருளுக்கு உரியவர் என்று, பாவச் செயல் என்கின்ற வலிய தளை நீங்கப் பரிந்து மேலாய நெறியை அருளும் தூயோனாகிய அல்லம தேவன், விலங்குகள் திரியும் ஒரு வனத்தில் புகுந்தான்.

அந்தக் காட்டில் ஒரு வேடனைக் காணல்

5. அந்தக் கொடிய வனத்தில், அன்பு எனப்படுவது தன் உள்ளத்திற் சிறிதும் புகுந்தறியாத வேடன் ஒருவன், கூனைப் புறமாக உடைய கொக்குப் போல நாள் தோறும் கொலை-

யையே மனத்தில் கொண்டவனாகக் கையில் வில்லொடு தோன்றினான்.

### வேடனுக்கு அருள அல்லமர் நினைந்தல்

6. ''அன்புடையவனாகத் தன் கண்ணைத் தோண்டி அப்புகின்ற வேடனுக்கு (கண்ணப்ப நாயனாருக்கு)ப் பேரின்பம் தருதல் புகழ்க்கு ஏற்றது ஆகாது; ஆகவே யான், வன்பனாய்த் திரியும் இந்த வேடனைக் காப்பேன் என்று என் பொல்லாத நெறியுள்ள மனம் இரங்கிற்று'' என்று அல்லமன் கூறினன்

O அன்பனுக்கு இன்பம் ஈதலினும் வன்பனுக்கு இன்பம் ஈதல் அரிது. அபக்குவரையும் பக்குவராக்கும் அவரது ஆற்றலையும் கருணையையும் இஃது காட்டுகிறது.

### இவனிடத்து அல்லமரது அருட் பார்வை

7. கொல்லையின் கண் விதையிடக் கருதுபவன் எருவுக்காக முட்செடிகளையும் புல்லையும் எரியுமாறு நெருப்புப் போட்டாற் போல, உவமை கடந்த அல்லம தேவன் நல்லறிவை அந்த வேடனுடைய உள்ளத்தில் நடுவதற்கு அவனது இருவினையும் அழியுமாறு அருட் பார்வை வைத்தான்.

O உவமை.

### அல்லமர் அருளுமாறு வேட்டுவன் வேண்டுதல்

8. விலங்குகள் தவிர எதுவும் வழங்காத வனத்தில் இருந்த வேட்டுவன், ''பாவியாகிய யான், மேவிய தீவினை அனைத்தும் அழிந்து உய்யும் வகையைக் கூறுக'' என்று கேட்டனன். இறைவனது அருள் கிடைக்கப்பெற்றால் யாவர் தாம் பிழைக்க மாட்டார்கள்?

O வேற்றுப் பொருள் வைப்பு.

### வேடனுக்கு அறிவுரை கூறல்

9. அறிவென்ற வேலினால் ஐம்புலன்களாகிய மான் கூட்டம் அருளாகிய வலையை விட்டுத் தப்பிப் போகாமல் எறிவையாயின் உனக்கு இனித் துன்பம் இல்லை என்று, நெறியினை

ஐயம் திரிபு அற விளக்கினான் அல்லமன்.

O உருவக அணி.

வேடனுக்கு அவனது செய்கை வழி அறிவுரை கூறுவது கவனிக்கத் தக்கது. சிறந்த கல்வியாளராக உளவியல் வழிப் பயிற்றும் ஆசானாக விளங்குகிறார் அல்லமர்.

**இலங்கையை வென்றவனும் உன்னைப் பணிவான் எனல்**

10. அறிவும் மனமும் முறையே வில்லாகவும் அம்பாகவும் கொண்டு என்னைக் குறியாக வைத்து எய்வாய் ஆயின், குமரனே! பகைவரைத் தடுக்கும் பொறிகள் அமைந்த மதிலை உடைய இலங்கையை முன் ஆண்ட இராவணனது தலைகள் பறிபட அம்பு எய்த இராமனும் உன்னை எப்பொழுதும் பணிகுவன்.

O அறிவு வில் மனம் அம்பு அல்லமன் குறி என வருதலின் நிரல் நிரை உருவக அணி.

**தவ வனம் ஒன்று தென்படுதல்**

11. இவ்வாறு, மிக்க வலி யுடைய வேடன் உய்யும் வகையைச் சொல்லி நல் நிலையருள் புரிந்து இன்ப வாழ்வில் இருக்கச் செய்து, அருளாளன் அல்லம தேவன் அப்புறம் போகும் பொழுது ஒப்பிலாத் தவ வனம் ஒன்று எதிரே காணக் கிடந்தது.

**பகை நீங்கிய தவ வனம்**

12. கொம்புள்ள யானைகளும் கொடிய சிங்கங்களும் தம்மிடம் அமைந்த பகை தவிர்ந்து இருக்கும் தன்மை காரணமாக அந்தக் காட்டுக்கு, ஆடும் அரவும் மதியும் (தம் பகை நீங்கி) அமர்ந்திருக்கும் இறைவனது சடையாகிய காடு தவிர வேறு உவமையினை யாம் கண்டது இல்லை.

O கற்பனைத் திறம்.

**அங்கே விலங்குகள் முனிவர்களுக்குப் பணி விடை செய்தல்**

13. நடத்தற்கு இயைந்த கால்களைக் கைகளாகப் பெற்றிருப்பனவும், மூச்சு விடுதற்கு இயைந்த மூக்கினைக் கையாகப்

பெற்றிருப்பனவும் தீதிலாத் தீ வளர்த்து வான் மழையை வரவழைக்கும் முனிவரர்களின் குற்றேவல்களைச் செய்யும்.

O பெயர்க்கத் தக்க கால்களைக் கையாகப் பெற்றவை புலி சிங்கம் முதலியவை. உயிர்க்க உதவும் நாசியைக் கையாகப் பெற்றவை யானை யாளி முதலியவை.

அங்கே இருக்கும் முனிவர்கள்

14. பல பிரிவுகளாக விரிந்துள்ள மறை நூலை ஓதுவோரும், வேள்வி இயற்றுவோரும், களங்கத்தைக் கழுத்தில் கொண்ட நம் கடவுளின் பூசனையை ஆகம முறைப்படி புரிவோரும், மூச்சை அடக்கி ஒரு தூண் போல அசைவின்றி இருக்கும் தன்மை உடையோரும்,

அம் முனிவர்கட்கு அருள அல்லமர் நினைத்தல்

15. இவ்வாறாக ஈடுபட்டு இருக்கும் அருந்தவத்தோரிடத்திற் போய் இவர்களுக்கு இயைந்த போதனையால் பிறவித் துன்பத்தை நீக்குவேன் என்று, எனக்கு(கவிஞர்க்கு)ஒரு தாயெனத் தகும் அல்லமன் சொல்லினன் :

சேற்றினால் சேற்றைக் கழுவ முடியாது எனல்

16. ''பலவாறான நோன்புகளை நோற்று தேகம் இளைத்து வருந்துவீர்கள். வேள்வி முதலிய வினைகளைச் செய்தீர்கள். இவற்றால் நீங்கள், நீக்கப் பெற வேண்டிய மாயா மலத்தை நீக்க முயலுதல் வயலிலுள்ள சேற்றினால் சேற்றைக் கழுவுதற்கு ஒப்பாகும்.

O மாயாமலம் மெய்யறிவால் அன்றி அகலாது என்பதாம்.

தீயால் புகை வரும்; வெறும் எண்ணத்தால் வராது எனல்

17. ''மெய்யறிவினாலே சிவபதம் கிட்டும். குறையுடைய கருமங்களால் அது கிடைப்பது, காய்ந்த மரம் கொண்டு (எரிக்க) வளர்வதாம் புகையை அனுமானம் கொண்டு வளர்த்தலுக்கு ஒப்பாகும்.

O உவமை யணி.

O 'ஞானம் கொண்டு நணுகும் சிவ பதம்' என்பது அழகான தத்துவ வாக்கு.

வெறும் தீ பிறவியைச் சுடாது எனல்

18. ''சிகரத்தை யுடைய அழகிய மலை போலக் குவித்த (தருப்பைப்) புல்லை (வேள்வியில்) எரித்தல் காரணமாகப் பிறவி எரிக்கப்பட மாட்டாது. வருத்துகின்ற ஐம்புலன்களை-யும் அறிவு என்னும் நெருப்பால் எரித்தல் காரணமாகவே பிறவி எரிக்கப்படும்.

O அருமையான கருத்து சுவையாகத் தெளிவு படுத்தப் பட்டுள்ளது.

அறிவுத் தீயினால் வேள்வி புரிந்தாலே வீடுபேறு எனல்

19. ''மெய் யுணர்வு என்னும் புனித நெருப்பில் வேற்றுமை உணர்வு (பேத பாவனை) என்ற மிகுந்த நெய்யைப் பெய் வானாயின் மூலப் பிரகிருதி என்னும் கோட்டையை அடித் துத் தகர்க்கும் (பெரிய) முகில் (மேகம்) அவன் தான் என்று வேதங்கள் யாவும் அனைவர்க்கும் விளங்க விளம்புகின்றன.

O உருவக அணி.

O பேத பாவனை ; சிவம் வேறு தான் வேறு என்று கொள்ளு தல்.

அறிஞர் கொள்வர் ஒன்றெனும் உணர்வு

20. ''சங்கு மணியினை வறியவர்கள் (மாலையாக) அணிந்து கொள்ளுதல் போல், அறிவில் வறியவர்கள் வேதத்தில் உள்ள கரும அனுட்டானங்கள் வேள்விகள் முதலியவற்றை மேற் கொள்வார்கள். செல்வர்கள் கொள்ளும் (பொன் மணி முதலிய) அணிகள் போன்று அறிஞர்கள், தெளிந்த 'தத்துவ மசி' என்பதன் பொருளை ஏற்றுக் கொள்வார்கள்''

O உவமையணி.

O தத்துவமசி - மகா வாக்கியங்களில் ஒன்று, 'அது நீ' என்பது பொருள். மறை முடிவுக் (உபநிடதக்)கொள்கை. எளிய உவமை மூலம் மிக உயர்ந்த கருத்து இங்குத் துலக்கம் பெறக் கூறப்பட்டுளது.

முனிவர்கள் அல்லமரை வாழ்த்தி வணங்குதல்

21. ...என்று ஞான நெடுந்தகையான அல்லம தேவன் கூற ஆங்கிருந்த அருந்தவர் அன்பொடு எதிர் நின்று, ''இன்று நீ வர என்ன தவம் மிகச் செய்தனம்!'' என்று அவன் தாள் மிசை வாழ்த்தி வணங்கினர்.

முனிவர்கள் மயக்கம் நீங்கப் பெறல்

22. மாயை பிறந்த அன்று மனத்தில் எழுந்து மூடிய மயக்கம் முடிவு பெற, முன்னே துருவாசன் தன் செம்மலர் வாயினால் சொல்லிய தூயவன் இவனே என்று நினைந்து துதித்தனர்.

O முன்னே துருவாசர் அல்லமரைப் பற்றி உரைத்த குறிப்பு. 3. மாயை உற்பத்தி கதி. செய். 40...43.

அனைவர்க்கும் தலைமை தந்தான் அல்லம தேவன்

23. இவ்வாறு இங்கிருந்தவர் இன்பம் எய்த, சிறந்த ஞான மறை மொழி கூறி, அன்னை போலும் நம் அல்லம தேவன் ஒவ்வொருவரும் தம்மைத் தாம் உணர்ந்து மெய்யறிவை அடையும் தலைமைத் தன்மையைப் புரிந்தான்.

O 'தன்னை மேவும் தலைமை புரிந்தனன்' என்பது அருமையான 'ஞான சமதருமக்' கருத்து.

O ''எல்லாரும் (இந்நாட்டு) மன்னர்'' என்ற வேதாந்த அல்லது ஞான சம தரும நிலையை இக்காலத்துக் கவிஞரும் (பாரதியாரும்) பாடியது இந்தத் தலைமை யடிப்படையிலே என்பது உணர்தற்குரியது. O

# 21. சூனிய சிங்காதன கதி

கதைக் குறிப்பு : கவிஞர் கூற்று

1. பொய் என்று கூறுவதற்கு இயைந்த வற்றைப் பொய் என்று கூறும் எங்கள் குருவாகிய வசவேசன், அல்லமன் இத்தகையன் என்று காண்டற் பொருட்டு அரியதொரு கருவி யென, சொல்லுதற்கு அரிய எழு நிலையுடைய அழகிய சூனிய சிங்காதனத்தைச் சிறப்புப் பொருந்த இனிது இயற்றி இருந்த முறையை வகுத்துக் கூறுவாம்.

O எழுநிலை : சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவா பத்தி, அசம் சத்தி, பதார்த்த பாவனை, துரியம்.

இடக்கர் மனத்தை அடக்க வசவரின் முயற்சி

2. ஒடுக்கு மனமே (மனோ நாசமே) வீட்டு நெறிக்கு ஒப் பற்ற துணையாகும்; புறத்து நடக்கும் மனம் நரக நெறிக் குத் துணையாகும் என்று கட்டுக்கு அடங்காமல் திரியும் மனத்தை அடக்கும் வகையில் எம்பிரான் அல்லமன் இயம்பிய வழியில் அருணந்தி யாகிய வசவண்ணன் தலைப் பட்டான்.

ஓவியம் போல் தன்வயமாக இருத்தல்

3. நில்லாது ஓடுகின்ற மனத்தை, உயிர்க்காற்றின் ஒழுங் கைப் பிடித்து அதற்கேற்ப அசையாமல் நிறுத்தி, ஒளி பொருந்திய குண்டலி சக்தி என்னும் நிறைமதியின் அமுதத் தைச் சூறை கொண்டு, அதனில் அன்புற்று, பொல்லாத புலன்கள் தாம் நுகரப் புறத்தே செல்லும் நிலைக்குத் தடு மாறிச் செல்லாமல் மனத்தைத் தன்வயப் படுத்தி ஓவியம் போல் அசைவற்று இருந்தனன்.

O யோக நிலையும் அதன் பயனும் கூறப்பட்டுள்ளன.

அல்லமர் என்று வருவாரோ என்று எதிர்பார்த்திருத்தல்

4. ஓவியம் போல் அடங்கிய மனம் கொண்டு, நித்தியமாக உள்ள ஆத்ம சொரூபத்தை விளக்க ஞான குரு என்றைக்கு வருவானோ என்று எழுந்து வளர்கின்ற காதல் ஒன்றைத் தவிர வேறு உவப்பதாகிய பொருள் உலகில் எதுவும் இன்றி வசவ நாயகன், எந்தை அல்லம தேவனின் வரவினை நோக்கி,

அல்லமரை அறிதற்கு ஓர் உபாயம் இயற்றல்

5. ''எந்த வடிவத்தில் எம்பிரான் அல்லம தேவன் வருமோ தெரியேன்; செவ்விய ஒரு இருக்கை அமைத்து அதன் மேல் வந்து இருக்க வல்லவனை, குற்றமில்லா அல்லம தேவன் என்று யான் அறிந்து கொள்வேன்'' என்று துணிந்து, இவ் வுலகம் வியக்க வசவண்ணன் இதனைச் செய்தான்.

சூனிய பீடம் ஒன்றை அரிதாகச் செய்வித்தல்

6. மூலாதாரம் முதலாக, அடுக்காகப் பல நிறங்களை உடையதாக, சோதி மயமான ஏழ் நிலைகள் ஓங்கும் படி வெளித்தவிசு ஒன்றை நான்முகனும் மனம் வியக்கப் பொன்னும் மணியும் பளிங்கும் கொண்டு ஒரு தன்மையவான நான்கு மறைகளும் போற்றச் சைவ நாயகனாம் வசவண்ணன் செய்வித்தான்.

O சூனிய பீடம் பளிங்கு பீடத்துக்கு மேல் நிலையது.

வெளித் தவிசின் இயல்பு

7. காரண உபாதிகள் ஏழுக்கு மேலே தன்னைத் தான் கண்டு கொண்டிருக்கும் ஞானி போலவும், சிறப்புள்ள நெற்றியின் மேல் நிலைகள் கடந்து தரிசிக்கின்ற யோகி போலவும் நிறைந்த ஞானானந்த போதகனான அல்லம தேவனது இருப்பினைக் காண்பதற்காக மிக்க அழகுள்ள எழு நிலைகளின் மேல் விளங்கும் சூனிய சிங்கா தனத்தை ஏற்படுத்தினான்.

O காரண உபாதி ஏழு : ஈசன், முற்றறிவான், எவைக்கும் ஏது, மாசாகசன், நிருபாதி, பாவனை.

O ஞானம் : அறிவிற் சகல கற்பனைகளையும் கண்டு களைந்து தானாக்குதல். யோகம் : உடலில் ஆறு ஆதாரங்களையும் கண்டு அப்பால் நுதலில் ஒளிர்தல்.

பார்ப்போரின் உடல் நிழல் அந்த அரியணையில் தெரிதல்

8. கண்டவரது மனத்தை மலரச் செய்யும் களங்கம் அற்ற திங்கள் போல் பளிங்குக் கற்களினால் செய்திருக்கின்ற அந்த நிலைகளுக்குள் வந்து பார்ப்பவரின் உடல் நிழல் தன்மேல் தோன்றும்படி சென்று விளங்குதல், மிக்க ஒளியை உடைய பசும்பொன்னால் செய்த ஒளி மிக்க நிலையைத் தலை சுமப்பது போல் செய்தால் எப்படியோ அப்படித் தோன்றும்.

O பார்ப்பவரது உடல் நிழல் அந்த ஏழ்நிலை மேல் அரியணையில் சென்று விளங்கும் பொழுது அஃது ஒருவன் பசும்பொன்னாற் செய்த ஒளிமிக்க அரியணையைத் தலையில்

சுமத்தல் போல் தென்படும் என்பதாம். 'துளங்கு ஒளி நிலை' என்பதற்குக் கேட்டை நட்சத்திரம் எனவும், 'பளிங்கறையுள் வந்து பார்ப்பவரது தேகச் சாயை தன் மேற் றோன்றுதல் கேட்டை நட்சத்திரத்தைச் சென்னிமேற் செய்தலுக் கொப் பாகும் எனப்பொருள் கொள்க' எனவும் கூறியுள்ளனர். அது பொருந்து மேல் கொள்க.

அரியணையைப் பார்த்தோர் வசவரை வியத்தல்

9. திருந்திய பளிங்குக் கற்களால் செய்திருக்கின்ற அந்த அறையில் வாசல் இருப்பது தெரியாராக உள்ளே போய்க் காண்கின்ற மனிதர் எல்லாம் கையால் தடவிக் கண் தெரி யாதவர் போல் வருத்த முற்று, கண்டு, மனம் மகிழ்ந்து வசவண்ணனை வியப்பார்கள்.

அதனைக் கண்ட தேவரும் வியத்தல்

10. ஒருவன் நினைவினால் செய்த மனக் கோயிலே அல்லா மல், செய்கையினால் உலகத்தார் செய்து விளங்கிய வெளித் திருப்பணிக் கட்டடங்கள் இத் தன்மைய தோடு உவமை கூறுதற்கு எதுவும் இல்லை என்று தேவர்கள் எல்லாம் தானே தனக்கு நிகராக உள்ள சிங்காதனத்தை வியந்து நின்றார்கள்.

O நெஞ்சுளாலயம் பூசலாரை நினைவு படுத்துகிறது.

அடியார்கள் அந்த அரியணையைக் கண்டு மகிழ்தல்

11. வெளித் தவிசு அமைக்கப் பட்டிருக்கும் அதிசயம் கேட்டு நிலவுலகில் நெற்றிக் கண் இறைவனின் அடியாராக உள்ள எல்லாரும் சென்று செம் பொன்னால் ஆன அந்தச் சீர்கெழு பீடத்தைப் பார்த்து எம்பிரான் வசவ தேவனின் இணையடி தொழுது இருந்தார்கள்.

அல்லமர் ஒருவரே அதில் இருக்க இயலும்

12 கல்விக்கு இதுவே கரை என்று கற்றவர் பலரும் போற்று மாறு நிலவுலகில் அமைத்திருந்த சாரதா பீடம் (கலைமகள்

இருக்கை) போல இந்த ஒப்பற்ற ஞான பீடமானது வாயால் சொல்லவும் மனதால் நினைக்கவும் எட்டாதது. அருள்தரு குரு குகேசன் ஆன அல்லமனை அன்றி இதில் ஏறுதல் வேறு யாருக்கும் இயலாது.

அல்லமரே அதிலேறி அமர முடியும் என்று
வசவண்ணர் நினைத்திருத்தல்

13. இந்தப் பெரும் பீடத்தில் ஏறி இருந்திட வல்லவன், எக் காலத்தும் புதையல் என்னும் படி நம் மனத்தில் இருத்தற்கு உரிய வலிமையுள்ள அந்தப் பெரிய கருணைக் குன்றம் ஆகிய அல்லம தேவனே என்று, சொல்லும் தன்மை அற்றவனாக வசவண்ணன் சிந்தித்தவாறு இருந்தான்.

அல்லமர் வரவை வசவண்ணர் எதிர்பார்த்து
இருத்தல்

14. கரையை மோதும் கங்கை ஆற்றில் கண்ணியை வைத்து அரச அன்னம் வருதலை எதிர்பார்த்து இருத்தல் போல, இருளை விழுங்கிப் பெருகும் ஒளியை வீசுகின்ற ஞான பீடம் ஒன்று நிலையுமாறு ஆக்கி, அல்லமனது வரவு நோக்கி எம் தலைவனாகிய வசவண்ணன் காத்துக் கொண்டிருந் தான்.

O உவமை.

அடியார் பலரும் வசவண்ணர் போன்று அல்லமர்
வரவை நாடியிருத்தல்

15. புதுநீர் பெருகி வரும் வையை ஆற்றில் எதிர் கிழித்து ஏறுமாறு ஏட்டினை விட்ட ஞான சம்பந்தனின் பாட்டுடைத் தலைவனான இறைவனின் அன்பர்கள் பலரும் நம் வசவண் ணரை நாடி வருகின்ற ஆசானே நமக்கும் ஆசானாம் என்று எண்ணி எதிர்பார்த்து இருந்தார்கள். வீட்டுக்கு ஏற்றப்படும் விளக்கு வந்த அந்த விருந்தினர்க்கும் உதவாதோ?

O உவமை.

# 22. சூனிய சிங்காதனத்தில் இருந்த கதி

கதைக் குறிப்பு : கவிஞர் கூற்று

1. தாழ்வான இடத்தை நோக்கிச் செல்லுகின்ற தண்ணீரைப் போல் நல்ல வழியிற் செல்லும் சிவனடியார்களின் உள்ளத்திற் குடிபுகுந்திருந்த அருளுடைய வசவண்ணன் இவ்வுலகத்தார் அறியாமல் சூழ்ச்சியுடன் செய்த சூனிய சிங்காதனத்தில் ஒப்பற்ற கருணைக் கடலாகிய அல்லம தேவன் விரைவில் ஏறிய செயலை விருப்புற எடுத்துரைப்பாம்.

O உவமை.

அல்லமரது வரவை வசவண்ணர் நாடியிருத்தல்

2. சிச்சிலிப் பறவை தேடும் கயல்மீன்கள் துள்ளிக் குதிக்கும் வயல்கள் சூழ்ந்த நாடுகளை உடைய உழவர்கள் சிவன் விரும்பும் ஒரு காவிரி யாற்றின் நீரை எதிர்பார்த் திருக்கும் முறைபோல, இறைவனை நாடியிருக்கும் அடியார்களின் வினைகள் நீங்க ஆங்காங்குச் செல்லுகின்ற ஆசான் அல்லம தேவனின் வருகையை, அன்பினாற் பரவசமாகி உருகும் வசவேசன் நாடியிருந்தான்.

O உவமை.

அல்லமர் வாராமையால் வசவண்ணர் வருந்துதல்

3. வினைகளைக் களைந்தவனான வசவண்ணன், பொன்னால் அமைந்து ஒளியை வெளிப்படுத்தும் சூனிய சிங்காதனத்தைச் செய்து பன்னிரண்டு திங்கள் கழிந்தன. யான் செய்த வேலை இதனால் சிறுபிள்ளை வேலைபோற் ஆயிற்று. எனை ஆளுடைய எம்மான் எந்நாள் வருமோ அறியேன் என்று நினைந்து துயரத்தால் உளைந்தான்.

ஒரு நாள் வசவண்ணர் மனத்தில் அல்லமர்
வரவு தோன்றுதல்

4. இவ்வாறு இருக்கும் நாளில் ஒரு பொழுது, எம்மை ஆளுடைய வசவண்ணனின் செம்மைவழிச் செல்லும் மனத்தில், அல்லம தேவனின் வரவு காணப்பட்டது. அவ்வாறு அது

நிகழப் பெற்றவனின் ஆர்வத்தினை யான் ஒருவன் எங்ஙனம் தெரிந்து சொல்லுவன்? பாம்புத் தலைவன் ஆதிசேடனாலும் சொல்லுதற்கு அரியது அது.

நல்ல அறிகுறிகள் கண்டு மகிழ்தல்

5. அருள் வசவ தேவனுக்கு வலக் கண்ணும் வலத் தோளும் துடித்தன. மிகு சேய்மையில் சென்ற தலைவன் மீண்டு வரும் நாளில் இடத் தோளும் இடத்து விழியும் துடிக்கப் பெற்ற குலமாதின் மனம் மகிழ்வது போல மகிழ்வு கொண்டு அன்பு மிகுதிப்பட, மல மாயைகளை ஒழித்த சென்ன வசவ தேவனைப் பார்த்து இதனைச் சொல்லுவான் :

O உவமை.

நற்குறியைப் பற்றிச் சென்ன வசவரை வினாதல்

6. ''என்னிடத்தில் நல்ல குறிகள் பலவும் இன்று நடை பெறுகின்றன. மரவுரி தரித்த முனிவர் போற்றும் சென்ன வசவனே, அந்த நிகழ்ச்சிகளால் நாம் பின்னால் பெறும் பயன் என்ன?'' என்று பெருந்தகை வசவண்ணன் கேட்க, எதிரில் நின்றவனும் சிற்பரம் உணர்ந்தவனும் ஆன சென்ன வசவன் அதற்கு உரைப்பன்:

நற்குறி அல்லமர் வரப்போவதன் அடையாளம்
எனச் சென்ன வசவன் உரைத்தல்

7. ''ஐயனே, இந்த நிமித்தம் காரணமாக இப்போது அல்லம தேவனைக் காண்பாய். இது மெய்யான சொல்'' என்று மருமகனாகிய சென்ன வசவன் விடை கூறினான். எங்கள் கையிற் கிடைத்த அமுதம் போன்ற வசவண்ணன், தான் கருதியவாறே விடை கிடைக்க உள்ளம் மகிழ்ந்து, செயல் செய்கின்றவர்கட்கு உணர்த்தலானான்:

கலியாண புரத்தை அழகு படுத்த ஏவலர்க்கு
வசவர் கூறுதல்

8. ''உடம்பு என்னும் காட்டில் நின்ற உயிர் என்னும் கன்னியைத் தொடர்ந்து பொருந்தும் மணத்தால் சேர்ந்த மணாளன்

ஆகிய அல்லமன் இன்று வருவன். அவன் எழுந்தருளத் தக்க கலியாணத்தை (நகரத்தை) அலங்கரியுங்கள்'' என்று எந்தை வசவண்ணன் கூற, ''நன்று அவ்வாறே செய்குவம்''என்று அவர்கள் உரைத்துச் சென்று நகரத்திலுள்ள மக்களுக்கு உணர்த்தினார்கள்.

O உருவகம்.

**பறக்கும் கிளி போல் நகரில் அழகிய தோரணங்கள்**

9. பரவிய கதிர்களை உடைய ஞாயிறு செலுத்தும் அழகிய நெடுந்தேரின் உச்சியானது விலகிச் செல்ல, அதில் தாக்காமல் அதற்கு மேல் ஒரு சாண் அளவு நிற்கும்படி பலராலும் புகழ்ப் பெற்ற அழகிய மாடங்களில் பறக்கும் ஒள்ளிய கிளிகளின் வரிசைபோல் இலைகள் செருகிச் செய்த பசிய பூந் தோரணங்களை அணிபெறக் கட்டினார்கள்.

**கொடி கட்டுதலும் நிலைத் தேர் செய்தலும்**

10. கற்பிக்கும் ஆசான் அல்லம தேவன் நம் ஊருட் புகக் கொடி கட்டுதல் நல்லது என்று ஆர்வத்தோடு மாடங்களின் மேல் விளங்கும் கொடிகளைக் கட்டினார்கள். கதிரவனது தேர் எப்போதும் சுழன்று கொண்டிருக்கிறது என்பதை நகைத்தல் போல் தெருவில் ஆடி ஓடிக் கொண்டிருக்கிற ஒளி மிக்க நிலைத் தேர் செய்தார்கள்.

O கதிரோனின் தேர் நிலையின்றிச் சுழல்வதால் வீதியில் நிலைத்தேர் செய்தனர் என்பதாம்.

**மணப் பொருள்களை வீதியில் நிறைத்து, மாலைகள் கட்டுதல்**

11. குங்குமத்தையும் மணமுள்ள சந்தனத்தையும் கலந்த குளிர்ச்சி பொருந்திய பன்னீரையும் இறைத்து மிக்க அழகுடைய தெருக்களை எல்லாம் செழுமையான சேறு ஆக்கினார்கள். மங்கலமான மனைகளின் முன்புள்ள பந்தர்களில் உண்மையான திருமணப் பந்தர் போல மணம் கமழும் இதழ் நறும் பூங் கோதை (மாலை) கள் கட்டினார்கள்.

### வாழை கரும்பு கமுகு ஆகியன கட்டுதல்

12. வயல்களில் வளர்ந்து நின்ற வாழை, கரும்பு, பாளை களை உடைய உயர் இளங் கமுகு, ஆகியவை ஒன்றோடு ஒன்று பேசிக்கொண்டு தாங்கள் பெண்டிரின் அரிய தொடை தோள் கழுத்து என்னும் உறுப்புக்களின் அழகினை இரந்து கேட்கும் செயலால் அங்கு வந்து அடைந்தன என்னுமாறு செழுமையாகிய தலைவாசல் முன்பாக அவற்றைக் கட்டினார்கள்.

O *நிரனிரை யணி. தற்குறிப்பேற்றம்*

### நிறை குடங்கள் வைத்தல்

13. இலைகளாற் பொலிவுற்ற வாழையானது மாதரின் தொடை என்று ஒப்புக் கூறப்பட்டு அடையும் பயனைத் தனங் களினால் அடைவோம் (முலை என ஒப்புக் கூறப்பட்டுப் புகழ் பெறும் பயனை அடைவோம்) என்று நினைத்து வந்து இருத் தல் போல் கயற்கண் மாதர் நிறை குடங்களை, விலை உயர்ந்த செம்பொன்னால் இயற்றிய திண்ணைகள் மீது வைத்தார்கள்.

O *தற்குறிப்பேற்றம்.*

### திருவிளக்கு வைத்தல்

14. மனத்து இருளை நீக்கும் அழகிய மணிச்சுடர் விளக் கான அல்லம தேவனின் வரவு பார்க்க நினைத்து வந்திருப் பது போல, நெடுமணிக் கதவு வாசலின் முன், தாமரை முகை போன்ற தனங்களையும் கருத்த நீண்ட கண்களையும் ஒப்பற்ற வில் போன்ற நெற்றியையும் மாலையணிந்த சரிந்த கூந்தலையும் தளிர் போன்ற கைகளையும் உடைய மாதர், ஏற்றி வைத்தனர்.

### மாதர் நிலைத்தேர் ஏறி நிற்றல்

15. ஆசான் அல்லம தேவனை அருள் பொருந்திய வசவண் ணனோடு காண்பதற்குச் செல்வோம் என்று தாம் ஏறிய செம்பொன்னால் ஆகிய சீர்மிக்க விமானத்தோடு விரைவாகப் பூமியில் வந்து இறங்கிய மேலுலகப் பெண்டிர் போல,

இல்லை என்னும் படியான இடையை உடைய மாதர்கள் நிலைத்தேர் ஏறி இருந்தார்கள்.

நகரின் புதிய அலங்காரப் பெருமை

16. இந்த அழகிய நகரை இன்று புதுமையாகவும் செவ்வையாகவும் அலங்கரிப்பதற்காக நேற்று அலங்கரித்தவற்றைக் கழித்து நீக்கியவை அமரர் கோனின் நகரத்தை அலங்கரித்தற்கு உரியனவாய் இருக்கும் எனில் வசவண்ணரின் பெரிய கலியாண புரத்தை அணிந்துள்ள மிக்க பெருமையை யாரால் கூறமுடியும்!

அல்லமரை எதிர்கொள்ள வசவண்ணர் புறப்படல்

17. இங்ஙனம் அலங்கரித்த அழகிய மணிகளாலான தெருவின் ஊடு, மன்னர் மன்னனாகிய விச்சலன் நற்கதி அடைய அவனுக்கு அமைச்சுரிமை பூண்ட வசவண்ணன், தன் ஒப்பற்ற ஆசானாகிய அல்லம தேவனைத் தான் எதிர்கொள்ள வேண்டிப் பொன்போல் பொலிவு மிகுந்து விளங்குகின்ற தனது இருப்பிடத்தினின்று புறப்பட்டுப் போகத் தொடங்கினான்.

சென்ன வசவர் உடன் செல்லுதல்

18. பதியும், அந்தப் பதியாற் காணும் பசுவும் (உயிரும்), அந்த உயிரின் உணர்வால் நிறையப் பெற்ற ஐந்து விதப் பாசமும், பொருளாக வழக்கிடுகின்ற நியமங்களும் அந்தப் பாசமும் பொய்யாகப் போகுமாறு பேத அபேதம் நீங்கத் தக்க வீட்டினையும் ஓதி, மன மயக்கினை அறுத்து விட்ட சென்ன வசவ தேவனும் கூடப் போனான்.

O ஐம்பாசம்: தமம், மாயை, மோகம், அவித்தை, பொய்யுருவி

மடிவால மாச்சரும் உடன் போதல்

19. நம்மிடம் மூலமாக நின்றுள்ள அறிவின்மையையும், க்முகண் இறையவனின் அடியார்களுடைய ஆடை யழுக்கையும் நீக்குகின்ற தன் தொழிலில் நெறிவழுவாத நல்ல மடிவால மாச்ச தேவனும், ஈன்ற தாயினும் மும்மடங்கு அன்புடைய வவசண்ணனின் அருகில் சென்றான்.

கின்னரப் பிரமன் செல்லுதல்

20. இறைவனின் சடையில் பாம்பும் எதிரில் தவழும் பிறைத் திங்களும் புனையப் பட்டவை போல அசைவற்று இருக்க, சிவந்த கையிலுள்ள மானும் பரவசம் அடைய, கங்கையும் அலையடங்க இசைபாடிக் கொண்டு முன்னால் இறைத் தொண்டர் பக்கத்தில் கின்னரப் பிரமன் என்பவன் சென்றான்.

O பாம்பும் பிறையும் மானும் பரவசம் ஆகவும், கங்கை அலையானது நிற்கவும் பாடிக் கொண்டு கின்னரப் பிரமன் சென்றான்.

அடியார் எண்ணிலர் உடன் செல்லுதல்

21. திரிதண்டம் உடையோர், கமண்டலக் கையினர், சடையர், உடல் முழுதும் திருநீறு பூசியோர், மூன்று கீற்றாகத் திருநீறு அணிந்த நெற்றி உடையோர், காவிக் கல்லில் தோய்த்த மெல்லிய ஆடையினர், நீல கண்டம் உடைய இறைவனை அகத்தும் புறத்தும் கண்டவர், இருவினையின் நீங்கிச் சிவத்தொண்டு நெறியில் நின்றோர் ஆகியோர் எண்ணிலார் சூழ்ந்தனர்.

போர் மறவர் புடை சூழ்ந்து செல்லுதல்

22. இன்றைக்கு வலத் தோள் துடித்தது. கோள்கள் வலமாக வரும் செம்பொற் குன்று போல மார்பிடத்தில், மன்மதனை வெற்றி கொண்ட நெற்றி விழிக் கடவுளின் அருளால், வேற் புண் ஒன்று கிடைக்கப் பெறுவோமாக என்று வாளை வலமாக உயர்த்திய படைவீரர்கள் கடல் போல் சூழ்ந்தார்கள்.

O இறையருளால் பகைவரை வென்று விழுப்புண் பட விழைகின்றனர் வீரர்.

நிலம் எல்லாம் அதிரப் படைகள் நடத்தல்

23. எங்கள் வாழ்வுக்கு நிகரான வசவண்ணன் புறப்பட்ட வீதியில், முகில் தங்கும் விண்ணிலுள்ள கதிரவனது மணி நெடுந் தேரை இழுக்கும் இளங்குதிரைகள், வீரர்களின் கால்

களைப் பொறுக்க முடியாமல் ஓடுமாறு அழகிய இடத்தை உடைய ஞாலம் எல்லாம் அதிரும்படி படைகள் நடந்து சென்றன.

யானைகள் செல்லுதல்

24. ஆதி சேடனோடு மண்ணுலகைச் சுமக்கின்ற அடுகளிறு எட்டுடனும் போர் புரியக் களிப்புப் பொருந்திய (எம்முள்) நல்ல ஒரு யானையே போதும் என்று, இரவின் கருநிறத் தோடு ஒத்த நிறத்தையும் குளிர்ச்சி பொருந்திய கன்னத்தை யும் சிறுகண்களையும் துதிக்கையையும் வெண்மருப்பினையும் உடைய கடாக்களிறுகள் எண்ணில்லாதன எழுந்தன.

படைத் தலைவர்கள் பலர் பக்கத்தில் சென்றனர்

25. ஆனைகளின் மேல் ஏறியும் தாவிச் செல்லும் ஆடுதலை யுடைய விரைவான குதிரைகளின் மேலேறியும் வளைவாகிய நல்ல மூங்கிலைத் தொடுத்து தொங்குகிற குச்சுகளை உடைய பல்லக்குகளின் மேல் ஏறியும் சேனை காவலர் அளவிறந்த பேர்கள், வில்லையுடைய மன்மதனது அழகைப் போல வலியுள்ள வில்லைத் தாங்கிய விச்சல மன்ன னின் அமைச்சனாகிய வசவண்ணனின் மருங்கே சென்றார்கள்.

எண்ணிலாத குடைகள் கவரிகள் செல்லுதல்

26. நன்மை விளங்கும் மன்மதனது குடைக்கு (திங்களுக்கு) ஒளி மணிக் காம்பு (இவை போல்) இல்லை என்று விளங்கும் பசிய பொன்னாலாகிய காம்புகளோடு அளவிலாத வெள்ளைக் குடைகள் எழுந்தன. புலன்களை வென்ற வீரனாகிய வசவண் ணன் போன தெருவில் எங்கும் விலங்குகளாகிய கவரிகள் இல்லாமலே அவற்றின் வால் ஆடின (வால் மயிரால் ஆகிய கவரிகள் வீசப் பெற்றன).

விலங்கினை அன்றி அந்த விலங்கின் வால் ஆடிற்று-சொல் திறம்.

மாதர்கள் பலர் எழுதல்

27. மாயையினது தோல்விகள் அனைத்தும் எல்லா மாதர்க் கும் வந்தன அல்லவா? நாயகன் ஆதலால் அல்லம தேவனை

வசமாக்கிக் கொண்டு நாம் வெற்றி கொள்வம் என்று எண்ணிப் போகின்ற தன்மை போலக் கருநெடுங்கண் தேயும் நுண் மருங்குல் கொண்ட மாதர் கூட்டங்கள் பலவாக எழுந் திருந்தன.

O தற்குறிப்பு.

### பலவகை ஒலிகள் கலந்து கடல்போல் ஒலித்தல்

28. குதிரைகளின் ஒலியும் மிகுந்த பல இசைக் கருவிகளின் ஒலியும் யானைகளின் ஒலியும் வீரக் கழலொடு செல்லும் கொடிய வலிமை கொண்ட சிங்கம் போன்றோரின் ஒலியும் மாதர் அணிகளின் ஒலியும் செங்கை வளையல்களின் ஒலியும் ஒன்றுபட்டு விரிந்த கடல் போன்று ஒலிமிக்கு இருந்தன.

### எழுச்சியின் பொது நிகழ்ச்சிகள்

29. சாமரைகள் எங்கும் ஆடுகின்றன. விசிறிகள் எங்கும் அசைகின்றன. குடைகள் எல்லா விடத்தும் கவிந்து இருக்கின் றன. இசைக் கருவிகள் எங்கும் பாடுகின்றன. யானைகள் பாய்ந்தோடுகின்றன. புரவிகள் எங்கும் ஓடுகின்றன. எவ் விடத்திலும் துகள்கள் உயர்கின்றன.

### வசவண்ணருடன் சென்ற கடல்போன்ற படை

30. யானைகள் கப்பலாகவும் அசைகின்ற சாமரைகள் நுரை களாகவும் விரிந்த குடைகள் குமிழிகளாகவும் வலிமையுள்ள வீரர்கள் விதிர்க்கும் வாள்கள் குதிக்கின்ற மீன்களாகவும் குதிரைகள் அலைகளாகவும் முழங்கும் வாத்திய ஆரவாரம் கடல் முழக்கமாகவும் வசவண்ணருடன் சென்ற படையானது மோதுகின்ற கடல் போல் எழுந்தது.

O இயைபுருவக அணி.

### வசவண்ணர் உவகையுடன் செல்லுதல்

31. இவ்வாறு எழும் படைப் பெருக்கத்துடன் வசவண்ண தேவன், தனக்குத் தானே ஒப்பாகிய குருபரனாகிய அல்ல மனை எதிர் சென்று அவன் தாளைத் தலையால் வணங்கு வேன் என்னும் உவகையோடு தேவர் கூட்டமும் வியப்பொடு துதிக்கும்படி சென்றான்.

வசவண்ணரும் அவருடன் கூட்டங்களும் செல்லுதல் கண்ட அமணர்கள் எள்ளி இகழ்தல்

32. அவ்வாறு செல்லும் செலவினை அறிவில்லாத சமணரும் பௌத்தரும் கண்டு ''இவர் என் மதிகொண்டோ வீணே வரவேற்கப் போதல்? தம் இறைவனையே பித்தன் (சிவன்) என்று சொல்லும் இப் பேயர் எவ்வாறு தான் நடக்க மாட்டார்?'' என்று சிவனடியார்களை இகழ்ந்தார்கள்.

விச்சல மன்னனிடத்தில் சென்று சமணர்கள் உரைத்தல்

33. விச்சல மன்னனிடம் அருகர்கள் சென்று ''எம் மன்னா! நின் நகரத்தில் ஒரு புதுமை ஏற்பட்டுள்ளது. அதனை நீ கேட்பாயாக. நல்ல சகுனம் ஒன்று அடைந்ததையே பற்றுக் கோடாகக் கொண்டு, தன்னிடத்தில் ஒருவன் வருவான் என்று எதிர்கொள்ளப் போகிறான்.

வசவண்ணர் செல்வது பயனற்றது எனல்

34 ''தண்ட நாயகன் (வசவண்ணன்) தோள்வலம் துடித்தது காரணமாகக் குருபரன் வருவான் என்று எதிர் கொள்ளுதல், ஒருவன் கனவிற் கண்ட அடிசிலை (மெய் என்று கருதி) உண்டு போதற்கான விருந்தினரைத் தேடுதலை ஒக்கும்.

O இல்பொருளுவமை.

வசவண்ணரை அமைச்சர் ஆக்கிய உன்னைப் போல் உலகில் யாரும் இல்லை எனல்

35. ''ஒருவன் வருவான் என்று அவனை எதிர் கொள்ளக் கடல் போன்ற படைகள் ஒருங்கு தன்னோடு பரவி வரும்படி செல்லுகின்ற இவனைப் பார்த்து ஒப்பற்ற அமைச்சுரிமை நல்கிய உன்னைப் போன்றவர்கள், ஆதிசேடன் தலைமேல் உள்ள உலகத்தில் யாரும் இல்லை'' என்று சொன்னார்கள்.

கடைசி வரை பார்ப்போம் என்று விச்சல மன்னன் சமணர்களிடம் கூறுதல்

36. அருகர்கள் சொன்ன வாசகம் கேட்ட மன்னன், மனம் வியந்து, ''அடிகேள்! (சுவாமிகளே!) திறமை மிகுந்த

தண்ட நாயகன் என்ன செய்கை முடிவு கருதினானோ அறி கிலம். முடிவு வரை பார்ப்போம், வருக (வரட்டும்). நீங்கள் பொறுமையா யிருங்கள்'' என்று கூறி அமைந்தனன்.

வசவண்ணர் முன் செல்ல அல்லமர் நினைதல்

37. வசவண்ணன் தனது உள்ளத்தில் தங்கியிருக்க, தான் அந்த வசவண்ணனின் மனத்தில் தங்கியிருக்கும் தலைவன் ஆகிய அல்லம தேவன், வசவண்ணனை இகழ்கின்ற சமணர் களின் செருக்கு அழிய வசவண்ணன் எதிரே செல்லுவதற்குத் தானே நினைத்தனன்.

அல்லமர் பித்தனாகக் கோலம் கொண்டு வருதல்

38. யான் எவ்வகைக் கோலத்துடன் சென்றாலும் வச வண்ணன் என்னைக் கண்டு கொள்வன் என்று, பொருந்திய கோவணத்தோடும் விரிந்த முடியோடும் தோன்றித், தன்னைக் கண்டவர் பித்தன் என்று இகழ, எனக்குப் பொன் போன்ற வனாகிய வசவ நாயகனின் எதிரே போனான்.

பித்தன் போல் வந்த அல்லமரைப் போபோ என்று எல்லாரும் விலக்குதல்

39. சுற்றி நின்றவர்கள் இவன் மருளனே (பித்துக் கொண்ட வனே) என்று நினைத்து விரைவில் இங்கிருந்து அகல் அகல் (விலகு விலகு) என்று விலக்கினார்கள். அனைவரும் கண்டும் இறைவுருவான அல்லம தேவனை ஒருவரும் உணர்ந்திலர். உருவு கண்டு இகழ்பவர்கள் உண்மையை உணர வல்லார் களோ?

O உருவு கண்டு எள்ளாமை வேண்டும் என்பது திருக்குறள்

அல்லம தேவர் திருவிளையாட்டு

40. அல்லம தேவன் அங்குத் திருவிளையாடல் நினைந்து, பல் முளைக்கும் வாயினையுடைய இளையோன் ஆக இருப் பான்: கொல்லுகின்ற இளைய காளை போலும் குமரனாக மாறுவான்; வில் போலும் உடல் வளைந்த முதியோனா கவும் தோன்றுவான்.

### அல்லமர் பாடி நடனமிடுதல்

41. விஞ்சையரும் மகிழ்வுற வீணை ஒன்றைக் கையாகிய மெல்லிய தாமரை மலரில் ஏந்திக் கொண்டு இனிய பாட்டுப் பாடுவான்; மை தீட்டிய விழிகளையும் மணி அரிச் சிலம்பு அணிந்த பாதங்களையும் உடைய வஞ்சியர் மனத்தில் மயல் வளர ஆடுதல் புரிகுவன்.

### அல்லமர் யானை மேலும் குதிரை மேலும் தோன்றுதல்

42. இந்திரன் இவன் என்று யானையின் மேல் ஏறி ஒரு பக்கத்தில் வந்து மக்கள் மயங்கத் தோற்றம் அளிப்பன். பைந்தொடி மாது ஒருத்தி பெயர்ந்து ஆடும் நடனம் போலக், குதிரை வரிசைக்கு முன் மடங்கிய பிடரி மயிரை உடைய குதிரையைச் செலுத்துவன்.

### எல்லா இடங்களிலும் காணப் பெறுதல்

43. ஞான நற் கண்ணினால் காணற்கு உரிய நம் அல்லம தேவனை, யான் வானிடைக் கண்டேன், மனையிற் கண்டேன் யான், படையுட் கண்டேன் யான், தெருவிற் கண்டேன் யான் என்று பலரும் சொல்ல அவன் கடி நகர் எங்கும் காணப் பெற்றான்.

O சித்தர் செயல்கள்.

### அனைவருடனும் காணப்பெறல்

44. அல்லம தேவன், ஆடுவார்களுடன் ஆடுவன், நல்ல இசை பாடுவார்களுடன் பாடுவன்; மெல்லிய மலர்களைச் சூடிக் கொள்வார்களுடன் சூடிக் கொள்வன்; வாளை அசைத்துக் கொண்டு ஓடுவார்களொடு கூடி ஓடுவன்.

### அல்லமரின் வேடிக்கை கண்டு மக்கள் மயங்குதல்

45. ஒப்பில்லாத அந்த வளநகரில் இருக்கின்ற மனிதர்கள் இவ்வாறு எல்லை யில்லாத ஆடல் வகை செய்கின்றவர் ஒருவரோ அன்றிப் பலரோ என்று உணர்கிலோம் என்று, அல்லமன் விநோதங்களை நோக்கி அஞ்சினார்கள்,

அல்லமரை வசவண்ணர் அறிதல்

46. மண்ணுக்குள் மறைந்து கிடக்கின்ற செல்வப் புதையலை, கண்ணில் பூசப் பெற்ற மையை உடையவன் கண்டு கொள்ளுதல் போல, பொருந்தும் மிக்க அறிவுடைய நந்தி பிரானாகிய வசவண்ணன், அண்ணல் அல்லமனை ஐயமின்றி அறிந்து கொண்டனன்.

O மையாற் பார்த்தல் முன்னரும் கூறப்பட்டது.

வசவண்ணர் அல்லமரை வணங்குதல்

47. உடல் முழுதும் உள்ளமாக நெக்கு உருகிக் கண்களில் நீர் அடங்காமல் பெருகி வர உடல் நடுங்க, "அன்பினால் தொடர்வுற்று எல்லா உயிர்களையும் ஆட் கொண்டு அருளும் சிறந்த குணமுடையவனே, அருளுக" என்று நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சினான்.

அடியார்களும் அவ்வாறே வணங்குதல்

48. தண்ட நாயகனாகிய வசவண்ணன் தடியைப் போல நிலத்தில் நன்றாக விழுந்து வணங்கி எழ, அவனொடும் கூட அடியார்களாகச் சூழ்ந்திருந்தோர் அதனைக் கண்டு கண்களில் இருந்து நீர் விழ, கசிந்த அன்பினால் அண்டர் நாயகனாம் அல்லமனது திருவடி வணங்கினார்கள்.

மலர்மழை பொழிந்து தேவர்கள் துந்துமி முழங்குதல்

49. வசவண்ணனது அன்பையும் வசவண்ணனிடத்து வந்த எந்தை அல்லமனது அருளையும் என்ன என்று கூறுவோம் என்று வியந்து தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். அடியார்கள் ஆரவாரம் செய்யத் தேவ துந்துமி அதிர்ந்தன.

கலியாணபுரம் கயிலாயமே எனல்

50. மயக்கம் அற்ற நம் குரு வசவண்ணன் வாழும் தன்மையினாலும் அல்லம தேவன் எண்ணி வந்த செய்கையினாலும் அடியார் கூட்டம் கண்டு மகிழ்தலாலும் வனங்கெழு கலியாண புரம், கயிலாயமே எனப்படுவதாகும்.

அன்பிலாச் சமணர் அழுக்காறு கொள்ளல்

51. நல்ல வசவண்ணனின் செய்கையையும் உயரிய அந்தக் குருபரன் அல்லமனின் செய்கையையும், கரியமெய்யினை உடைய சமணர்கள் தெரியத் தாங்கள் கண் கூடாகக் கண்டும் அவர்கள் பால் சுற்றும் அன்பிலராகவே இருந்தனர். அரியவற்றுள் எல்லாம் அரியது, அழுக்காறு ஆகிய பொறாமையை வெல்வது.

O வேற்றுப் பொருள் வைப்பு அணி.

வசவண்ணரின் மாளிகைக்கு அல்லமர் செல்லுதல்

52. ஆகமங்களின் முடிவாகத் திகழும் சைவ தேசிகனாகிய அல்லம தேவன் எதிரே வந்து தனது தாள்களை வணங்கினாரொடு, சிறப்பு மிக்க திருமகள் விளங்கும் தெருவழியாகச் சென்று நந்தி தேவனாகிய வசவண்ணனின் மந்திரத்தை (வீட்டினை) அடைந்தான்.

அல்லமர் சூனிய சிங்காதனத்தைப் பார்த்தல்

53. தேவரும் முனிவரும் சித்தரும் ஆகிய யாவரும் இதன் இயல்பு இத்தகையது என்று ஆய்ந்து தெளிதற்கு அரிய நிலையை உடைய அம்பர் ஆதனத்தை, மூவரும் வணங்கும் முதல்வனாகிய அல்லம தேவன் நோக்கினான்.

அல்லமர் அந்த வெளியணையில் ஏறுதல்

54. தன் நிலையில் நின்றும் பிறழ்தல் இல்லாத அறிவே வடிவாக உள்ள அல்லம தேவன், திசைகள் அடங்கிய, மணிகளால் இயன்ற வெளி யணையின் உச்சியில், வசையறு வழியில் நடக்கும் வசவ தேவனின் புகழ் பொருந்திய உலகில் அது மேலும் உயர்வுற, ஏறினான்.

மலர் மழை பொழிதல்

55. கூறுதற்கு அரிய ஒளியை யுடைய குதிரை கட்டிய தேரையுடைய கதிரவன், வேறொரு மணிமயமான மலைமிசை ஏறினான் என்று கூறுமாறு, இன்ன தன்மைத்தென

யாராலும் தெளிய முடியாத சிங்காதனத்தின் மீது தேசிக உத்தமன் ஏறிய அளவில் மலர் மழை பொழிந்தன என்று அறிஞர் உரைப்பர்.

### பலவகை ஒலிகள் எழுதல்

56. முரசொடு பல இசைக் கருவிகளின் ஒலி முழக்கு எழுந்தன. குற்றமற்ற அடியவர் தொகுதி கைகளைக் குவித்து அரகர என்று எழுப்பும் ஒலியானது மேலே அண்ட உச்சி அளவும் ஒருகணம் ஒடுங்குவதற்கு முன் விரைந்து ஓடியது என்று அறிஞர் கூறுவர்.

### ஏழாம் நிலையில் அல்லமர் அமர்தல்

57. முதல் நிலை முதலாக உள்ள ஆறு நிலையின் மூலமாகிய முதல் ஆதாரம் (மூலாதாரம்) ஆகிய ஆயிரம் இதழ் விரியும் தாமரைப் பொகுட்டினுள் எழுந்தருளிய இலிங்கமே (ஆத்மாவே) அந்த ஆறாதாரமாக நின்று, அந்த இடங்களினின்றும் நெற்றியின் மேலே பிரகாசிக்கும் தூய வடிவம் போல முன் சொல்லிய ஏழாம் நிலையாகும் (யாது மற்றவெளியிடம்). அதன்மேல் அல்லமதேவன், அமரரும் வியப்ப ஏறினன்.

O சூனிய சிங்காதனம் என்பது யோக நுண் கலையின் உட்பொருள் கொண்ட உருவகம் என்பது இதனால் விளங்கும்.

### தனி விசும்பில் அல்லமர் இருத்தல்

58. உடம்பொடு ஐந்து பொறிகளும் நான்கு கரணங்களும் மேலும் உயிர் என்றும் உரைத்திடும் உபாதிகளைக் கடந்துள்ள முடிவாய நிலையில் சோதியாக ஒளிரக் கண்டு கொண்டிருக்கும் துரிய நிலை உடையோன்போல நெடிய சிம்மாசனம் அமைய ஏற்படுத்திய, செம் மணிகள் பதித்த பொன்னால் ஆகிய ஏழு நிலைகளையும் கடந்து தனி விசும்பு என்னும் இடத்தில் அல்லமன் எழுந்தருளி இருப்ப, அங்கு இருந்தவர் யாவரும் கண்டனர்.

அடியவர்களின் மகிழ்ச்சிப் பெருக்கு

59. அப்பொழுது முக்கண் இறைவனின் அடியார்கள் ஆங்கிருந்தோரில் சிலர் ஆடினர், அங்கைகள் கொட்டி அல்லம தேவனது பெரும்புகழைப் பாடினர் சிலர். விழி பொழி வெள்ளம் பாய, குவித்த கைகளைத் தத்தம் தலைமேற் சூடினர் சிலபேர். நிலமிசை விழுந்து சிலவர் தொழுதனர் மெய் புளகாங்கிதம் அடைந்தனர் சிலவர். வணங்கினர் சிலவர்.

வசவண்ணர் பேரின்பக் கடலில் படிதல்

60. மேலோங்கிய அந்தர சிம்மாசனத்தில் ஏறி யிருந்து அருளும் அண்ணல் அல்லம தேவனைக் கண்ட அப்பொழுதே, ஆகமம் யாவினும் சிறந்த சிவாகமம் என்னும் அருணந்தியாகிய வசவண்ணன் பொறி புலன் கரணம் யாக்கை என்ற யாவற்றையும் மறந்து, முந்திய பரமானந்த வாரிதி (கடல்) யில் மூழ்கினன், அழுந்தினன்.

அல்லமர் வசவண்ணரைப் போற்றுதல்

61. ''மண்டலங்களும் அவத்தைகளும் குணங்களும் அபிமானங்களும் மலங்களும் ஆகிய இவை அனைத்தையும் கடந்து, உள்ளே காணும் வண்ணம், புறத்தில் நீ எம் உண்மை உருக் காணும் பொருட்டு அமைத்த இந்தச் செயலை, வெள்ளிய அலைகளைச் சுருட்டும் கருங்கடல் சூழ்ந்த உலகில் வேறு எவரும் செய்தல் இயலாது'' என்று தொண்டர் போற்றும் வசவண்ணனை, அமரர் போற்றும் எம் பெருமான் அல்லம தேவன் போற்றினான்.

அல்லமர் பொன் அரியணை மேல் விசும்புற அமர்ந்து இருத்தல்

62. ''உனது அருள் இருக்குமாயின், கமலன் (பிரமன்) மால் ஆகியோரின் (படைத்தல் காத்தல்) தொழில்களை ஒரு துரும்பு செய்யும்'' என்று நல்ல வசவண்ணன் புகன்று கை கூப்பி இணை விழி நீர் பெருகத் தன்னை மறந்து பரவசப் பட்டு நிற்க, தண்கதிர் வீசும் செம் மணிகள் பதித்த பொன்னால் ஆகிய அரியணை மேல் உள்ள சூனிய பீடத்தில், யாரானும் அடைதற்கு அரிய அல்லம தேவன் அமர்ந்திருந்தான்.

# 23. ஆரோகண கதி

**கதைக் குறிப்பு : கவிஞர் கூற்று**

1. ''ஒருவர் உண்ண ஒருவர் பசி கெடார்'' (இந்த உலகத்தில் ஒருவர் சாப்பிட மற்றொருவர் பசி நீங்கார்) என்று சொல்லும் பழமொழி பொய்த்துப் போகுமாறு அருளினால் அல்லம தேவன் அடியார்கள் பசி கெடக் கலந்து உண்ட பெருமையைக் கூறுவாம்.

O பழமொழி. ஆரோகணம்-மேலேறிச் செல்லுதல்.

**அல்லமர் சூனிய சிங்காதனத்தில் அமர்ந்திருத்தல்**

2. குளிர்ச்சி பொருந்திய அழகிய திங்களைக் காட்டிலும் குளிர்ச்சியாக, தண் கதிர்த் தன்மை சுருங்காத ஒரு கதிரவன், பெருங்கற்களால் இயன்ற அழகிய மலையில் வந்த தன்மை போல, யாவரும் மதிக்கத் தக்க நம் அல்லம தேவன், சூனிய சிம்மாசனத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில்,

O சந்திரனை விடக் குளிர்ச்சியான சூரியன் ஒன்று உண்டாகி ஒரு மலையின் மேல் நின்றால் எப்படியிருக்குமோ, அப்படிப் பட்ட நிலையில் அல்லம தேவர் வெளித் தவிசில் வீற்றிருந்தார் என்பதாம்.

O இல்பொருள் உவமை.

**அல்லமரை நோக்கி வசவண்ணர் அசைவற்ற ஓவியம் போல் ஆதல்**

3. வசவண்ணரது உள்ளம், வயலில் நேராகப் பாயும் நீரைப் போல், வெற்றி யாளன் ஆகிய அல்லம தேவனது திருமே-னியே தனக்கு இலட்சியார்த்தமான வடிவாகக் கண்டு அசைவின்றி வேறு ஒன்றும் அறியாதவனாக, பொருந்திய ஓவியம் போல் இருந்தனன்.

**சென்ன வசவரும் அல்லமரைக் கண்டு மகிழ்தல்**

4. சாணை பிடிக்கப் பெற்ற மணிகளால் இயன்ற சூனிய சிம்மாசனம் என்ற கலத்தில், அழிவிலா ஒளியாம் அல்லம

தேவன் என்னும் வளமிக்க நல்ல சுதையை (அமுதை)ச் சென்ன வசவ தேவனும் தன் கண்களுக்கு விருந்தாக இட்டான்.

O சூனிய சிங்காதனம், பாத்திரம். அதிலிருந்த அல்லம தேவன் அமுதம். அதனைச் சென்ன வசவன் கண்கள் விருந்து அயர்ந்தன.

O உருவக அணி.

### மோளிகை மாரன், மடிவால மாச்சன் ஆகியோர் அல்லமரைத் தரிசித்து மகிழ்தல்

5. சினம் ஏழாது காக்கும் மோளிகை மாரன் என்பவனும் இருவினைகளையும் அழிக்கும் மெய்யறி வுடைய மடிவால மாச்சனும் சூனிய சிம்மாசனத்தில் எழுந்தருளிய தனக்குத் தானே ஒப்பான அல்லம தேவன் என்ற மலரில், மனம் என்கிற வண்டு மொய்க்க விடுத்தனர்.

O உருவக அணி.

### அடியார் பலரும் அல்லமரைச் சூழ்ந்திருத்தல்

6. முன்பு வந்திருந்த பேரறிவாளரும். பின்னர் வந்து சேர்ந்த பெருமக்களும் ஆகிய அடியார்கள், மன்னன் அல்லம தேவன் எழுந்தருளி யிருந்த அழகிய தவிசின் பக்கத்தில் நெருங்கி எங்கணும் சூழ்ந்தனர்.

### நீறு கண்டி ஐந்தெழுத்து ஆகியன பேணுவோர்

7. குழைத்த திருநீற்றை அழகிய நெற்றியில் பூசி, மெய்யில் கண்டி என்னும் கலன் அணிவார் சிலர்; பழைய நான் மறையினை ஓதுவதால் எய்தும் பயனாகவே கொள்ளப் பெற்ற ஐந்தெழுத்தினையும் மனத்தில் கொள்வார் சிலர்.

### இறைவனைப் பூசிப்பார் சிலர்

8. நந்த வனத்தில் பெற்ற அன்றலர்ந்த மலர்களும் ஆட்டும் நீரும் சந்தனமும் திருவிளக்கும் தண்புகையும் முதலாயவற்றைக் கொண்டு புலன்கள் அனைத்தும் அடங்கிய மனத்தோடு அந்தி வண்ணன் ஆகிய சிவனை அருச்சிப்பார் சிலர்.

○ கரும நெறி

ஐந்தவித்தார்க்குத் தொண்டு செய்வார் சிலர்

9. அழியாத பூசையைத் தாங்கள் செய்வதிலும் சான்றோர் நூல்களாற் கூறப்படும் ஐம் புலன்களையும் தத்தம் விருப்பிற் செல்லாவாறு காக்கும் எண்ணம் உடையார்க்குத் தொண்டு புரிதலே உத்தமம் என்று உரைப்பார் சிலர்.

○ தொண்டு நெறி

இறைவன் புகழை ஓதுவார் சிலர்

10. பூசனைத் தொழில் செய்வதை விட ஈசனைப் போற்றிப் புகழ்தல் எட்டு மடங்கு நல்லது என்று, ஊஞ்சலைப் போல் அங்கும் இங்கும் அலைகின்ற மனம் இல்லாதோராக ஐம்புலன்கள் என்னும் புழுதி அடங்கி நிற்கத் துதிப்பார் ஒரு சிலர்.

○ பக்தி நெறி

'அது நீ' எனும் மறைமுடிவை ஓதுவார் சிலர்

11. உடல் ஆத்மா ஆகிய இரண்டின் ஒன்றிப்பு (ஐக்கியம்) இது என்று நன்மை தருகின்ற மா மறைகளின் முடிவில் இருப்பதான 'தத்துவமசி' என்பதன் பொருளைப் பழுதின்றி உரைப்பார் சிலர்.

○ தத்-அது, துவம்-நீயாக, அசி-ஆகிறாய். அது நீயாகிறாய்; அதுவே நீ என்பது பொருள். இது மறை முடிவு ஆய்வு.

ஆசானிடம் ஆராய்வர் சிலர்

12. பாசம் என்பது யாது? பசு எனப்பட்டது யாது? ஈசன் என்பவன் யாவன்? ஆருயிர்களின் குற்றம் நீங்குதற்குப் பதி எப்படி அருளும்? அருளுடைய குருவே! என்று ஆராய்வார் ஒரு சிலர்.

○ சித்தாந்த ஆய்வு. ஈசன் மாயா சகிதன்; பதி மாயா ரகிதன்.

மனம் அழியப் பெற்றனர் ஒரு சிலர்

13. புறத்தில் நாளும் செய்யும் பூசையினும் அகத்தே செய்யும் தியானம் நல்லது என்று சிறப்புற்றுப் பொருந்தி மெய் மறக்க, சிவலிங்கத்தை அடைந்து மனோ நாசம் அடையும் நிலையை எய்தினர் ஒரு சிலர்.

O தியான நெறி. இங்கே சிவலிங்கம் என்பது ஆன்மப் பெருஞ்சுடர்.

உயிர்க் காற்றைக் கட்டுபவர் சிலர்

14. ஓடித் திரும்பும் உயிர்க் காற்று அசைவற நிற்காவிடில் நெடிது பரந்து செல்லும் மனம் நிற்க மாட்டாது. ஆதலால் வீடு (முத்தி) அடைதல் அரிது என்று (யோக) விதி முறையை நாடிக், காற்றைக் கட்டுப் படுத்தி நிறுத்துவார் ஒரு சிலர்.

O யோக நெறி.

நினைவற்ற வசவண்ணரை அடியார்கள் பார்த்தல்

15. இத் தன்மையராக அடியார்கள் இருந்த பொழுது, அல்லம தேவனிடத்தில் நினைவு அனைததும் ஒருங்குபெற நிற்கத் தங்களிடத்தில் சிறிதும் கவனம் செலுத்தாத வசவண்ணரைக் கண்டார்கள்.

அடியார்களுள் பெரியார் சிறியார் இல்லை

16. அரவு (பாம்பு) அணிந்த கடவுளின் அடியார்களுக்குள் பெரியவர் சிறியவர் என்கிற வேறுபாட்டு இயல்பு எவன் கருதுகிறானோ அவன் சிறியவனே என்று விரிந்துபட்ட வேதங்கள் விளம்பும் என்று அறிந்தோர் கூறுவர்.

அடியார் யாவராயினும் வணங்கத் தக்கவரே எனல்

17. திரு நீறு அணியும் அன்பன் ஆவை உரிக்கும் தொழில் செய்பவனாயினும் யானையை உரித்த நம் சிவன் என்று வணங்கத் தக்கவன், அவனது திருவடியை அருச்சிக்க மலர் உரிமை உடையது, அவனைப் போற்ற நா உரியது,

என்று நான்கு மறைகளும் ஓதுகின்றன.

வசவண்ணர் அடியார் தொண்டினை மறந்திருத்தல்

18. அல்லம தேசிகன் செய்யும் இந்திர சாலத்தில் மனம் தங்கிய வசவண்ணன், வந்திருப்போரும் இனி வரவிருப்போரும் ஆகிய முடிவிலா அடியார் கூட்டத்துக்குச் செய்யும் பணியைச் செய்கிலன் ஆயினன்.

அடியார் கூட்டம் சினந்து புறப்பட்டது

19. அடியார் தொண்டு தவறியவனிடத்து நாம் இருந்து புசித்து உடல் சுமப்பதினும் விட்டுத் துறத்தல் நன்று என்று தலைவனாகிய தண்ட நாயகனை (வசவண்ணனை) விட்டு மெய்யடியார் கூட்டம் வெகுண்டு நீங்கியது.

தனது மனை அழகு கெட்டு இருத்தலை வசவண்ணர் பார்த்தல்

20. மிகுந்த அடியார் குழாம் விட்டு நீங்கிய பின், திருமணம் நடந்த அடுத்த நாள் இருக்கும் வீட்டுக்கு ஒப்பத் தன் ஒப்பற்ற இருப்பிடம் தனித்து இருப்பதை, நன்மையை அறிந்து நற்செயல் ஆற்றும் வசவண்ணன் கண்டான்.

ஏராளமான உணவு வீணாகுமே என்று வசவண்ணர் வருந்துதல்

21. அன்பு விளைதற்கு இயைந்த நெறியினின்று நான் இன்று வழுவினேன். திரளான அடியவர்களைக் குறித்துச் செய்த குறைவிலா உணவு உண்ணப் படாமல் கெட்டுப் போகுமே என்று மனம் நொந்தான்,

அடியாரிடம் அன்பு கொளல் எளிது அன்று எனல்

22. அடியாரிடம் அன்பு (சங்கம பத்தி) செய்யும் வசவண்ணனே, அடியாரிடம் அன்பு செய்யும் விரதம் கொண்டு ''நான் அடியார் அன்பில் தவறினேன்'' என்று கூறுவானாகில் அடியார் பக்தி என்பது எளிதானது அல்லவே?

சங்கம பக்தியால் பிறவி ஒழியும் எனல்

23. ''பிறர் இகழ்ந்தாலும் வெறுத்தாலும் இல்லத்தில் உள்ளன அழிந்தாலும் உடம்பைத் துண்டு துண்டாக அரிந்து

பிறர் கொல்ல நேர்ந்தாலும் பழிப்பில்லாத அடியார்க்கன்பு செய்பவன் பிறவி ஒழிப்பன் என்று உயர்ந்தோர் கூறுவர்.''

வசவண்ணரது எண்ணம் நிறைவேற அல்லம தேவர் நினைத்தல்

24. இவ்வாறு அடியார்மாட்டு அன்பு உள்ளதாம் (சங்கம பக்தி) நெறியை அழியாது மேற்கொண்டவனும் எம்மை ஆளுடையவனும் ஆகிய வசவண்ணனது எண்ணம் நிறைவேற அங்கு ஆக்கிய சோறு முதலிய உணவு அனைத்தும் உண்டு அல்லம தேவன் அடியார்களுடைய பசி யனைத்தும் தணிந்து போக நினைத்தான்.

தம் பசிக்குச் சிறிது உணவிட அல்லமர் வேண்டுதல்

25. ''யான் ஒருவன் கொஞ்சம் பசி உடையவன்; சிறிது உணவு நீ விரைவாகக் கொடு, உன் விருப்பப்படி பின்பு அன்புள்ள அடியார்களுக்கு உணவு இடு'' என்று ஒப்பற்ற வசவண்ணனை நோக்கி அல்லமன் சொல்லினன்.

அல்லமரை அழைத்துச் சென்று இருக்கையில் அமர்த்தல்

26. அல்லம தேவன் முனிவுறாது அருளும் வண்ணம் துணிந்து "யான் செய்யும் நல்வினை'' என்று மகிழ்ந்து அவனை வணங்கி மெல்ல மனைக்குள் அழைத்துக் கொண்டு போய், மெல்லிய மலர் பெய்த ஆசனத்தில் ஏறச் செய்தனன் வசவண்ணன்.

அல்லமருக்குத் திருவடி வழிபாடு செய்தல்

27. இருக்கையில் ஏற்றிய அருள் வசவேசன், எம்பிரான் அல்லம தேவனின் திருவடித் தாமரைகளை நறுமண நீர்,மென் மலர்கள், நறும்புகை, திருவிளக்கு என்று போற்றற்கு உரிய இவற்றால் பூசை செய்தான்.

அல்லமருக்கு வசவண்ணர் உணவு படைத்தல்

28. பூசனை செய்த பின்னர் வணங்கி நின்று அழகிய உண் கலம் இட்டு மெல்லிய சோற்றினைப் படைத்து, அதற்கு மேல் தொட்ட கையையும் ஒரு யோசனைத் தூரம் மணம்

வீசச் செய்யும் கறிகளையும் அழகிய உணவு வகைகளையும் முறையே படைக்கச் செய்து வசவண்ணன்,

**இட்ட உணவை இமைப் பொழுதில் அல்லமர் உண்ணுதல்**

29. ''புசித்தருளுக'' என்று அடி தொழலும், அந்த உண் கலத்தில் நிறைவாகப் படைக்கப் பெற்ற உணவில் ஒரு பருக்கையும் எஞ்சாமல் அங்கிருப்போர் வியப்படைய ஓர் இமைப் பொழுதில் உண்டனன்.

O அல்லமர் நிகழ்த்திய அதிசயங்களில் ஒன்று. மருட்கைச் சுவை.

**மேன்மேலும் படைக்க அல்லமர் அவ்வாறே உண்டமை கண்டு வியத்தல்**

30. பின்னும், முன் படைத்த படியே படைக்க ஐயன் அல்லமன் முன் உண்டவாறே அருந்திப் பின்னரும் பின்னரும் அவ்வாறு படைக்க முன்னர்ப் போன்றே உண்டான். தண்ட நாயகனாகிய வசவண்ணன் அது கண்டு உள்ளம் வியந்தான்.

**அல்லமரின் பசி மிகுதல்**

31. மிக்க நெருப்பில் சிறிது சிறிதாக விறகினை இட இட அந்த நெருப்பு பெரிதாக எழுதல் போல, சிறிது சிறிதாக அன்னம் இடும் செய்கையினால் அருளிறை யாகிய அல்லமனின் அழகிய வயிற்றுக் கொடுந் தீ மிக எழுந்தது.

**ஆக்கிய உணவெல்லாம் அல்லமருக்குப் படைக்க வசவண்ணர் கட்டளை இடுதல்**

32. தான் எண்ணியவற்றை எண்ணியவாறே இயற்றும் ஏவலாளிகளை வசவண்ணன் ''வாருங்கள்'' என்று அழைத்து ''நமது மடத்தில் சமைத்த உணவெலாம் இவருக்குப் படையுங்கள்'' என்று சொன்னதும் விரைவாக உணவு படைக்மகு வேலையை அவர்கள் தொடங்கினார்கள்.

வெள்ளி மலையைக் கொண்டு வந்து வைத்தது போல் சோற்றினைக் குவித்தல்

33. அளவற்ற அடியார்களுக் கெல்லாம் ஆக்கிய உணவு மலையை வாரிக் கொள்ளத் தகுந்த கூடைகளோடு கூடைகள் இடிபடுமாறு வாரிக் கொண்டு, வளப்பமுள்ள வெள்ளி மலையை (கயிலைக் குன்றை) அடியோடு பெயர்த்து இவண் வைத்தாற் போல மல்லிகை அரும்பை ஒத்த அடிசிலை எங்கள் தம்பிரான் ஆகிய அல்லமன் எதிரில் குவித்தார்கள்.

O உவமை

பருப்பு நெய் முதலியவற்றைப் படைத்தல்

34. சமைத்த பருப்பு ஒரு பொருப்பு (மலை) என்னுமாறு படைத்தார்கள். சிலர் புதுமணம் கமழும் நெய்யை எடுத்துக் கவிழ்த்து விட்டார்கள், சிலர் மணக்கும் பொரிக்கறி பச்சடி குழம்பு புளிங்கறி போன்றவற்றைச் சிலர் வரிசையாக நின்று மேகங்கள் போல் சொரிந்து நின்றார்கள்.

வடை மாங்கனி கரும்பு முதலியவற்றைப் படை படை என்று படைத்தல்

35. வடைகள், பொருந்திய சக்கராயுதங்களாகவும் மாங்கனிகள், கவண் கற்களாகவும் உடைபடு கழைக் கரும்பு, அங்கு கதாயுதம் ஆகவும் கொண்டு கீழ்படும் உலகிற் கெல்லாம் காரியம் நடத்துகின்ற தலைவனாகிய அல்லமனுக்கு முன்னர், படைக்களத்தில் எதிர்த்த இளைஞர்களைப் போல படை படை (படையுங்கள் படையுங்கள்) என்று மொழிந்தார்கள்.

O உருவக அணி, நகைச்சுவை.

பால் பழவகைகள் படைத்தல்

36. குளமானது எல்லையாக அந்தக் குளத்தில் பசுவின் தீம் பாலை விளங்கும் பாற்கடலை விடுத்தது போல் விட்டார்கள், சில பேர். உள்ளத்தைக் கனிவிக்கும் மூவரின் (சம்பந்தர் அப்பர் சுந்தரர் ஆகியோரின்) தேவாரச் செய்யுள் போன்ற முக்கனிகளைச் சிலரும் மற்றையோரின் வளம் பொருந்திய செய்-

யுள் போல (திருமுறைகள்) மற்றையோர் மற்றக் கனிகளை நிரப்பினார்கள்.

O உவமை.

அல்லம தேவர் அனைத்தையும் உண்டு வறிதிருத்தல்

37. எண்ணிறந்த பேர்கள் இடுவன அனைத்தையும் இனிமை யானவை இனிமையற்றவை என்று சொல்லானாக, கண் இமைப்பதற்கு முன்னர்க் கடிது உண்டு, உணவிடுவோர் சலித்து உணவிடா நிலையில் அழகிய இனிய மலர் போன்ற கையை எடுத்து எங்கோன் அல்லமன் சும்மா இருந்தான். கதிரவனின் குதிரைகளுக்கு, மேடு பள்ளம் எனப்பட்டவை, போம் வழியில் இருக்கின்றனவோ?

O உவமை.

இனி உணவு இல்லை என உணவிடுவோர் கூறல்

38. 'கொஞ்சம் இன்னும் சாப்பிடுக' என்று சுற்றத்தினர் உபசரியாதவாறு 'இன்னும் கொஞ்சம் இடுக' என்று தம்பிரான் அல்லமன் உண்டு கொண்டிருந்தான். இதனைக் கண்டு நின்ற உணவு படைப்போர் சமைத்த மட்கலம் தவிர வேறு பற்றில்லை (சிறு பருக்கை கூட இல்லை) என்று வசவண்ணரை நோக்கிச் சொன்னார்கள்.

O பற்றில்லை, சொல்லாட்சி நயம்.

செல்வர்கள் தங்கள் இல்லங்களில் உள்ள உணவைப் படைக்க எண்ணுதல்

39. உணவில் விளையாடல் செய்யும் ஒருவனை (ஒப்பற்ற அல்லமனை)க் கண்டு, மன்மதன்மேல் கண் விளையாடல் செய்த நெற்றியை உடைய கடவுளின் மெய்யடியார்கள் எல்லாம் விண்ணுலகம் வரை சென்று பொருந்திய சோலை சூழ்ந்த அந்தப் பெரிய நகரத்தில் திருமகள் விளையாடும் தம் இல்லத்திலுள்ள மிக்க உணவை இடுதற்கு எண்ணி.

### வண்டிகளில் உணவு கொண்டு வந்து படைத்தல்

40. வண்டிகளின் மேல் ஏற்றிக் கொண்டு வந்தும் பானைகளிற் சுமந்து கொண்டு வந்தும் அவரவர் விரும்பியவாறு சமைத்த வெவ்வேறாய உணவு வகைகளை ஆண்தகைப் பெரியோனாகிய அல்லம தேவன் வயிற்றுத் தீ நீங்கும் வண்ணம் ஊட்டுவோம் என்பார் போல அளவில்லாத பேர்கள் சொரிந்து குவித்தார்கள்.

### பலவகை உணவுப் பண்டங்களை மலையாகக் குவித்தல்

41. குற்றமற்ற மெய்யறிவுக் கடலாகிய அல்லம தேவனுக்கு முன் மலைபோல இலைக் கறி (கீரை) களையும் மலர்க் கறிகளையும் பசுங்காய், மணக்கும் இளம் தண்டு, பெருங்காயம் முதலியன செய்த கறி அமுதுகளையும் வேறு பலவாறாகச் செய்யப்பட்ட உணவுப் பொருள்கள் எல்லாம் விரவ விரைந்து வந்து படைத்தார்கள்.

### படைப்போர் பலப்பலர்

42. அங்கே தாளித மணம் வீசும் கறிகளை இட்டுக் குவிப்பவர் சிலர். நெய்யை எடுத்துக் கவிழ்க்கின்ற கையை உடையவர்களாக நிற்பவர் சிலர், நிறையப் பெய்து விடு, கவிழ்த்து விடு, சொரிந்து விடு என்று பசுவின் பாலை விடுபவர் சிலர். பிசைந்த கையும் கமழத் தகுந்த தயிரைக் குடத்தோடு கவிழ்ப்பவர் சிலர்.

### உணவு படைப்போரின் செயல்கள்

43. முன் அன்னம் இட்டவர்கள் பின்னும் அன்னம் படைத்தற்கு விரைவாக ஓடுவார்கள். எதிரும் புதிருமாக வந்து முட்டிக் கொள்வார்கள். சோற்றைக் கூடையில் வாங்கி வாங்கிக் கொட்டுவார்கள். அன்னம் படைக்கும் இறையடியார்கள் உணவுக் கூடைகளைக் கவிழ்த்த பிறகு தட்டுவார்கள்.

### சமைக்கப் பெறாதவற்றையும் படைக்க எண்ணுதல்

44. இவ்வாறு படைத்த உணவு அனைத்தையும் இமைப் பொழுதில் உண்டு சைவ மன்னனாம் அல்லம தேவனின் வயிற்றில் வெந்தீயை வளர்த்து விட்டீர்கள் நீங்கள் எல்லாம்

என்று சொல்லி நல்ல வசவண்ணன், சமைத்தற்கு இருந்த பல பண்டங்களையும் கொண்டு அவனது பசியை ஆற்ற நினைத்து இதனைச் செய்தான்.

அவரை பயறு எள் அரிசி முதலியவற்றைப் படைத்தல்

45, அவரை பயறு எள்ளு அரிசி அவல் கொள்ளு துவரை கடலை செம்மையான சோளம் நெல், புல் (கம்பு முதலியன) குவரை ஆகியவற்றை வெள்ளி மலையும் (கயிலை) பொன் மலை (மேரு)யும் போல உலகில் எவருக்கும் மகிழ்ச்சி உண் டாக எவ்விடத்தும் குவிக்கச் செய்தான்.

எல்லாம் உண்டபின் வசவண்ணர் மனத்தால் படைத்ததை அல்லமர் நினைப்பால் உண்ணுதல்

46. குன்று போல் குவித்தவை அனைத்தையும் உண்ணுக என்று சொன்ன அளவில் அல்லமன் அரைக் கணத்தில் மென்று விட்டு "இன்னமும் மென்று தின்னத் தக்கவற்றைக் கொண்டு வாரீர்" என்று கூற, வலிய திறம் கொண்ட தண்ட நாதனாம் வசவண்ணன் தன் மனத்தினால் படைத்தலைச் செய்து நிற்க அல்லம தேவனும் நினைவினால் அவற்றை அயின்றான்!

இருவரும் தோல்வியடைய வில்லை எனல்

47. வசவண்ணன் பார்வையால் படைத்தவற்றை எல்லாம் அல்லம தேவன் பார்வையாலே உண்டு தீர்த்தான்; வசவண் ணன் வாக்கினால் அளித்தவற்றை எல்லாம் வள்ளல் அல்லம தேவன் வாக்கினால் உண்டு போக்கினான், இடுத லும் உண்ணுதலும் என்கின்ற இந்தப் போரின் கண்ணே ஆராய்ந்து பார்த்தால், அவ்விருவரும் தோல்வியுற்றுப் பின் வாங்க வில்லை!

இருவர் செயலையும் கண்டு அடியார் வியத்தல்

48. படைக்கும் தொழிலைச் செய்த பக்தனது (வசவண்—ணனது) வல்லமையும் அதனைத் தின்று தீர்க்கும் தொழிலில் நின்ற தூயவன் (அல்லம தேவனது) வல்லமையும் பார்த்து அங்கு நின்ற அடியார் எல்லாம் அத் தன்மையராகிய இரு

வரின் கீர்த்திகளையும் எடுத்துரைத்து மனம் வியந்து இரு வரையும் ஒருமிக்க இறைஞ்சினர்.

இவர்களுக்கு நிகர் இல்லை எனல்

49. படைத்தற்கு வல்லவன் வசவண்ணன்; படைக்கும் பொருள் எவற்றையும் கை தொட்டு உண்பதற்கு வல்லவன் இந்தத் தூயவன் அல்லம தேவன் என்று சிலர் கூறுவர். இவ்வாறு படைத்தற்கு வல்லார் வேறு எவரும் இல்லை என்பார் சிலர், இவ்வாறு கைவைத்தற்கு வல்லார் தம்மை யாம் கேள்விப்பட்டு அறிந்த தில்லை என்பார் சிலர்.

அல்லமர் உயிருக்குள் நிற்பவர் எனச் சென்ன வசவர், வசவண்ணரிடம் கூறல்

50. கண்ணப்பன் மிக்க அன்பினால் கறியாக அமைத்த ஊனை உண்ட இறைவன், உடம்பிற்கு வேறாகிய உயிருக்கு உயிராக இருப்பன் என்று அழகிய பொன் போன்ற சென்ன வசவ தேசிகன், வணங்கி, நந்தி முகம் கரந்து பிறந்த வசவண்ணனுக்கு வேண்டுகோள் உரைத்தான்.

மடிவால மாச்சி தேவரும் அவ்வாறே கூறல்

51, சென்ன வசவ தேவன் சொல்லிய அந்தச் செயலே செய்யத் தக்க செயல் என்று மடிவால மாச்சி தேவன் மன்னிய அருளோடு வந்து சொல்ல, என்னை ஆளாக உடைய வசவண்ணன், ''உமது மொழியே என் மனத்தைத் தேற்றத் தகுவது ஆகும். மிக்க கலங்கல் நீரைத் தெளிவித்தற்குத் தேற்றாங் கொட்டையை அன்றி வேறு உளதோ?'' என்று சொல்லி,

வசவண்ணர் அல்லமரின் அடிபணிதல்

52, "ஐம்பொறிகள், அகக் கரணங்கள், ஐம் பூதங்கள், ஐம் புலன்கள் இன்னும் பல்வகையாக விரிந்துள்ள தத்துவங்களே கறிகளாக, ஆருயிரே கலந்துண்ணத் தகுந்த சோறாகவும் நீ உண்ணும் படியான பேறு யான் அடைந்தேனில்லை'' என்று நின்று, பிறவிப் பிணி தீர்க்கும் மருத்துவனாகிய அல்லம தேவனின் நறிய மலர் போன்ற மெல்லிய திருவடிகளை, நம்மை ஆளுடைய வசவண்ணன் பணிந்தான்.

O உருவகம்.

நின் அன்பினைக் காணவே வந்தேன் என்று அல்லமர் கூறல்

53. அருள் ஞான வள்ளலாகிய அல்லமதேவன் வசவண்ணனது பக்குவ நிலை கண்டு, "நான் பசி தணிப்பான் வந்தவன் அல்லன்; பொருள் ஈட்டுதற்காகவும் படர்கின்ற காமத்தைத் தணிப்பதற்கும் வந்தவன் அல்லன், கசியும் நினது மனத்தன்பு காணவே வந்தேன்'' என்று பாராட்டிப் புகழ் மலிந்த சிவனடியார் அனைவரும் மகிழ, அவனை எடுத்து மார்புறத் தழுவினான்.

வசவண்ணரின் பாராட்டும் பணிவும்

54. ''உலகை அறியும் கண் போல் உயிர்கள் நுண்மை நிலை இப்படிப் பட்டதெனக் கண்டு அறியக் கதிரவன் போல் காட்டுகின்ற பெருமானே! போகங்களை நுகருபவன் யானாக இருந்தும், உயிர்கட்கு இன்ப நுகர்ச்சிகளை உண்பிக்கும் உனக்கு ஊட்டுவேன் என்று யான் எழுந்தபடியால், எண்ணும் போது, என்போல் அறிவிலார் இல்லை இல்லை'' என்றனன், பக்திவடிவமான வசவண்ணன். அதன் பின் பண்போடு அல்லமனுக்கு எதிர் நின்றான்.

O உணர்தல் கண்ணின் செயல், விளக்குதல் கதிரவன் செயல். ஞானம் இவ்விரு தன்மையும் உடையது.

யாரைப் புகழ்வோம் என்று அடியார்கள் மிக்க மகிழ்வுடன் கூறல்

55. ''செம்மை நெறியுடைய வசவண்ணனைப் புகழ்வமோ? கற்பனை கடந்த அல்லமதேவனைப் புகழ்வமோ? இவ்விதம் அல்லாமல் இவர்களை விழியாற் காண்பதற்குத் தவம் செய்து இவ்வுடலைப் பெற்ற நம்மை நாமே புகழ்வமோ?'' என்று சிவனடியார் சொல்லி நின்றனர்.

அடியார்கள் உணவு உண்ண அழைத்து வருமாறு அல்லமர் கூறல்

56. அன்பு கொண்ட வசவண்ணனது முகத்தைப் பார்த்து,

''பசித்தார் என்று நீ வருந்த உன்னை விட்டு நீங்கிய அந்த அடியார்களை மலை போன்ற உன் மாளிகைக்கு உணவுண்ண வணங்கி அழைத்துக் கொண்டு வா'' என்று அறிவின்ப வடிவான அல்லம தேவன் சொல்ல, விரைந்து விடை கொண்டு எழுந்து, அன்பு வெள்ளமாம் வசவண்ணன் அடியாரிடத்திற் சென்றனன்.

**அல்லமருக்குச் செய்த பணிவிடை அடியார்களிடத்தில் பொருந்தி யிருத்தலை வசவண்ணர் காணுதல்**

57. அங்ஙனம் சென்ற வசவண்ணன், அருட் குரவனாகிய அல்லம தேவனின் திருமேனியில் தான் அங்கே அணிந்த மணமுள்ள மலர்களும் சந்தனமும் உடலில் விளங்கவும் வயிற்றின் மடிப்பு நீங்கி, தின்றல் முதலாகியவற்றால் கறி மணக்க ஏப்பம் விட்டு முகமலர்ந்து கொன்றை அணிந்த சடையை உடைய சிவனின் அடியார் கூட்டங்கள் இருக்கக் கண்டனன்.

**அடியார்களை உண்ண அழைக்க அவர்கள் வயிறு நிரம்பப் பெற்றோம் எனல்**

58. சென்று கண்ட வசவண்ணன் அடியார்களை வணங்கி, ''கடையேன் செய்த பிழையெல்லாம் நீங்கள் வந்து உண்டு பொறுத்துக் கொள்ளுங்கள். வாருங்கள்'' என்று அழைக்க, உள்ளம் களிப்புற்று ஆங்கு இருந்த தொண்டர்கள், ''வசவண்ணனே, நின் பெருமை சொல்லற்கு எளிதோ? முன்பு போலே, ஆனால் வாயும் கையும் உண்டலாகிய தொழிலைச் செய்யாமல், இன்றும் உண்டனம்'' என்று,

**அல்லமர் உண்ண எங்களுக்கு உணவிட்ட நின் புகழ் பெரிது எனல்**

59. ''தேவர்கள் உண்ணுதற் பொருட்டுச் செந்தீ முகத்தில் அவியுணவு இடுதல் போல, நீங்காத யாங்கள் அனைவரும் உண்ண அல்லம தேவனின் நாவின்கண் பொருந்த விருந்திட்ட உன்னை ஒரு நாவோ புகழும் தன்மை யுடையது?'' என்று உயிரனைய வசவண்ணன் புகழைச் சிவனடியார்கள் சொல்லித் துதித்து,

O உவமையணி.

சிவயோகி உண்பது எல்லா உயிரும் உண்டதாகும் என்று அல்லமர் உணர்த்தினார் எனல்

60. ''உலகில் ஒப்பற்ற சிவயோகி உண்டது அசைவன அசைவற்றன ஆக உள்ள அளவற்ற உயிர்கள் எல்லாமும் உண்டதாகும் என்று மறை நூல் கூறும். அங்ஙனம் திகழும் அந்தக் கூற்றினைக் கண் கூடாக இன்று இங்கு உணர, கலகம் செய்யும் இருவினைகளையும் தீர்க்கும் அருட் கண்ணனாகிய விளங்கும் அல்லம தேவன் உணர்த்தினான்.

அல்லமருக்குச் செய்தன யாவும் எமக்குச் செய்தன ஆகும் எனல்

61. ''ஆதலால் அந்த அல்லமனை உண்ணச் செய்தல் எங்களை எல்லாம் அருந்தச் செய்தலே ஆகும். அவன் திருத் தாள் பணிதல் எங்களை வணங்கிய தாகும். எஞ்ஞான்றும் பேதம் என்பது இல்லை. நல்ல வசவண்ணப் பெயரினோய், நீ செல்க'' என்று, உமையவள் தழுவக் குழைந்த தோள் களை உடைய வள்ளல் சிவனாரின் அடியார்கள் கூற, அவர்களை வணங்கி,

வசவண்ணர், அடியார் நிலைபற்றி அல்லமரிடம் வந்து தெரிவித்தல்

62. அவ்விடத்தினின்று மீண்டு வந்து வசவண்ணன், அல்லம தேவனின் மென்பூங் கமலம் போன்ற அடிகளை இறைஞ்சி ''என்னை ஆட் கொண்ட இறைவனின் அடியார் கள், தாய் உண்ட உணவினைக் கருப்பையில் இருக்கும் மகவும் உண்ணுதல் போல், எந்தையாகிய நீ உண்ட எல்லா வற்றையும் உண்டு, நீ புனைந்த மலரும் புனைந்து மகிழ்வு பூண்டு இருந்தனர்'' என்றான்.

O உவமையணி

அல்லமர் நிறைவுடையவர் எனப் பெரியோர் மகிழ்தல்

63. பாண்டியன் அடித்த அடியைத் தாங்கிய நிலைத்த உயிர்களின் தன்மை போல், முடிவில்லாத புகழைக் கங்கண மாக உடைய வசவண்ணன் இட்ட அடிசில் உண்டு பசி

ஆறியிருந்தன அடியார்குழாங்கள் எல்லாம்; ஆகவே ''அல்ல மன் பூரணன் என்று சொல்லுகின்ற வாக்கு, மெய் மெய்'' என்று கூறி உலகம் களிப்புற்றது.

O பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடற் குறிப்பு உவமை.

அல்லமர் வசவண்ணருக்கு மெய்ப் பொருளை உணர்த்த எண்ணுதல்

64. இவ்வாறு உணவு உட்கொண்டு அமைதியாக இருக்கும் எங்கள் பரம யோகியாகிய அல்லமன், ஐம்புலப் பகை வென்ற திறம் மிக்க வசவண்ணனை மகிழ்ந்து, சைவ ஆகமமும் நான் மறையும் சாற்றும் பொருளை உணர்த்துதற்குத் தன் செவ் விய வாய் திறக்கத் திருவுள்ளம் கொண்டு தனியாக வீற்றிருந் தான்.

O

# 24. மனோலய கதி

கதைக் குறிப்பு: கவிஞர் கூற்று

1. நன்மை நல்கும் அல்லம தேவன், ''மயங்குதல் இன்றி மன ஒடுக்கம் (மனோ நாசம்) அடைந்தால் வெற்றி தரும் முத்தி கிடைக்கும்'' என்று விளங்குமாறு இயம்பிய வரலாற்றை யாம் சொல்லுதும்.

அல்லமர் எண்ணம்

2. அடியார்களின் பசி தணிதற்குத் தான் உண்ணுகின்ற ஐயன் அல்லமன், மெய்ப் பொருளை வசவண்ணனுக்கு அருளும் எண்ணத்தில் இருக்க, அவ் விடத்து அன்புடன் அகம் குழைகின்ற அறிவு மிக்க வசவண்ணன் விளம்புவான்:

வசவண்ணரின் வேண்டுகோள்

3. ''விருப்பு வெறுப்பே வடிவாயுள்ள விடயத்தோடு கூடி நிற்கின்ற மயக்க மயமான உலகம் என்பதைத் தவிரப் பரப்

பிரம்மத்தின் உண்மை நிலையைப் பார்க்கின்ற பார்வையை எனக்குத் தெரிவிக்க வேண்டும்''என்று உரைத்துத் துதித்தான்.

### அல்லமர் மகிழ்ச்சி

4. அண்ணல் அல்லமன் களிப்புற்று, அருள் நந்தியாகிய வசவண்ணன் மண்ணுலகு என்னும பந்தபாசங்களினின்றும் விடுபட்டு அறிவுக் கண் அடைவான் வேண்டி வினவினான் என்று உணர்ந்து அந்தப் புண்ணியனைப் பார்த்துச் சொல்லுகின்றான் :

### அண்ணல் கூறும் உண்மைகள் (15)
### பற்றுள்ள மட்டும் ஞானம் வராது

5. ''யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் இருக்குங் காறும் மெய்யறிவை ஒருவன் அடையான். அந்த மெய்யறிவை ஒருவன் அடையானாகில், தான் நிலையாத சகம் காணப்படும். இதனால் மாசற்ற சிவம் விளங்காது.

O யான் எனது என்னும் செருக்கு அறுத்தலைத் திருக்குறள் முதற்கொண்டு எல்லாத் தெய்விக நூல்களும் முதன்மையாக வலியுறுத்துகின்றன.

### மனம் அழிய வேண்டும்

6. ''காற்றாடி என்று சொல்லுமாறு விடாது அலைகின்ற மனம், பிறந்திறவாத பெரிய பிரம்மத்தில் அழிந்தால் யான் எனது என்னும் அகந்தை மறைந்திடும். இம் முறையன்றி வேறு எவ்வாற்றானும் மறையுமோ?

### இருட்டினால் கதிரவனை அடைய நினைத்தல் பிழை

7. "யான் இதனைச் செய்வேன்; அதற்குக் கைம் மாறாக மற்றவர்கள் எனக்கு இதனைச் செய்வார்கள் என்று கருதும் மனத்தால், மேலே நிகழும் விடுதலை (முத்தி)யை விரும்புதல், இருட்டினை உதவியாகக் கொண்டு சூரியனை அடைய வேண்டும் என்று எண்ணுகிற ஆசையை ஒக்கும்.

O இல்பொருள் உவமை யணி.

இருவினை இல்லை என்றால் பிறப்பும் இல்லை

8. ''யான் என்று அல்லதைக் கொள்ளுதலால் நல்வினைகள் தீவினைகள் தாமே வந்து விளையும்.' இருவினைகளால் இன்ப துன்பங்கள் தாமே வந்து விளையும். சைதன்யம் ஆகிய மெய்யறிவைத் தவிர யான் என்று கொள்ளுவதற்கு வேறில்லை என்பதை உணர்ந்தால் இருவினைகள் விளைதற்கு இடமில்லை. இருவினைகள் உண்டாதற்கு இடம் இல்லை எனில் பிறவிகளும் இல்லை.

மனத்தை அடக்க மனம் துணை

9. ''தூய்மையில்லாத மனத்தை அடக்கத் தூய மனம் துணைக் கருவியாகும். வேறு ஒரு துணைக் கருவி கிடையாது. அதனை உறுதியாகப் பெற்றான் ஆயின் ஒருவன் தனிச் சிவமே ஒரு தானாக வாழ்ந்து கொண்டிருப்பன். அவன் நிலவுலகில் பிறந்து இறந்து கீழ் மேலாக உழன்று கொண்டிருக்க மாட்டான்.

மனத்தை அடக்கியவன் பரம்பொருள் ஆவான்

10. ''அடங்காது மதயானை போல் உழலும் மனத்தைத் தன்வயப் படுத்தில், எல்லாவற்றிற்கும் முதற்காரணமான மாயை என்பதை வேரோடு களைந்து ஒரு காலத்தும் விட்டு நீங்காத பரிபூரணமாக நிறைந்துள்ள ஞானத்தை அடைந்து, மறைகள் கூறும் அரிய பரம்பொருள் ஆவன்.

ஒருங்கு நெஞ்சம் வேண்டும்

11. ''விடயம் உணர, பல பொருள்களையும் பற்றும் விரிந்த நெஞ்சம் கருவியாகும். தன்னை உணர்தற்கு அங்ஙனம் விரிந்து சிதையாத, ஒன்றுபட்ட நெஞ்சம் கருவியாகும். ஒன்றுபடாது சிதறிய மனம் உடையவனைப் பிறவி நீங்காது. ஒருங்கு நெஞ்சம் உடையவனைப் பிறவி வந்து அணுகாது என்று உணர்க.

மனந்தூயோன் பிரம்மம் ஆகிறான்

12. ''அந்தக் கரண சுத்தியே (மனம் தூய்மையே) அறிவை (ஆன்மாவை) அறிதற்குச் சாதனம். அங்ஙனம்

அந்தக் கரணம் சுத்தியாதற்குக் கருமம் செய்தலை வழியாகக் காட்டும் வேதங்கள். அந்தக் கரண சுத்தி என்பது அவா அற்றிருத்தலே. அங்ஙனம் அவா அற்றிருத்தலால் பிரம்மத்தைத் தப்பாது அடைகிறான்.

### ஆசை அறுவோன் சிவனாதல் திண்ணம்

13. ''அவா ஒழிதல் வீட்டின்பத்தை நேரே அடையக் காரணமாகும். அங்ஙனம் ஆசையை அறுக்காமல் பல நூல்களை ஆராய்ந்து தெளிந்தாலும் பயன் இல்லை. அவா அறுத்தோன் சிவன் ஆதல் திண்ணம் என்று தெரிந்திருந்தும் மானிடர் ஆசையில் உழல்தல் என்ன உறுதி கருதியோ, தெரியவில்லை.

### பற்றற்றுப் பற்றுமனம் பிரகாசிக்கும்

14. ''குற்றம் அற்ற மனத்தின்கண் அன்றி அறிவு உதயமாகாது. களங்கமற்ற கண்ணாடியிடத்து அல்லாது முகம் காணப் படுமோ? பாச நீங்கு பரஞ்சுடரை நினைக்கத் தக்க சுத்த நினைவால் பற்றற்றுப் பற்றுகிற மனம், காசம் என்னும் நோயினின்று நீங்கிய கண்களைப் போல் தன்னை உள்ளவாறு காணப் பிரகாசிக்கும்.

O உவமைகள். காசம் - கண்ணின் பார்வையை மறைக்கும் ஒரு நோய்.

### நானே சிவம் என்று எண்ணியவன் சிவமே ஆவன்

15. ''நான் வானம் அல்லேன், காற்றும் அல்லேன் நெருப்பும் நீரும் அல்லேன், மண் அல்லேன், ஞானம் அல்லேன், இருவினைகளில் ஒன்றும் அல்லேன் ஆதலால் நானே சிவம் என்று உறுதியுற எண்ணினோன் மாசற்ற சிவமே ஆவன். இவ்வாறு சிந்தியாதவன் இழிவெலாம் உடைய உடம்பு எடுத்து எப்பொழுதும் சுழன்று கொண்டிருப்பான்.

O 'சிவன் நான் சிவன் நான்' என்று ஆதி சங்கரர் உளங் களித்துப் பாடியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

### தன்னைச் சிவம் என உணராதோன் நிலை

16. ''தனது உண்மை நிலையே சிவம் என்று அறிந்தவன் யாரோ அவன் தன் உண்மையை உள்ளவாறு உணர்ந் தவன் எனப்படுவான். தன்னைச் சிவம் என்று அறியாதவன் யாவனோ அவன் தனது உண்மை நிலையை எப்போதும் அறிய மாட்டான். தனது உண்மை நிலையைக் கண்டு தானே சிவம் என்று அறிந்த அக் கணத்தில் தானே பாசப்பிறவி நீப்பான். தன்னைச் சிவம் என்று அறியாதா னுக்குப் பிறப்பே துணையாக வரும்.

### அது நீ என்பது அத்துவிதம்

17. ''அறிவாகிய தன்னைப் பேதமாக (உபாதிவடிவாக)க் காண்டல் உலகத்தைப் போல் (திரிசியம்) காணப்பட்டதாம்° அறிவை உபாதி என்னும் பேதம் நீங்க, அறிவே சிவம் என்று அறிவோன் ஞானி ஒருவனே என்னக் கருதி மறை நூல் "'அது நீ ஆனாய்'' (தத்துவமசி) என்று அத்து விதத்தையே (இரண்டு இல்லை, ஒன்றே எனல்) போதிக்கும். இதனை அறியாமல் கண்டபடி ஐக்கிய நிலையைக் கூறுதல் மறையின் கருத்து அன்று.

O தத்துவமசி என்பதற்கு 'அது நீ ஆனாய்' என்பது சொற்பொருள், அத்துவிதம் (அத்வைதம்) என்பது கருத்துப் பொருள்.

O வீர சைவம், அத்துவித முடிபினது; ஆயினும் சைவ சித்தாந்தத்தை அது குறைகூறுவது கிடையாது.

### தூய நெஞ்சுடையார்க்குச் சிவமாதல் தோன்றும்

18. ''தூய்தாகிய (பாசம் கடந்த) நெஞ்சு உடையார்க்குத் தாமே சிவமாகத் தோன்றும். தீதாகிய (மல சகிதமான) நெஞ்சு உடையார்க்குத் தெளிவு பெற, அபேத நிலையை மாறின்றி வேதாகமங்கள் விளம்பினாலும் பக்குவமற்ற அவர்கட்கு விளங்காது. தாம் வேறு சிவம் வேறு என்னும் பேத வாதத்தால் பயனின்றி அழிவர். மாயை மயக்க, அதனால் மயங்கும் மதி உடையவர்கள் அவர்கள்.

யோகியைத் தேவரும் துதிப்பர்

19. ''மனத்தைச் சோகம் பாவனை என்னும் நிலையில் கலங்காது நிற்க நிறுத்தி, விடயங்கள் ஐந்தையும் துறவாமல் துறந்த ஒரு சிவ யோகியினுடைய அடியிணையில் திருமால் முதலிய தேவர்களின் உள்ளம் இன்பத் துயில் புரியும். அங்ஙன மாகிய சிவயோகியைத் துதித்து வணங்காது நிற்கும் முனி வர்கள் இல்லை என்று நான்கு மறைகளும் இயம்புகின்றன''.

O சோகம் பாவனை : சோ-அவனே, அகம்-நான், பாவனை-ஐக்கிய உணர்வு. அவனே நான், நானே அவன் என்று இரண்டற நிற்றல்.

O வீட்டில் இருந்த முருகப்பனே, கடைத் தெருவிலும் இருப் பான். இருவரும் வேறல்லர்; ஒரே ஆளே. அவ்வாறே விழிப் பிற் சகலனாகவும் உறக்கத்தில் கேவலன் (தனிப் பொருள்) ஆகவும் இருப்போன் ஆன்மா, ஒன்றே. சோகம் பாவனை என் பது இதனை உணர்த்தும்.

வசவண்ணர் முதலியோர் அல்லமரைப் பணிதல்

20. கருணை பொழிகின்ற விழிகளை உடைய எம் கோமான் அல்லமன் இங்ஙனம் உண்மையை இனிது உணர்த்த அங்கு நின்ற வசவண்ணனது மனம் நெருப்பிற் பட்ட மெழுகென நெகிழ்ந்துருகிச் சென்று அவன் அல்லமனின் திருவடிகளில் வணங்கினன்.

பின்னர் சென்ன வசவன் முதலிய நெருங்கும் அடியார் கள், ''நாங்கள் துன்பக் கடலினின்று உய்ந்தோம்" என்று துதித்து வணங்கினார்கள்.

அல்லமர் பல இடத்தும் செல்லுதல்

21. அருளால் தனது மெய்வடிவை இன்னணம் உணர்த்தி எழுந்தருளி இருந்த ஞான இயல் வீரன், வீர சைவ மேலோன் ஆகிய அல்லம தேவன் இந்த உலகில், பிறவிக் கடலினின்று உய்யும்படி நினைந்து மெய்ப் பொருள் உணரும் பக்குவம் மேலிடத் தன்னை எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருக்கும் அடியார்களுக்கு உபதேசம் செய்ய வேண்டி அதற்கு இயைந்த வடிவத்தோடு சென்று அருள் புரியத் தக்க செயல் செய்து எங்கும் உலாவினான். O

# 25. மான்மிய கதி

O விண்ணுலகில் தொடங்கி மண்ணுலகில் நடந்த கதை மறுபடி விண்ணுலகு சென்று நிறைவு பெறுகிறது. அல்லமர் அருள் புரிந்து வருகிறார் என்ற செய்தியோடு கதை முடிவுறுகிறது. நூல் எழுந்த காலம், நூற் பயன், வாழ்த்து முதலியன அடங்கிய முடிவுரையும் இந்தப் பகுதியில் அமைந்துள்ளது. மான்மியம் : பெருமை

கதைக் குறிப்பு : கவிஞர் கூற்று

1. இடம் மிகுந்த இவ் வுலகத்தில் உள்ள சிறந்தோர்க்கெல்லாம், குற்றமிலா அல்லம தேவன் செய்த நன்மையைக் கயிலையில் எழுந்தருளியுள்ள நுதல் விழிக் கடவுளான சிவன் தன் பாகமாக உள்ள மயில் போலும் இயலுடைய இறைவியிடம் சொல்லும் தன்மையைக் கூறுவாம்.

அல்லமரின் தொழில்

2. அங்கே அருள் நந்தியாகிய வசவண்ணன் முதலிய மாதவர் பேரின்ப நேயத்துடன் இனிது இருக்க நிலை நிறுத்தி, அல்லம தேவன் மா இரு ஞாலத்தில் பரிபாகமுள்ள மானிடர்க்கு எல்லாம் தானே சென்று அருள் செய்யும் தொழிலைப் பூண்டிருக்கிறான்.

கயிலையில் இறைவி இறைவனிடம் கேட்டல்

3. இன்னணம் அல்லமன் பேருலகில் இருந்து வர, தனக்குத் தானே நிகர் ஆகிய கயிலை மலையில் சிங்கம் தாங்கிய பொன் ஆசனத்தின் மேல் அமர்ந்திருக்கும் இறைவனிடம் ஒளிமிக்க அணி புனைந்த தனங்களை உடைய உமையவள் விளம்பலானாள்:

நிலமிசை நந்தி முதலியோரின் செயல்கள் பற்றி வினாதல்

4. "அல்லமனின் அருள் பெறுதற்குச் சென்ற நந்தி தேவனோடு அளவில்லாத நினது (சிவ) கணங்களும் எனது

நற்கலை மென்மகளும் (சாத்துவிகக் குண மடந்தையும்) நிலவுலகில் செய்த காரியம் என்ன சொல்லுக'' என உமையவள் கேட்க, இறைவன் சொல்லினான்:

### நந்தி தேவரின் பூவுலகச் சிறப்பு

5. ''நந்தி, நல்ல வசவண்ணன் என்ற பெயர் கொண்டு, இருந்து, அளவில்லாத எம் அடியவரைப் பணிக்கு உரியவர் என்று ஆக்கி அவர்கள் விழைகின்ற பொருள்களைக் கொடுத்து சமணர் சிந்திக்கிடந்த (பரவியிருக்கிற) நிலத்தில் சிறப்புற்றான்

### சாத்துவிகக் கலை மடந்தை ஆசிரியனைத் தேடிப் போயினாள் எனல்

6. ''அறம் செய்யும் உன் கலையாகிய சத்துவ குணப் பெண் (அக்க மாதேவி) சென்று சிறந்துள உலகில் மாதேவி எனப் பெயர் பெற்று, மறம் செய்யும் மன்மதனது வலிமை அழியுமாறு செய்து, எல்லாப் பற்றையும் விட்டவளாக, ஞான குரவனைத் தேடிச் சென்றாள்.

### சிவ கணங்கள் மெய்ம்மை காணப் பல விடத்தும் தங்கினார்கள் எனல்

7. ''அடைந்த நம் கணத் தலைவர்களும் இடம் விரிந்த ஞாலத்தில் சென்று எம்மை (மெய்ம்மையை)க் காணும் பொருட்டு இயைந்த நல்வினைகள் பல்வகை புரிந்து, அவர்கள் தாங்கள் எண்ணிய பல நகர்களில் தங்கினார்கள்.

### பேரின்பத்தை அளிக்கும் வீர சைவத்தை அல்லமர் ஒளிரச் செய்தார் எனல்

8. ''அளப்பதற்கு அரிய நோன்பு உடையவர்களாக அவர்கள் இருந்துவர, கலங்குதல் இல்லாத நிலையினை உடைய தூயன் அல்லம தேவன், கொள்ளக் கொள்ளக் குறைவுபடாத பேரின்பத்தைக் கொள்ளை கொண்டு உண்ண உலகத்தில் வீர சைவத்தை ஒளி திகழுமாறு செய்தனன்.

### வீர சைவத்தில் அல்லமர் விருப்புடையவர் எனல்

9. ''மை தீட்டப் பெற்ற வரிகள் படர்ந்த கயல் நெடுங்கண் மடவரலே (உமாதேவியே), அவ்வவர் பிறவிப் பிணியை

நீக்கும் அல்லம தேவன், எல்லாச் சமயங்களுக்கும் இறைவனே என்றாலும் சைவ சமயத்திடம் நேயம் கொண்டவன், அதிலும் வீர சைவத்தில் விருப்பு உடையவன்'' என்று வள்ளல் (இறைவன்) விளம்பினான்.

வீர சைவம் எதனால் உயர்ந்தது எனல்

10. அதற்கு உமையவள், ''இமையவர் போற்றும் முக்கட் பிரானே, எவ் வகைச் சமயத்திற்கும் சைவம் மேல் ஆகியது எதனால்? அதிலும் வீர சைவம் சிறந்தது எதனால்? கூறுக'' என்று கேட்க, இறைவன் இயம்புவான்:

வீர சைவம் உயர்ந்தது என்பதற்குக் காரணம்

11. ''பருக்கைக் கற்களின் ஒலியால் சிலம்பு அரற்றும் அடி மலரும், தடங் கண்ணும் உடைய நல்லாய் (உமையவளே)! உரைக்கப்படும் சமயங்கள் யாவற்றுக்கும் முடிவான இடத்தைச் சைவம் வகிக்கிறது. அந்தச் சைவத்தின் மேலாய பாகத்தை வீர சைவம் ஏற்றிருக்கிறது. யாவர்க்கும் தெரிவிக்கும் காமியத் தவம் முதலியவற்றின் உச்சியில் வீர சைவம் விளங்கி நிற்பதைக் காண்பாயாக.

வீடு பேறு அடைதற்கு இறுதி நிலைப்படி வீர சைவமே எனல்

12. நறுந் தளிரை வருத்துகிற (அதனை விடத் தன் மென்மையாலும் வண்ணத்தாலும் சிறந்துள்ள) மேனியை உடைய நறுமலர்க் கொடி போன்றவளே! புறமான சமயங்களிற் புகுந்தாலும் பின்பின் அகச் சமயத்தை அடைந்து, அதன் பின், அறம் திகழும் சைவ சமயம் சார்ந்து அதன் சரியை கிரியை யோகம் ஆகியவற்றை நன்கு செயலாற்றிப் பின்பு, சிறப்புறு வீர சைவம் சேர்ந்தபின் விடுதியாகிய முத்தி கிடைக்கும்.

வேதாந்தமும் ஆகம முடிவும் ஒத்து இலங்குவது வீர சைவத்தில் எனல்

13. ''அரிய மறையின் முடிவும் சீர்சால் ஆகமத்தின் முடிவும் ஒத்து, முரண்பாடு இன்றி, பூரணமாக நிறைந்துள்ள பரம் பொருளை விளங்கும்படி காட்டித் (நிருவிகற்ப சமாதி நிலை)

தருகின்ற முறை வீர சைவம் ஆகும். அதனால் அது தலைமையானது. மறுவற்ற அந்த இருவகை (வேதம், சைவாகமம்) நூல்களும் (இந்தச் சுவ அனுபூதிக்குப்) பிரமாணம் ஆகும்.

ஒப்பற்ற தூய வழி வீர சைவம் எனல்

14. ''மாவடு போன்ற கண்களை உடைய மாதே! ஒவ்வொரு விடயத்திலும் உறுவதால் எய்தும் இனிய சுவையைப் பூரணமாக்கி எப்பொழுதும் எமது முன்னிலையில் படையல் செய்து அந்த எமது பிரசாதம் கொண்டு மிக்க கரும அனுட்டானங்களை நினையாமல் சலனமற்றிருக்கின்ற இந்தத் தூய சுவானுபூதி நிலை இந்த வீர சைவத்தினால் எய்தும் அல்லாமல் வேறாரு மார்க்கத்திலும் கிடைக்குமோ?

வீர சைவ அறிவினை அல்லமர் விளங்கச்செய்தார் எனல்

15. ''ஆதலால் வீர சைவத்தின்கண் எல்லாவற்றையும் அறியும் அறிவை, ஞான போதகாசிரியன் என்கின்ற ஒப்பில்லாத அல்லம தேவன், அழகிய மாதேவி என்னும் பெயருடையவளாகிய உன்னுடைய சாத்துவிகக் கலை மாதினுக்கும் மேன்மை பொருந்திய வசவண்ணன் முதலிய மெய்யடியார்கட்கும் விளங்கக் காட்டினன்.

அடியார்களின் பக்குவ நிலை கண்டு அல்லமர் ஆட்கொண்டார் எனல்

16. ''குரவ மலர் அணிந்த வார்குழல்!மடந்தையே! பக்குவ வேறுபாட்டினால் பேதமாகக் காணப்படும் மெய்ப் பொருளை ஏற்றற்கு உரிய பருவம் கண்டு, மாறு பாடு இல்லாத முனிவர்கள் யோகர் சித்தர்கள் முதலானோர்க்கு ஒப்பில்லாத அல்லமனாகிய புண்ணியன் அருளி ஆட் கொண்டான்'' என்று குன்ற வில்லியாகிய சிவன் உரைத்தான்,

இறைவியின் அகமகிழ்வு

17. உமையவள் உள்ளத்தில் மகிழ்வு பொங்க அல்லம தேவனது பெருமையைக் கேட்டு, ''மயக்கம் தந்து மனத்

தைக் கலங்க வைக்கும் மாயையை வென்றனன்; எனது உண்மை நிலையை நின் செவ்விய வாயினால் விளம்ப நான் அறிந்து கொண்டேன்'' என்று, முப்புரங்களின் வலியை அழித்த முக்கண் நாயகனை வணங்கினான்.

அல்லமர் வீடுபேறு வழங்கும் தொழிலில் நிற்றல்

18. அங்கு (கயிலையில்) உமையவளோடும் மூன்றாம் பிறையை யணிந்த செஞ்சடைப் பரமன் அல்லம தேவனின் பெருமையைக் கூறி இருந்தான்.

இங்கு நிலவுலகில் அருள் மேகம் என்னும் ஒப்பில்லாத எம் குரு குகேசன் ஆகிய அல்லம தேவன் சிறப்பமைந்த முத்தி யின்பம் வழங்குதற்குரிய தொழிலைச் செய்து நின்றான்.

பாகுபாடு இன்றி யாவர்க்கும் அல்லமர் அருள் புரிதல்

19. மூத்தோர் இளையோர் நோயர் இளைய மாதர் நல்ல தீத் தொழிலாளர் (வேள்வித் தீ வளர்க்கும் அந்தணர்) பொல் லாத் தீத் தொழிலாளர் (கொடியவர்) என்று வேற்றுமை கருதானாக யாவரிடத்தும் பரிவு கொண்டு அருள்மாரி பொழிந்து, தூய ஞான காரணனாகியும் குரு குகேசனாகியும் திகழும் அல்லம தேவன், காத்தனன்.

மாதவர் நெஞ்சம்தோறும் அல்லமர் வாழ்தல்

20. இவ் வண்ணம் அருட் பெருக்கால், இவர் உறவானவர் இவர் அயலானவர் என்று கொள்ளாமல் அன்னை போல் உயிர்கட்கு எல்லாம் ஆரருளை ஒருங்கு விளங்கச் செய்து என்னை ஆட்கொண்டு காக்கும் இணையடிகளை உடைய குரு குகேசன் ஆகிய அல்லம தேவன் நிலைபெற்ற மாதவத் தோரின் உள்ளமாகிய (தாமரை) மலர்தோறும் வாழ்கின்றனன்.

○ அல்லமர் என்றும் அருள் புரிந்தவாறு இருக்கிறார் என்பது முடிபு.

வாழ்த்தியல் : முடிவுரை
அல்லமரின் சரிதையை ஓதுவார் கேட்பார்
அடையும் பயன்கள்

21. நல்ல ஒளியைச் செய்யும் பகலவன் போல இருளாகிய மும்மலங்களையும் கெடுத்து ஒளி நல்கும் அல்லம தேவனது வரலாற்றை ஓதினால் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நல்லனவாகிய பயன் நான்கும் ஒருவன் பெறுவன். இதனைக் கேட்க வல்ல நல்ல வினை உள்ளவனும் அந்த நாற்பயனும் அவ்வாறே பெற்று வாழ்வன்.

O 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே' என்றனர் நன்னூலார். இந்த நூலால் அப் பயன் உறுதி-யாய்க் கிடைக்கும் என்பது ஆசிரியர் கருத்து.

மேலும் பல்வகைப் பேறும் கிடைக்கப் பெறுவர்

22. பழுதில்லாத இந்த இருபத்தைந்து கதிகளினால் நிரம்பிய காதையைக் கற்றவர் கூறக் கேட்டால், மதியிலார் மதிஞர் (அறிஞர்) ஆவர். மகவு இல்லாதவர் மகப்பேறு அடைவர். நிதியிலார் நிதி படைப்பர். ஒரு நிலையும் இல்லாதோர் நிலைத்து வாழ்வர். பதியிலார் (ஊரிலார், மணமாகாத மடந்தையர்) பதி (ஊர், கணவன்) பெறுவர்.

நூல் இயற்றப் பெற்ற காலம்

23. உலகில் உள்ள சாலி வாகன சகாப்தம் 1574 ஆவதாகிய கர ஆண்டு விடை (வைகாசி)த் திங்கள் ஞாயிற்றுக் கிழமையில் இந்தச் சீர்கெழும் அல்லம தேவன் திருவிளை-யாடற் காதையினைக் கருமை பொருந்திய மிடற்றினை உடைய இறைவனின் கருணையினால் இயம்பினான்.
O [கி. பி. 1652 ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது.]

இந் நூலைப் படிப்போர் இறைவன் ஆவர்

24. குற்றம் நீங்கிய அல்லமன் என்ற பெயர் உடைய வள்ளலின் வரலாற்றில் குற்றமிலாத செய்யுட்களை எல்லாம் அன்புடன் படிப்பவர்களைப் பழிப்பில்லாத மனிதர்

என்றா சொல்லுவது? யானைத் தோல் போர்த்த ஈசன் என்று கூறுவது அன்றிக் காரணம் வேறே என்ன உள்ளது? இல்லை. (அவர்கள் இறைவனே ஆவர் என்பதாம்).

புண்ணியர் முதலானோர் வாழ்க!

25. புண்ணியர் உலகில் வாழ்க! ஐம்புலன்களை அடக்கும் நோன்பு வாழ்க! பெண்ணொரு பாகன் பூசையைப் பேணி வாழும் அடியவர் வாழ்க! கண்ணுதற் கடவுளைச் சார்ந்த நிலை கலங்காத சைவம் (வீர சைவம்) வாழ்க! அண்ணல் அல்லமனது சிறப்பைக் கேட்கும் அன்பர்கள் வாழ்க!

ஒப்பற்ற நீறு வாழ்க!

26. ஒப்பற்ற திருநீறு வாழ்க! திருநீற்றை அணிவோர் வாழ்க! திருவளர்க்கும் (கழுத்தில் அணியும்) கண்டி வாழ்க! சிறந்த அஞ்சு எழுத்தும் வாழ்க! குரு அருள் வாழ்க! மெய்யைக் கூறும் நாவுடையோர் வாழ்க! அச்சம் தரும் பிறவி இனி வாராது செய்ய வல்ல மெய்யறிவாளர்கள் வாழ்க வாழ்க!

எல்லோரும் வாழ்க!

27. அல்லம தேவனது வரலாறு வாய்ந்த செய்யுட்களில் ஒரு செய்யுள் கற்க வல்லவர்களும் பொருள் சொல்ல வல்ல வர்களும் உரை எழுத வல்லவர்களும் செல்வத்துள் செல்வம் இது என்று அன்பால் செவி நிரம்பக் கேட்க வல்லவர்களும் ஆகிய எல்லோரும் உலகத்தில் என்றென்றும் வாழ்ந்திடுக.

O

ஆகக் கதி 25. செய்யுள் 1158

# குறிப்புகள்

## அ. கவிஞரின் படைப்புகள்

''இயற்கை எழிலோடு புனைவும் இயைந்த பொற்கொடி ஒருத்தியைக் கண்ட இளைஞர் நெஞ்சம் மயங்குவது போலப் புலவர் நெஞ்சம் மயக்கம் கொள்ளும் இனிய தமிழ்ப் பாமாலையை இறைவனுக்குச் சாத்தும் சிவப்பிரகாசன்'' என்னும் மதிப்புரைக் கேற்பக் கவிதை பாடிய வலவர் சிவப் பிரகாசர். கற்பனை வளத்தோடு கடவுளன்பும், உணர்ச்சிக் குழைவோடு அறிவு நுட்பமும், மரபின் திண்மையோடு புதுமைப் பொலிவும் இழையப் பாடிய கவிஞானி அவர். சொல்லெல்லாம் மாணிக்கச் சொல்லாகச் செய்தவர்; சுவை எல்லாம் தேன் சிந்தப் பெய்தவர்.

அந்த அதிசய மனிதர் வாழ்ந்த ஆண்டுகள் முப்பத்திரண்டு; படைத்த ஏடுகள் முப்பத்து நான்கு. அவை:

நன்னெறி O நால்வர் நான் மணி மாலை O திரு வெங்கைக் கோவை, உலா, கலம்பகம் O பழமலை அந்தாதி, பிட்சாடண நவ மணி மாலை, பெரிய நாயகி யம்மை ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித் துறை O சிவ ஞான பாலைய சுவாமிகள் மீது நெஞ்சு விடு தூது, திருப்பள்ளி யெழுச்சி, பிள்ளைத் தமிழ், கலம்பகம், தாலாட்டு O திருக் கூவப் புராணம், சீகாளத்திப் புராணம்: கண்ணப்பர் நக்கீரர் சருக்கங்கள் O சோண சைல மாலை O திருச் செந்தூர் நிரோட்டக யமக அந்தாதி O சிவ நாம மகிமை O பிரபு லிங்க லீலை O இட்ட லிங்க அபிடேக மாலை, நெடுங் கழி நெடில், குறுங்கழி நெடில், கைத்தல மாலை O வேதாந்த சூடாமணி O தருக்க பரிபாடை O சிவப் பிரகாச விகாசம், சதமணி மாலை O சித்தாந்த சிகாமணி O நிரஞ்சன மாலை O ஏசு மத நிராகர ணம் O தனிப் பாடல்கள் O மற்றும் கிடைக்கப் பெறாதன; திரு வெங்கை அலங்காரம், கொச்சகக் கலிப்பா, தல வெண்பா.

## ஆ. வாழ்க்கைக் குறிப்பு

பிறரை வருத்தித் தாமும் வருந்திப் பின் கொடுங் கூற்றுக்கு இரையென மாயும் வேடிக்கை மனிதர் பலர்; தாமும் இன்புற்று வையமெலாம் இன்புற வாழ்ந்து கூற்றை வெல்லும் அதிசய மனிதர் சிலர். அச் சிலருள் ஒருவர் சிவப் பிரகாசர்.

இன்பமும் துன்பமும் சேர்ந்ததே உலக வாழ்வு. இன்பம் இடையறாது ஈண்ட, துன்பத்துள் துன்பமாயிருப்பதைத் தொலைக்கும் துறவும் தொண்டும் இந் நாட்டில் தொன்று தொட்டு ஆன்றோர் கடைப்பிடித்து வரும் குறிக்கோள் நெறியாகும். வாழையடி வாழையென வரும் அந்த அறிவருள் நெறியில் வந்த வல்லாளருள் ஒருவர் சிவப் பிரகாசர்.

வாழ்வு சிறிது வளர்கலை பெரிது என்பது முதுமொழி. சிறிதாகிய வாழ்நாளிலும் சிலவாகிய ஆண்டுகளே வாழ்ந்து பெருஞ்சுடர்க் கலை விளக்காகத் திகழ்ந்தவர் சிவப்பிரகாசர்.

காலம், பதினேழாம் நூற்றாண்டு. தோன்றிய ஊர், காஞ்சி. தந்தை, குமாரசாமிப் பண்டாரம் [தேசிகர்]. தொண்டை மண்டலச் சைவர்களுக்கு ஆசானாக இருந்த அவர் திருவண்ணாமலை சென்ற போது நிகழ்ந்த ஒரு குறிப்பால் வீர சைவ சமயத்துக்குச் சென்றார். அவருக்கு ஆண் மக்கள் மூவர். மகள் ஒருத்தி. மைந்தர் மூவரும் கவிவலவர்.

இளமையில் தந்தையின் பிரிவுக்கு ஆளான சிவப் பிரகாசர் தாமும் பயின்று தம் உடன் பிறந்தாரையும் கல்வி பயிலத் துணை செய்தார். அவர்கள் இல்லறம் ஏற்க இவர் துறவு பூண்டார்.

உயர் கல்வி நாடித் தெற்கே நெல்லையை நோக்கி வருகையில் துறைமங்கலத்தில் தங்கினார். அவ்வூர்த் தலை வரும் அடியார்மாட்டு அன்புடையரும் வீர சைவரும் ஆகிய அண்ணாமலை ரெட்டியார் சிவப் பிரகாசரின் கல்வி ஒழுக்கங் களால் அவர்க்கு அன்பரானார்; இறுதி வரை அடியாராக விளங்கினார்.

நெல்லையில் சின்னாள் தங்கி இலக்கணப் புலமை மிக்குத் தில்லை திரும்பினார் சிவப்பிரகாசர். அதற்கு முன் தன் ஆசானுக்குக் காணிக்கையாக, அவரைப் பழிப்பதைத் தன் தொழிலாகக் கொண்டிருந்த திருச்செந்தூரார் ஒருவரைத் தம் கவிதையாற்றலால் வென்று பணியாள் ஆக்கினார். பின் பொம்மபுரம் போகும் அருள் கிடைத்தது. சிவஞான பாலை யரை அருள் ஆசானாகப் பெற்றார் சிவப் பிரகாசர்,

''இனிய தமிழ்ச் சொல் மாலை ஈசனுக்குச் சாத்தும் பிறவியே'' தமக்கு வேண்டும் என்று விழைந்தது போன்றே இறுதி வரை நிலையில் திரியாது ஒரு பெரிய இயங்கு சக்தி யாக விளங்கினார்.

புதுவையை அடுத்த நல்லாற்றூர் மடத்தில் சிவப் பிரகாசர் பிறவாப் பெருநிலை அடைந்தார்: அறவோர்க்கும் துறவோர்க் கும் அருங்கலை வல்லார்க்கும் அஃதொரு திருத்தலமாக அமைந்துளது.

தமிழோடு வடமொழி தெலுங்கு கன்னடம் ஆகிய மொழி களிலும் புலமை பெற்றிருந்தார் சிவப் பிரகாசர்

சிறுவர் முதல் மெய்யறிவாளர் வரை பலர்க்கும் அறம் பொருளின்ப வீடு பயக்கும் நூல்கள் தந்தார் அவர்.

போலி மானிடரைப் பாடாத இயல்பினரான அவர் தம் அன்பரான அண்ணாமலை ரெட்டியார்க்கும் தம் பின் பிறந்து முன் மறைந்த தம்பிக்கும் தம் அருளாசானுக்கும் தம் பாடலால் நிலைபேறு அளித்தார்.

இவரது புலமைத் திறத்தைப் பற்றி இவரிடம் 'குரு பக்தி' கொண்ட மாணவத் த ம் பி பாடிய ஒரு பாட்டு உண்மையான ஒரு திறனாய்வுக் கூற்றாகப் பொலிகின்றது.

எவன் ஒரு நொடியில் எண்ணாது
இசைத்ததோர் செய்யுள் மற்றைக்
கவிகள் பன்னாள் நினைந்த
காப்பியங் கட்கும் மேலாம்
எவனிறை முதல் நா மத்தோடு
இயைதரு விளக்கப் பேரோன்
அவனொடு பிறப்புஎழக்கு ஈண்டு
அளித்தலால் வாழ்க மன்னோ
[இறை நாமம்-சிவம்; விளக்கம்-பிரகாசம்; பேரோன் சிவப்பிரகாசம்]

சமயநிலைக் காப்பியம் ஆயினும் பிரபு லிங்க லீலை எல்லாம் படித்து இன்புறுதற்கான கற்பனைப் பெருங்காட்சியகமாகவும் மெய்யறிவுப் பகலொளியாகவும் விளங்குகிறது. ஆகவே அதனை இயற்றிய ஆசானை அதன் சிறப்புப் பாயிரத்தில் அகத்தியர் என்று குறிப்பிட்டிருப்பது தவப் பொருத்தம் என்றே கூற வேண்டும்.

அவர் இன்னோர் அகத்தியர் என்பது உரியதொரு பாராட்டேயாகும். O

**ஆசிரியரின் நூல்கள்**

**அறிமுகம்**

நேருவின் "இந்தியாவைக் கண்டு பிடித்தல்"

சில ஒப்பியல் ஆய்வேடுகள் - ஓர் அறிமுகம்

**கலைச் சொல் விளக்கம்**

ஆங்கில இலக்கியக் கலைச் சொற்கள்

**வசனம்**

பிரபு லிங்க லீலை வசனம்

கைவல்லிய நவநீத வசனம்

**கவிதை**

மறை மலை யடிகள் பிள்ளைத் தமிழ்

**ஆய்வு**

அங்கத நாடகங்கள் - ஓர் ஆய்வு